# இராஜ ராஜ சோழன்

சரித்திர நாடகம்

அரு. ராமநாதன்

எழுதியது

பிரேமா



பிரசுரம்

சென்னை-24



விலை ரூ. 2-4-0

பிரேமா பிரசுரம்—37

முதற் பதிப்பு : செப்டம்பர், 1955



அச்சிட்டோர் :

பிரேமா ஆர்ட் பிரிண்டர்ஸ்,

சென்னை-24

# முகவுரை

கலைஞர் திரு. டி. கே. சண்முகம்

தமிழ் மொழிக்கும், தமிழ் இனத்திற்கும், தமிழ்ப் பண்புக்கும், தமிழ் நாட்டுக்கும் பெருமை தரக்கூடிய சரித்திர நாடகங்களை நடிக்க எடுத்துக்கொள்ளும் போதெல்லாம் எங்கள் உள்ளத்திலே அச்சம் குடி கொண்டிருக்கும். நாடகங்கள் அரங்கேறி அறிஞர்களின் பாராட்டைப் பெறும்போது ஒரு புதிய உற்சாகமும் பெருமிதமும் ஏற்படுவதுண்டு. ஔவையார், இமயத்தில் நாம், தமிழ்ச் செல்வம் ஆகிய நாடகங்களை அரங்கேற்றியபோது இந்த அனுபவம் ஏற்பட்டது. இராஜராஜ சோழன் அரங்கேறியபோது மேற்குறிப்பிட்ட உணர்ச்சிகள் சற்று அதிகமாகவே ஏற்பட்டன. தமிழரின் பெருமைக்குரிய வரலாற்று நிகழ்ச்சிகள், நாடகம் சரியாக உருவாகாமல் நடிப்பவர்களின் திறமைக் குறைவால் சிறுமைக்குரியதாகி விடக்கூடாதே என்ற எண்ணம்தான் அச்சத்திற்குக் காரணம். நாடகத்திற்குத் தமிழ் மக்களிடமிருந்து அமோகமான வரவேற்புக் கிடைத்தபோது எங்கள் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. இராஜராஜ சோழன் நாடகத்தை நடிக்கும் நற்பேறு எங்களுக்குக் கிடைத்தமைக்காக இப்போது நாங்கள் மிகவும் பெருமையடைகிறோம்.

1-12-44-ல் திருச்சிராப்பள்ளியில் எங்கள் குழு நாடகம் நடித்தபோது புதிய நாடகங்கள் புனைய எழுத்தாளர்களைத் தூண்டும் முறையில் ஒரு பரிசுத் திட்டம் வைத்தோம். 1-6-45-ல் முடிவுபெற்ற அந்தத் 'தமிழ் நாடகப்' பரிசுக்குரியதாக இரண்டு நாடகங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டன. அவற்றில் ஒன்று இராஜராஜ சோழன். இந்நாடகம் திரு. அரு. இராமநாதன் அவர்களின் முதல் முயற்சி என்பதை அறிந்தபோது எங்களுக்குப் பெரு மகிழ்ச்சி ஏற்பட்டது.

1945-ல் தமிழ் நாடகப் பரிசைப்பெற்ற இராஜராஜ சோழன் 1955 - ஜூலை முதல் தேதி திருநெல்வேலியில் அரங்கேற்றப் பட்டது. இடையே பத்தாண்டுகள் ஓடிவிட்டன. 1950 பிப்ரவரி யில் எங்கள் நாடகக் குழுவுக்கு 'மூடு விழா' நடத்தியபோது மீண்டும் இத்தகைய ஒரு சரித்திர நாடகத்தை நடிக்க முடியு மென்று நாங்கள் எண்ணவேயில்லை. இன்று நாங்கள் நடித்து வரும் 'ஸ்பெஷல்' நாடகச் சூழ்நிலையில் இராஜராஜ சோழனைப் போன்ற நாடகங்கள் வெற்றி பெறுவது எளிதல்லவென்பது விஷயமறிந்தவர்களுக்குத் தெரியும்.

ஆசிரியர் திரு. அரு. இராமநாதன் அவர்களுக்கு ஒரு வகையில் நாங்கள் மிகவும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருச்

கிறேம். சென்ற பத்தாண்டுகளில் இடையே வேறு எவரைக் கொண்டாவது இராஜராஜ சோழனை அரங்கேற்ற அவர் எண்ணி யிருந்தால் நாங்கள் மகிழ்ச்சியோடு கொடுத்திருப்போம். ஆசிரியருக்கு அந்த ஆர்வம் ஏற்படாததுகூட வியப்பில்லை. இந்தப் பத்தாண்டுகளினிடையே ஒருமுறைகூட அவர் இராஜராஜ சோழன் நாடக அரங்கேற்றத்தைப் பற்றி எங்களிடம் வற்புறுத்தவும் இல்லை. பரிசுபெற்ற தமது நாடகத்தைப் பத்தாண்டுகளுக்குப் பின் நாங்களாகவே அரங்கேற்றும்வரை எப்படி ஓர் எழுத்தாளர் பொறுமையோடு இருந்தார் என்பது எங்களுக்கே வியப்பாயிருக் கிறது. ஆசிரியர் காட்டிய இந்த மகத்தான பொறுமைதான் இராஜராஜ சோழனை எப்படியாவது அரங்கேற்றியே தீரவேண்டும் என்ற எழுச்சியை உண்டாக்கியது.

இடையே சென்னை வானொலியின் நாடக மேற்பார்வை யாளர் திரு. மீ. பா. சோமசுந்தரம் ('கல்கி' ஆசிரியர்) அவர்கள் மிகவும் வற்புறுத்தி இராஜராஜ சோழனை ஒரு மணி நேர நாடக மாக ஒலிபரப்ப ஏற்பாடு செய்தார். அதைத் தொடர்ந்து இலங்கை வானொலியிலும் இந்நாடகத்தைப் பதிவு செய்து பல முறை ஒலிபரப்பப்பட்டது. வானொலியின் வாயிலாக இராஜராஜனைக் கேட்டு ரசித்த தமிழ் மக்கள் விரைவில் இந்நாடகத்தை மேடையேற்ற வேண்டுமென்று ஆசிரியரையும் எங்களையும் வற்புறுத்தினார்கள். தமிழ்ப்பெரு மக்கள் காட்டிய இந்த உற்சாகத்திலேதான் இராஜராஜ சோழன் அரங்கேறியது.

இந்த நாடகத்தை அரங்கேற்றுவதில் எங்களுக்கு எவ்வளவு அச்சமும் பொறுப்புணர்ச்சியும் இருந்ததோ அதே உணர்ச்சியை ஆசிரியரிடமும் கண்டோம். நாடகத்தின் சிறப்புக்காக நாங்கள் அவ்வப்போது எங்கள் கருத்துக்களை வெளியிட்டபோதெல்லாம் சிறிதும் அயர்வுறாது நாடகத்தை உருவாக்கித் தந்தது அவரது பொறுமைக்கு மற்றுமோர் எடுத்துக் காட்டாக விளங்கியது. ஆசிரியரைத் திருநெல்வேலியில், சபையில் அறிமுகப்படுத்தியபோது "இவர் ஓர் அகஸ்தியர்" என்று வேடிக் கையாகக் குறிப்பிட்டோம். அது அவருடைய உருவத்தை மட் டும் குறிப்பிட்டதல்ல; அறிவின் திறத்தையும் தமிழ்ப் புலமையையும் இணைத்துக் கூறியதாகும். திரு. இராமநாதன் அவர்கள் தமிழ்ப் பண்டிதரல்ல. ஆனால், சிறந்த தமிழறிஞர். ஆராய்ச்சித் திறன் படைத்தவர். நாடகத்திலே வரும் நிகழ்ச்சிகளுக்குரிய வரலாற் றுக் குறிப்புகளைப் பற்றி நாங்கள் அவ்வப்போது விவாதிப்ப துண்டு. அப்போதெல்லாம் தமது புத்தகக்குவியல்களிலிருந்து பல புத்தகங்களைப் புரட்டியெடுத்து அவற்றிற்குரிய குறிப்புக்களை எடுத்துக் காட்டி உடனுக்குடன் விளக்கியதைக் கண்டபோது, எங்கோ பல்கலைக் கழகத்திலே சரித்திர ஆராய்ச்சிப் பேராசிரியராக

வீற்றிருக்க வேண்டிய இந்தச் சிறிய உருவம் இப்படிப் பத்திரிகை யுலகிலே உழல்கிறது என்று உண்மையிலேயே நாங்கள் பெரு வியப்படைந்தோம்.

இந்த நாடகத்தின் சிறப்பியல்களைப் பற்றி விரிவாகக் கூற வேண்டுமென்று எங்கள் ஆசை. ஆனால், நாடகத்தை நடிப்ப வர்களும் நாங்களாகவே இருக்கும் நிலையில் அது பொருத்தமா யிராது என்று எண்ணுகிறோம், இருந்தாலும் ஒன்று மட்டும் சொல்லவேண்டியது எங்கள் கடமை.

பாத்திரப் படைப்பு இந்நாடகத்தின் உயிர் நாடியாக விளங்கு கிறது. இராஜராஜன், இராஜேந்திரன், விமலாதித்தன், குந்தவ்வை, குந்தவி முதலிய பாத்திரங்கள் வரலாற்று முத்திரையைப் பெற்ற வர்களாயிருப்பினும் ஆசிரியர் நாடகப்போக்கில் அப்பாத்திரங்களை உருவாக்கியிருக்கும் திறன் நாடக நுணுக்கம் அறிந்தவர்களால் பாராட்டப் படுவதாகும். மேற்குறிப்பிட்ட ஐந்து பாத்திரங்களும் முழுமை பெற்ற உயர்ந்த சிருஷ்டிகள் என்பதில் ஐயமில்லை.

தமிழ் இலக்கியங்களிலே ஆசிரியர் எந்த அளவுக்கு ஈடுபாடு உடையவர் என்பதற்கு உரையாடல்கள் சான்று பகருகின்றன. அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை, திருக்குறள் முதலிய சங்க நூல்களிலே காணப்படும் சீரிய கருத்துக்கள் நாடக முழுதும் பளிச்சிட்டு மின்னுகின்றன.

சரித்திர நிகழ்ச்சிகளைப் பின்னணியாக வைத்து அதற்குரிய சிறப்புக்குன்றாமல் கற்பனை கலந்து சுவைபடப் பெருங் கதையாக் கித் தருவதில் ஆசிரியருடைய ஆற்றலை 'காதல்' பத்திரிகை வாயி லாகத் தமிழுலகம் அறிந்திருக்கிறது. நாவலாக மட்டுமல்ல; நாடகமாகவும் புனைந்து தருவதில் ஆசிரியர் திறம் பெற்றவர் என்பதற்கு இராஜராஜ சோழன் எடுத்துக் காட்டாக விளங்கு கிறது.

திரு. அரு. இராமநாதன் அவர்கள் இத்தகைய வரலாற்று நாடகங்கள் பலவற்றை மேடை நாடகமாக்கித் தமிழ் நாடக மேடைக்கும், அவற்றை நூல்வடிவில் கொண்டுவந்து நாடக இலக்கிய வளர்ச்சிக்கும் துணைபுரிய வேண்டு மென்பது எங்கள் ஆவல்.

சென்ற காலச் சிறப்புகளை மேடையில் சித்திரித்துக் காட்டு வது இன்று வாழும் மக்களுக்குப் பெரும்பயன் தருவதாகும். நற்பண்புகள் வளருவதற்கு இத்தகைய நாடகங்கள் நாடெங்கும் நடைபெற வேண்டும்.

டி. கே. சண்முகம்,
'அவ்வையகம்' சென்னை.

7-9-55.

# முன்னுரை

அரு. ராமநாதன்

எனக்கு எப்பொழுதும் ஞாபகமறதி அதிகம் உண்டு! நேற்று என்ன காய்கறி சாப்பிட்டோம் என்பதை இன்று சாப்பிடும் போது மறந்து விடுவேன். கல்லூரியில் படிக்கும் போது சரித்திரப் பாடங்களில் வரும் வருஷம் 'மாதம்' தேதிகளை வெகு சுலபமாகப் பரீட்சை சமயங்களில் மறந்து விடுவேன். நண்பர்களுக்கு இரவல் கொடுத்த புத்தகங்களையும், எனக்கு வரவேண்டிய கைமாற்றுக் கடன்களையும் மறுநாளே மறந்து விடுவேன். தான் செய்த தவருன காரியங்களை மறந்து விட விரும்புவது மனித இயற்கைதான் என்ருலும், நான் செய்த சில நல்ல காரியங்களைக் கூடச் சில சமயங்களில் மறந்து விடுவேன். எடுத்த காரியத்தை முடித்தவுடன் அதை மறந்துவிட்டு இன்ெனாரு காரியத்தில் உற்சாகமாக ஈடுபடுவதுதான் என் சுபாவமும் ஆகிவிட்டது. இத்தகைய 'மறதிகளில்' ஒன்றுதான் பத்துஆண்டு களுக்குமுன் நான் எழுதிய இராஜராஜசோழன் நாடகமாகும்!

சரித்திர ஏடுகளிலுள்ள இராஜராஜசோழனை மேடை மன்ன ராக உருவாக்கி, அதற்குப் பாராட்டுப் பரிசும் பெற்று, அதன் அரங்கேற்றத்திற்குப் பத்து ஆண்டுகள் காத்திருந்த என் தன்மை யைக் கண்டு வியப்புறுகிருர்கள் கலைஞர் டி. கே. சண்முகம் அவர்கள்; அதை என் 'மகத்தான பொறுமை' என்று தம் முகவுரையில் முகஸ்துதியும் செய்கிருர்கள். உண்மையில் சகோ தரர்கள் என்னுடைய 'மகத்தான மறதியைத்தான்' பாராட்டி யிருக்க வேண்டும்!

நாடகத்தை அவசரவவசரமாக எழுதி முடித்ததும், 'மாபெரும் இராஜராஜசோழச் சக்கிரவர்த்திகளை மேடை யேற்றுவதென்பது சாமான்யமான விஷயமா, அதற்குத் தேவையான தயாரிப்பு களுக்குச் சிறிது கால தாமதமாகும்' என்று நான் உணர்ந்தேன்; அதுவரை நம் நாடக மன்னரை மறந்திருக்கலாம் என்றும் நினைத் தேன். அதன்பிறகு, அப்போதைய என் நாடகத்தில் ஒரு பெரிய குறை இருப்பது தெரிய வந்தது. சிறப்பு மிக்க இராஜராஜனை 'எடுப்பார் கைப் பிள்ளையாக' உருவாக்கியிருந்தேன். அப்போ தைய வயதாலும், அனுபவக் குறைவாலும்! அதன் பின்னர் எனக்கு ஓரளவு எழுத்து வளர்ச்சி ஏற்பட்டபோது, இராஜ ராஜனைச் சிறந்த இராஜ தந்திரியாக மாற்றி எழுத விரும்பி னேன். ஆனால் விருப்பம் இருந்ததே தவிர, அதைப் பற்றிச் சிந்திக்க அவகாசமோ, அவசியமோ ஏற்படவில்லை.

'தொடர்கதை, சிறுகதை, பத்திரிகைகள், புத்தகங்கள்' என்று என் எழுத்துத் துறையிலும் அளவுமீறிய 'திறப்பு விழாக்கள்' நடந்து கொண்டிருந்தன. மேலும், ஏற்கனவே எழுதப்பட்ட உணர்ச்சிகரமான ஒரு சரித்திரக் கதையில் 'எடுப்பார் கைப்பிள்ளை'யைத் திடீரென ஈடு எடுப்பில்லா இராஜதந்திரியாக மாற்றுவதென்பது மிகச் சிரமமான 'சித்து வேலை'யாகவே எனக்கு மலைப்பூட்டியது. 'வீரபாண்டியன் மனைவி' என்னும் தொடர்கதையில் ஜனநாதன் என்கிற பாத்திரத்தை உருவாக்கும் பழக்கம் ஏற்பட்டபிறகே, அந்தச் 'சித்துவேலை' எனக்கு ஓரளவு வாய்த்தது. அதுவரை நம் இராஜராஜனை மறந்துவிடுவதுதான் நியாயம் என்றும் தோன்றியது.

என்னை முதன் முதலில் எழுத்துத் துறைக்குத் திருப்பியது இராஜராஜ சோழன்தான். 'ஏன் இந்த எழுத்துத் துறைக்கு வந்தோம்?' என்று நான் அலுத்துக்கொள்ளும் போதெல்லாம் எனக்கு இராஜராஜ சோழன் மீதுதான் கோபம் வரும். அதனால் அந்தச் சோழ மன்னரை மறந்துவிட விரும்பி, அவருடைய நாடக விஜயத்தில் வெகு அலட்சியமாகவே இருந்து வந்தேன். அது எவ்வளவு பெரிய தவறு என்பது எனக்கு இப்போதுதான் புலப்படுகிறது. "தம்பி! பாவலனாகி வரும் பகைவனுக்கு இராஜராஜன் மாபெரும் பரிசு தருவது மட்டுமல்ல; உனக்கும் பொதுமக்களிடமிருந்து மாபெரும் பாராட்டுவாங்கித் தருவான்!" என்று மேடையேறிய இராஜராஜ சோழச் சக்கிரவர்த்திகள் நிரூபித்து விட்டார்!

பலராலும் மகன் 'சான்றோன் எனக்கேட்ட தாய்' பெரிதும் உவப்பது இயற்கை. அதுபோல், தன்னுடைய சிருஷ்டியைப் பலரும் பார்த்து மகிழும் போது தானே ஒருகலைஞனுக்கு உண்மையான ஆனந்தம் கிடைக்கும்? அந்த ஆனந்தத்தைத்தான் 'கிடைத்தற்கரிய செல்வமாக' நான் கருதுகிறேன். அத்தகைய 'செல்வங்கள்' எழுத்துத் துறையில் எனக்குச் சிலசமயங்களில் கிடைக்கும்போதெல்லாம் முதன்முதலில் அத்துறைக்கு என்னைத் தூண்டிவிட்ட டி. கே. எஸ். சகோதரர்களின் நினைப்புதான் எனக்கு வரும். அந்த நன்றியுணர்ச்சியின்எதிரொலிதான் இராஜராஜசோழன் அரங்கேற்ற விஷயத்தில் பத்து ஆண்டுகளாக நான் அனுசரித்து வந்த 'மகத்தான பொறுமை' அல்லது 'மகத்தான மறதிக்கு' முக்கிய காரணம் என்று கூடச் சொல்லலாம்.

இதற்கிடையில் இராஜராஜனின் சரித்திரத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு பேனா மன்னரான 'கல்கி' அவர்கள் 'பொன்னியின் செல்வனை'த் தொடர் கதையாக எழுதப் போவ

தாக அறிந்தபோது, என்னுடைய நாடக இராஜராஜனின் பழைய வடிவத்தை மறந்துவிட நேரிடுமோ என்று நினைத்தேன். ஆனால், இராஜராஜன் பொன்னியின் செல்வனாகி முடிசூடுவதற்குமுன் இளமைப் பிராயத்தில், முடியைப் புறக்கணித்துத் தியாகத்தின்சிகரமாக விளங்கியதோடு 'பொன்னியின் செல்வன்' கதை முடிந்து விடுவதை அறிந்தேன். என் நாடகக் கதையோ, இராஜராஜன் மும்முடிச் சோழன் ஆனபிறகு, விருத்தாப்பிய தசையில் நடந்த நிகழ்ச்சிகளையும், பொன்னியின் செல்வனுக்கு ஒரு செல்வி பிறந்து, அவள் காதற் போர் நடத்திய கதையையும் அடிப்படையாகக் கொண்டிருந்தது. ஆனால் 'கல்கி' அவர்களால் என் பொறுப்பு அதிகரித்து விட்டது. தமிழ் நாட்டுச் சரித்திரக் கதைகளைத் தமிழுலகம் நன்கு வரவேற்கும்படியான சூழ்நிலையை வளப்படுத்திய பெருமை 'கல்கி' அவர்களையே சேரும். அந்த மேதை, அரிய ஆராய்ச்சியின் பயனாகச் சரித்திரத்திலிருந்து உருவாக்கிய இளமைப் பாத்திரங்கள் என்னுடைய நாடகத்தில் முதுமைப் பிராயமடைந்தாலும், குணச் சிறப்புகளில் குன்றி விடக்கூடாதே என்கிற பொறுப்பும் கவலையும் எனக்கு ஏற்பட்டு விட்டன. இதற்கிடையில் வானொலி திரு. மீ. பா. சோமசுந்தரம் ('கல்கி' ஆசிரியர்) அவர்களின் அன்புக் கட்டளையை உத்தேசித்து என் இராஜராஜனை ஒரு மணி நேர ஒலிவடிவமாக்கி, எங்கெங்கிருந்தோ ரசிகர்களின் வாழ்த்தையும் வளர்ச்சிக் குறிப்புகளையும் பெற்றேன். இராஜராஜனின் அந்த ஒலி வடிவம் வானொலியோடு நில்லாமல், கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் தலைமையில் தியாகராய நகர் சாரதா வித்யாலய மாணவிகளால் பள்ளிமேடையில்காட்சியளித்து, 'கல்கி' அவர்களின் வாழ்த்தையும் பெற்றபோது, எனக்கு 'மகத்தான உற்சாகம்' பிறந்து விட்டது. தமிழ்நாட்டின் பொற் காலத்திற்கு அடிகோலிய மாபெரும் மன்னனை மாபெரும் இராஜ தந்திரியாக்கித், தமிழ் நாட்டின் நாடகக்கலை மன்னர்களான டி. கே. எஸ். சகோதரர்களைக் கொண்டு எப்படியும் மேடையேற்றிவிட வேண்டும் என்று எனக்கு 'மகத்தான உறுதியும்' ஏற்பட்டு விட்டது! வெகு காலத்திற்கு முன் என் இதயத்திலும் கலைஞர் திரு. டி. கே. சண்முகம் அவர்களின் இதயத்திலும் தோன்றிய 'மகத்தான கனவு' மேடையில் நனவாகும் காலமும் வந்துவிட்டது!

இதுதான் இராஜராஜசோழன் என் பேனா முனையில் பிறந்து வளர்ந்து மேடையேறிய சரித்திரமாகும்.

இனி இராஜராஜனின் குணச்சித்திரம் உருவான சரித்திரத்திற்கு வருவோம்.

பீடிகையில் குறிப்பிட்ட என் ஞாபக மறதிக்கும் இராஜராஜனுக்கும் நெருங்கிய சம்பந்தமுண்டு. 'நிபந்தனையற்ற சுதந்திரம்'

என்று விமலாதித்தனிடம் வாக்குறுதியளித்துவிட்டு, அதை இராஜராஜர் வெகு சுலபமாக மறந்துவிடுகிறார்; தம் மகள் குந்தவியும் விமலாதித்தனும் குழந்தைகளாக இருந்தபோது விளையாடிப் பிரிந்ததை நினைப்பூட்டி, அவர்களிடையே காதலைத் தூண்டிவிட்டு, பிற்பாடு அந்தக் காதலை வெகு சுலபமாக மறந்துவிடச் சொல்கிறார்; 'தம் வீரப் புதல்வன் இராஜேந்திரன் கோழையல்ல, எத்தனையோ போர்களில் வென்று தம்மை இராஜராஜராக்கியவன்' என்பதை வெகு சாதாரணமாக மறந்துவிடுகிறார்; இராஜேந்திரன் காதலியான வீரமாதேவியையும் அவ்வாறே மறந்துவிடும்படி செய்கிறார்: இராஜதந்திரி பாலதேவர் அந்நிய நாட்டவர் என்பதை மதியமைச்சர் நினைவூட்டியுங்கூட, அதை வெகு அற்பமாக மறந்துவிட விரும்புகிறார்: பாலதேவரிடம் பணி செய்யும் பூங்கோதையின் குணாதிசயங்களைப்பற்றி நிறையக் கேள்விப்பட்டிருந்தும், அவளுடைய பெயரை 'பூ' என்பதற்கு மேல் அடியோடு மறந்துவிடுகிறார். ஆனால் ஞாபகமறதிகளெல்லாம் பழைய வாக்குறுதிகளை நிலை நிறுத்துவதற்கு மன்னர் மன்னர் உபயோகிக்கும் இராஜதந்திரங்களே என்று அறியும் போது நமக்கு மலைப்பு உண்டாகவே செய்யும்! என்னிடம் கெட்ட பழக்கமாய் இருக்கும் ஞாபக மறதி அந்த வயோதிக மன்னரிடம் மிகவும் உபயோகப்படக்கூடியதாகவும், மகோன்னதமாகவும் ஆகிவிடுகிறது. அப்படிப்பட்ட பாத்திரத்தைச் சிருஷ்டித்துப் பழக்கப்பட்ட பிறகுகூட மறதியை இராஜதந்திரமாக உபயோகப்படுத்தும் ஆற்றல் எனக்கு வரவில்லை. சிருஷ்டியின் ஆற்றல் முன், அதைச் சிருஷ்டித்த கலைஞன் வெகு வெகு சாதாரணமானவன் என்பதையும் நான் அதிலிருந்து புரிந்து கொண்டேன்.

தமிழரின் நாகரிகத்தைத் தட்டியெழுப்பிய மன்னர் இப்படியெல்லாம் விளையாட்டுத்தனமாக நடந்து கொண்டிருப்பாரா என்று ஒரு கேள்வி எழலாம். அறிவு முதிர்ச்சியும், தன்னம்பிக்கையுமுள்ள அரசியல் வாதிகள், முதுமையுற்று ஓய்வுறுங் காலத்தில், எவ்வளவு பெரிய விஷயங்களையும் வெகு சாதாரணமாகக் கருதி விளையாடுவதும், எல்லோரும் அழுகிற சமயத்திலே சிறிதும் உணர்ச்சியற்றவராகச் சிரிப்பதும், குடும்ப விஷயங்களில்கூட இராஜதந்திரத்தைக் கையாள்வதும் உண்டு. சரித்திரத்தில் சிதறிக் கிடக்கும் இராஜராஜனை என்னால் மேடைக்கு உருவாக்க முடியும் என்கிற தன்னம்பிக்கை ஓரளவு எனக்கு இருந்ததால்தான் இராஜராஜனிடம் அத்தகைய தன்னம்பிக்கையை என்னால் காண முடிந்தது.

தமிழ் நாகரிகத்தின் இரட்டை நாடிகளாக, வீரமும் காதலும் தான் விளங்குகின்றன என்று இராஜராஜர் இந் நாடகத்தின் மூலம்

அறிவுறுத்துகிருர். அதனுல் நாடகத்தில் வரும் முக்கிய பாத்திரங்களெல்லாம் அவ்விரண்டு நாடிகளின் பலவித உருவகங்களே யாகும்.

இந்நாடகத்தில் வரும் நகைச்சுவைப் புலவர்களைப்பற்றி ஒரு விளக்கம் தருவது அவசியமாகிறது. பழங்கால நாடகங்களில் சாதாரணமாக நடமாடும் விகட கவிகளின் செந்தமிழ் வடிவங்களே இந் நகைச்சுவைப் புலவர்கள். நாடக இறுதியில் புலமைக்கே சிறப்புத் தந்து, பாடிப் பரிசுபெற்ற மாபெரும் புலவர்களின் பட்டியலையும் விமலாதித்தன் வாய் மூலமாகத் தருவதால், இந்நாடகத்திற்குத் தேவையான நகைச்சுவைப் பாத்திரங்களுக்கு இரு விகடப் புலவர்களைக் கையாள்வதுதான் வெகு பொருத்தமென்று தோன்யறிது. 'வீரமும் காதலும்' வேறு கோணத்தில் நகைச்சுவையிலும் வேடிக்கையாகத் தொனிக்க வேண்டுமென்று நினைத்து, 'காதல் துறையில் படிப்பு வேறு, அனுபவம் வேறு' என்று காதலின் அம்சத்தையும், ஒற்றனை நகைச்சுவைப் புலவர்களே பிடித்து நாடகத்தை முடிப்பதாக வீரத்தின் அம்சத்தையும் உருவாக்க முயன்றேன்.

இந் நாடகத்தைப் படிப்பவர்களும், பார்ப்பவர்களும், 'குணச்சித்திரங்களின் மோதல்களினுலேயே' கதையின் உச்சம் ஏற்படுவதை உணர்ந்து கொள்வார்கள். அதனுல் நாடகப் பாத்திரங்களின் குணச் சித்திரங்களைப் பற்றி நான் நீளமாகச் சரித்திரம் எழுதப் போவதில்லை.

அடுத்ததாக, இந்தச் சரித்திர நாடகத்தில் எவ்வளவு தூரம் சரித்திரமும் என்னுடைய கொள்கைகளும் சம்பந்தப்பட்டிருக்கின்றன என்பதின் சரித்திரத்தைப்பற்றி ஓரளவு சொல்லித்தான் ஆகவேண்டும்.

நான் சரித்திரப் பேராசிரியன் அல்ல. கல்லூரிப் பரீட்சையின் போது சரித்திரத்தை நான் கோட்டைவிட்டு மறு படையெடுப்பின் போதுதான் மிகுந்த பிரயாசையின் பேரில் அதை எட்டிப்பிடித்தவன். பெரிய பெரிய சரித்திரப் புத்தகங்கள் என்ருல் தலைவேதனை என்றும் கருதியவன். இந்து தேச சரித்திரத்தையோ மிகவும் கசப்பானது என்று கல்லூரிப் படிப்பில் ஒதுக்கிவிட்டவன். இத்தகைய சரித்திரக் கோழைக்கு எப்படி சரித்திரக் கதைகள் எழுத ஆசை பிறந்ததெனக் கேட்கலாம். நான் இண்டர்மீடியெட் படிக்கும்போது, எனக்கு வாய்த்த தமிழ்ப் பாடங்களுக்கு, 'சோழர் கோயிற்பணிகள்' 'முதற் குலோத்துங்க சோழன்' என்னும் இரு புத்தகங்களும் இருந்தன. பரீட்சைக்கு முதல் நாள் அவற்றில் படித்த சில பகுதிகள்

மறுநாளும் மறந்துவிட முடியாதபடி என் நினைவில் இருந்தமையால் தான் தமிழ்ப் பரீட்சையில் நான் வெற்றி பெற்றேன். அதைத் தொடர்ந்து சரித்திர நாடகங்கள் எழுதும்படி நாடகப் பரிசுப் போட்டி தூண்டியதால் தமிழ் நாட்டு மன்னர் ஒருவரின் சரித்திரத்தை எழுத விரும்பித் தைரியமாக இராஜராஜ சோழன்மீது கைவைத்தேன். அது முதல்தான் எனக்குச் சரித்திரப் பித்துப் பிடித்துவிட்டது! சரித்திர ஆராய்ச்சிப் புத்தகங்களையெல்லாம் தலைவேதனைகள் என்று கருதி வந்தவனுக்கு, அவை நேரங்காலம் இல்லாமல் என் கருத்தை விழுங்கும் காதலிகளாக மாறிவிட்டன. இந்த இராஜராஜ சோழனைச் சீர்திருத்துவதற்கு முன் ஏராளமான சரித்திரப் புத்தகங்களையும், கல்வெட்டு ஆராய்ச்சிகளையும், கன்ன பரம்பரையான கதைகளையும், மெய்கீர்த்திகளையும் மகத்தான பொறுமையோடு படித்தேன். இந்த இராஜராஜ சோழன் நாடகத்தை எழுத எனக்கு ஒருவார காலந்தான் பிடித்தது என்றால், அதற்குத் தேவையான சரித்திர இலக்கியக் குறிப்புகள் சேகரிக்க எனக்கு ஆறுமாத காலம் பிடித்தது. ஆனால் இந்நாடகத்தில் நான் கையாண்டிருக்கும் சரித்திர முடிவுகள் அனைத்துமே சரியானவை என்று நான் வலியுறுத்த முடியாது. சரித்திரப் புதையல்களில், புதிய புதிய கண்டுபிடிப்புகளும், ஆராய்ச்சிகளும் தொடர்ந்து நடந்து கொண்டேயிருக்கின்றன. சரித்திர அறிஞர்கள் இந்நாடகத்தில் சரித்திரத்தை யொட்டிச் சில குறைகள் காணலாம்; சில சரித்திர நிகழ்ச்சிகள் முன் பின்னாக மாறி இருப்பதாகவும் கருதலாம். ஆனால் அவை யாவும், மூன்று மணி நேர மேடை நாடகத்திற்குள் இராஜராஜனின் சரித்திரச் சிறப்புகள் அனைத்தையும் சுவையானதொரு காதல் கதையோடு பிணைத்துவிட வேண்டுமென்கிற வேட்கையின் விளைவேயாகும். அறிஞர்கள் பொறுப்பார்களாக!

இந்நாடகத்தில் அறிந்தோ அறியாமலோ சில கொள்கைகளும் மதச்சார்புகளும் இருப்பதாகத் தோன்றலாம். ஆனால் அவையெல்லாம் என் சொந்தக் கொள்கைகளோ, சொந்த மதவுணர்ச்சியோ அல்ல. கூடியவரை சரித்திரத்திற்குத் துரோகம் செய்யாமல் இராஜராஜ சோழனை என் சொந்தப் பிரதிபிம்பமாக்காமல், எந்தவிதக் கட்சிச் சார்புமில்லாமல் எழுதமுயன்றேன்; அத்தகைய வரலாற்று ஓவியம் தமிழகத்தின் வளத்திற்குப் பயன்படவேண்டுமெனவும் விரும்பினேன்; அவ்வளவுதான்!

நவீன அரசியல் சமுதாயக் கருத்துகள் பல இந்த நாடகத்தில் புகுத்தப்பட்டிருப்பதாகச் சிலர் சொல்லலாம். ஆனால் அவை இடைச் செருகல்கள் அல்ல. இப்போது நம் தலைவர்கள் பல துறைகளிலும் ஆராய

முயலும் சில எதிர்காலத் திட்டங்கள்கூட இராஜராஜ சோழன் காலத்தில் வெகு சாதாரணமாகப் பரிசோதிக்கப்பட்டிருந்தன. உதாரணமாக நம் காந்தியடிகள் கனவுகண்ட 'கிராம சுய ஆட்சி' இராஜராஜ சோழன் காலத்துக் கிராமங்களில் அந்தக் காலத்திற்கேற்ப நடைமுறையில் கையாளப்பட்டு வந்திருக்கிறது. அது போன்ற கருத்துகளைப் பளிச்சென்று எல்லோரும் புரிந்து கொள்ளும்படியாக 'நவீன சொற் பிரயோகங்களில்' எடுத்துக் காட்டியிருக்கிறேன்; அவ்வளவுதான்!

செந்தமிழ்ப் பேரரசனைப் பற்றிய நாடகத்தின் வசனங்களில், 'சக்கிரவர்த்திகள்' என்பதுபோன்ற வடமொழிச் சொற்களும், 'பொத்தகங்கள்' என்பது போன்ற சொற்களும், 'அக்கையார்', 'என்பது போன்ற விசித்திரமான மரபுச்சொற்களும் கலந்திருப்பது, நான் வேண்டுமென்றே செய்ததாகும்! ஏனெனில் இராஜராஜனின் கல்வெட்டுகளிலும், மெய்கீர்த்திப் பாடல்களிலும் வழங்கி வந்த அத்தகைய சொற்களைக் கூடியவரையில் நாடக வசனங்களில் உபயோகப்படுத்த விரும்பினேன்.

இனி மேடையேறிய இராஜராஜன் தமிழ்நாடெங்கும் வெற்றி விஜயனாக உலாவும் இரகசியத்தின் சரித்திரத்தைச் சொல்லவேண்டுமென்றால் நாடகக்கலை நிபுணர்களான டி.கே.எஸ். சகோதரர்களின் மகோன்னதத்தைச் சிறப்பிக்கும் சரித்திரமாகவே ஆகிவிடும். ஏனெனில், வெறும் குணச்சித்திரப் பாத்திரங்களின் மோதல்களைக் கொண்டே கதை உச்சம் ஏற்படக்கூடிய ஒரு சரித்திர நாடகத்தைத் துணிச்சலுடன் கவர்ச்சிகரமாக மேடையேற்றுவதும், நடிப்பதும் சாதாரண விஷயமல்ல! நாடகத்திற்கென தமிழறிஞர் திரு. டி. கே. சண்முகம் அவர்கள் எடுத்துக் கொண்ட தனி சிரத்தையையும் பொறுப்புணர்ச்சியையும் நாடக தயாரிப்புகளின்போது அவரிடம் பிரகாசித்த தனித் திறமையையும் பார்த்தபோது, நான் சிறிதும் வியப்படையவில்லை! ஏனெனில் அவை உன்னதமான கலைஞர்களிடம் காணக்கூடிய உயர்தரமான பண்புகள்தாம்! இராஜராஜ சோழனாக நடிக்கும் திரு. டி. கே. பகவதி அவர்களோ ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் இராஜராஜன் தோன்றினாரோ என்னும்படி அந்தப் பாத்திரத்திற்கு ஒரு தனிக் கம்பீரம் கொடுத்துவிட்டார். இந் நாடகத்தின் பெரிய கதாபாத்திரங்கள் முதல் வாய்பேசாச் சிறு சிறு கதாபாத்திரங்கள் வரை ஒவ்வொரு நடிகரும் தங்களுடைய பாத்திரத்தின் குணச்சித்திரத்தை நன்கு உணர்ந்து வெகு அற்புதமாக நடிக்கிறார்கள். ஒவ்வொருவரின் நடிப்பைப்பற்றியும் சொல்வதென்றால் இந்த முன்னுரை தனி விமர்சனமாக மாறிவிடும். சுருக்கமாகச் சொன்னால், நடிகர்கள், பின்னணி வாத்யக் கோஷ்டி

யினர். ஆடலாசிரியர், பாடலாசிரியர்,பாடகர், இசையமைப்பாளர், காட்சி யமைப்பாளர்கள், மற்றும் நாடகக்குழு சம்பந்தப்பட்ட அனைவருமே ஒருமுகமாகத் தங்களுடையஉற்சாகத்தையும் திறமையையுங்காட்டி, என்னுடைய இராஜராஜ சோழனைத் தத்ரூபமாக சோழமண்டலத்தின் பொற்காலத்திற்கே கொண்டு போய் விட்டார்கள். இத்தகைய மாபெரும் மன்னனை நாடகக்கலை மன்னர்களான டி.கே. எஸ்.சகோதரர்களால்தான் வெற்றிகரமாக அரங்கேற்ற முடியும் என்கிற என்னுடைய வெகுகாலத்திய நம்பிக்கையை நிரூபித்தும் விட்டார்கள். இந்த நாடகத்தை வேறு யாரைக் கொண்டும் அரங்கேற்ற விரும்பாமல் பத்துவருஷ காலமாகப் பொறுத்திருந்ததால், பெரும் பயனடைந்தேன். அவர்களுக்கு என் நன்றி !

கடைசியாக இந்நாடகப் புத்தகத்தைப் பற்றியும் சில வார்த்தைகள்! படிப்பதற்கும் நடிப்பதற்கும் ஏற்றவாறு இந்நாடகத்தைச் சற்று விரிவாகவே நான் எழுதினேன். காலம், இடம், பொருள் ஏவலை உத்தேசித்து இந்நாடகத்தைச் சுருக்கியும் விரித்தும் நடிப்பதற்கு ஏற்றவாறு நாடகத்தின் காட்சிகளையும் வசனங்களையும் நேரம் நீளம் கணிக்காமல் அமைத்துக் கொண்டேன். இப்போது டி. கே. எஸ். சகோதரர்கள் நடித்து வருவது, இந்நாடகப் புத்தகத்தை மூன்றுமணி நேர நாடக அளவிற்குச் சுவை பெருகும்படி சுருக்கியதேயாகும்.

பகைவனுக்கும் மெய்மறந்து மாபெரும் பரிசளிக்கும்படியான ஒப்புயர்வற்ற கவிதையொன்றை விமலாதித்தன் பாடுவதாகக் கதையின் உச்சத்தை அமைத்துவிட்டு, அப்படிப்பட்ட உன்னதமான கவிதை யெப்படியமையப் போகிறதோ என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன் மேடையில் விமலாதித்தன் பாடுவதைக் கேட்கும் போதோ, அதற்கு என்ன பரிசு வேண்டுமானாலும் கொடுக்கலாம் என்றே தோன்றும். அவ்வளவு அற்புதமாகப் பாடலை எழுதியிருக்கிறார் புத்தனேரி. திரு. ரா. சுப்பிரமணியம் அவர்கள். இந்நாடகப் புத்தகத்தின் இறுதியில் சேர்க்கப் பட்டிருக்கும் பாடல் பகுதியில் அந்த அற்புதமான பாடலையும் காணலாம்.

தமிழ் நாடகத்துறையில் ஒரு புதியசகாப்தத்தை உண்டாக்கிப் பலபல ஆண்டுகளாக நாடகக் கலையின் பாதுகாவலர்களாக விளங்கிவரும் டி. கே. எஸ். சகோதரர்களைத் தமிழகம் வாழ்த்துவதில் வியப்பில்லை; அதைநோக்கியாவது தமிழ்ப் புத்தகத்துறையில் நாடக இலக்கியத்தின் வளர்ச்சியைப் பிரசுர கர்த்தர்கள் மறந்து விடாமல் வளர்ப்பார்களென நம்புகிறேன்.

*அரு. ராமநாதன்*

# BIBLIOGRAPHY

இந் நாடகத்தை எழுதும்போது சரித்திர ஆராய்ச்சிகளுக்குத் துணை புரிந்த முக்கியமான சில நூல்கள்:


1. The Cholas Vol. I & II
2. Foreign Notices of South India
3. History of Sri Vijaya
4. The Pandyan Kingdom
5. History of India Vol. I
   (By Prof. K. A. Nilakanta Sastry, M. A.)
6. The Historical Inscriptions of Southern India (By S. R. Swell)
7. Studies in the Ancient History of Tondamandalam
   (By R. Sathianathaier, M.A., L.T.)
8. The Rashtrakutas And Their Times
   (By Dr. A.S. Altekar)
9. Collected Works of Sir R. G. Bhandarkar Vol. III.
10. A Political and Cultural History of India Vol. I
    (By R. Sathianathaier, M.A.L.T.)
11. Origin and Development of Saivism in South India
12. Coins of Southern India (By Elliot)

13. பிற்காலச் சோழர் சரித்திரம் (டி. வி. சதாசிவப் பண்டாரத்தார்)

14. முதல் இராசராச சோழன் (எல். உலகநாத பிள்ளை)

15. சோழர் வரலாறு (மா. இராசமாணிக்கனர், எம். ஓ. எல்.)

16. தமிழ் நாட்டு வட எல்லை ,, ,,

17. தென்னுட்டுக் கல்வெட்டுகள் (மு. சிவகுருநாதன், பி. ஏ.)

18. சோழர் கோயிற் பணிகள் (ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளை)

19. கங்கை கொண்ட சோழன் (இ. நா. சுப்பிரமணியன்)

20. பண்டைத் தமிழ் எழுத்துக்கள் ,, ,,

21. மலாயச் சரித்திரம் (கா. கந்தையா பிள்ளை)

22. ஆராய்ச்சித் தொகுதி (மு. இராகவையங்கார்)

23. தமிழ் வரலாறு (ரா. இராகவையங்கார்)

24. பழந் தமிழாட்சி (ஞா. தேவநேயன், எம். ஏ.)

25. செயற்கை நலம் (சி. எம். இராமச்சந்திரன் செட்டியார்)

26. கொங்குதேச இராசாக்கள் ,, ,,

27. பௌத்தமும் தமிழும் (மயிலை சீனி வெங்கடசாமி)

28. தமிழர் வீரம் (ரா. பி. சேதுப் பிள்ளை, பி.ஏ., பி.எல்.)



# நாடகப் பாத்திரங்கள்

**இராஜராஜன் :** சோழ மன்னன்.

**இராஜேந்திரன் :** இராஜராஜன் மகன்.

**விமலாதித்தன் :** வேங்கி நாட்டு வேந்தன்.

**சக்திவர்மன் :** விமலாதித்தனுக்குத் தமையன்; இராஜராஜனிடமிருந்து வேங்கி முடி பெற்றவன்.

**சத்தியாசிரயன் :** இரட்டபாடி மன்னன்; சோழப் பேரரசை விழுங்க விரும்புபவன்.

**மதுராந்தக மூவேந்த வேளார் :** இராஜராஜன் உடன் கூட்டத்து அதிகாரிகளில் முக்கியமானவர்; அமைச்சர்களில் ஒருவர்.

**பாலதேவர் :** இராஜராஜனின் நம்பிக்கையைப் பெற்றவர் போல் நடமாடும் இராஜதந்திரி.

**நம்பியாண்டார் நம்பி :** திருமுறை வகுத்த சிவனடியார்.

**நூலாசிரியர் :** இராஜராஜேஸ்வர நாடகம் எழுதிய ஆசிரியர்.

**மேதினிராயர் :**<br>
**முத்துப்பல் கவிராயர்** } நகைச் சுவை நாவலர்கள்; (விகட கவிகள்.)

**குந்தவ்வையார் :** இராஜராஜன் தமக்கையார்.

**குந்தவி :** இராஜராஜன் மகள்.

**வீரமாதேவி :** அமைச்சர் மதுராந்தக மூவேந்த வேளாரின் தங்கை.

**பூங்கோதை :** பணிப் பெண்

மற்றும் உடன் கூட்டத்து அதிகாரிகள், திருமந்திர ஓலைகள் நாயகம், வீரர் முதலானோர்.

**நாடகம் நிகழுமிடங்கள்:—** பெரும் பகுதி தஞ்சையிலும் சிறுபகுதி வேங்கியிலும்.

**கதை துவங்கும் காலம் :** கி. பி. 999



ஔவையார் - டி. ஏ. ஜெயலக்ஷ்மி



நம்பியாண்டார் நம்பி-டி.பி.சங்கர நாராயணன்



விமலாதித்தன்—கே. ஆர். சீதாராமன்



குந்தவி – ஹேமலதா



இராஜேந்திரன் ▲ டி.கே. ஷண்முகம்



தினிராயர்-பூங்கோதை-முத்துப்பல்லர்
கருப்பையா-கோமளா-டி. என். சிவதாணு



தந்தையும் மகளும்

# காட்சி : 1

## தஞ்சை அரண்மனையில் மேன்மாடம்.

அடிவானத்தின் விளிம்பில், விடியற்சாமத்தின் இருளைக் கிழித்துக்கொண்டு சூரியன் புறப்படும் நேரம்.

*மேன்மாடத்தின் ஒருபுறம் பெரியதொரு தமிழன்னையின் சிலை. அதன் கால்களில் சிலம்புகள் ; இடையில் மணி மேகலை ; கைகளில் வளையல்கள் ; கழுத்தில் சிந்தாமணி; காதுகளில் குண்டலங்கள் ; உதடுகளில் குமிழ் சிரிப்பு. அக் கருஞ்சிலையின் ஒரு கையில் திருக்குறள் சுவடியே செங்கோலாகவும் மற்றொரு கையில் பல ஏடுகளும் விளங்குகின்றன. சோழர்களின் புலி இலச்சினை பொறித்த பெரிய பட்டுக் கொடியொன்று, தமிழன்னையின் சிலை முன் ஊன்றப் பட்டுள்ளது. சிலையின் பாதங்கள் அருகே, பொற்பீடத்தில், பாண்டியனின் முத்து மணிமுடியும் சேரனின் தந்த மணிமுடியும், ஒரு வைரமணித் திருவாளும் வைக்கப்பட்டுள்ளன. அவற்றின் முன்னால், காவிரி நீருள்ள செப்புக் குடம் ஒன்றில் இரண்டு நெற்கதிர்களும், ஒரு தட்டில் முத்துக் குவியலும், ஒரு தட்டில் இரு யானைக் கொம்புகளும் காணப்படுகின்றன. ஒருபுறம் சோழர்களின் சூரியகுலத்தைக் குறிக்கும் ஆலவட்டம் தொங்குகின்றது. சிலைக்குப் பின்புறமுள்ள மேன்மாடக் கைப்பிடிச் சுவரில் கண்கவர் வண்ணச் சித்திரங்களும், கைப்பிடிச் சுவருக்கு அப்பால் கண்ணுக் கெட்டிய தொலைவு வரை மாடமாளிகைகளும் கூட கோபுரங்களும் தென்படுகின்றன.*

*மேன்மாடத்தில் இராஜராஜ சோழச் சக்கரவர்த்திகள் தம் பரிவார மெய்க்காப்பாளரும், உடன் கூட்டத்து அதிகாரிகளும், திருவாய்க் கேள்வியினரும், திருமந்திர ஓலைகள் நாயகமும் சூழ நிற்கிறார். அவர் பார்வை, கீழ்த்திசை வானத்தை நோக்கியிருக்கிறது.*

*காலை இளம் பருதிக் காற்றில், பல திசைகளிலிருந்தும், "இராஜராஜ சோழச் சக்கிரவர்த்திகள் வாழ்க! வெற்றி*

விஜயர் வாழ்க! தமிழ்ப் பெருமன்னர் வாழ்க!'' என்னும் வாழ்த்தொலிகள் வருகின்றன.

ஒரு சதுரக் கல்லில் இராஜராஜனின் மெய்க்கீர்த்தி எழுத்துகளைச் சிற்பி யொருவன் உளி கொண்டு பொறித்த வண்ணம் இருக்கிறான். காற்றில் பின் வரும் மெய்க்கீர்த்திப் பாடல் மிதந்து வருகிறது.

திருமகள் போலப் பெருநிலச் செல்வியுந்
தனக்கே யுரிமை பூண்டமை மனக்கொளக்
காந்தளூர்ச் சாலைக் கலமறுத் தருளி
வேங்கை நாடுங் கங்க பாடியும்
தடிகை பாடியும் நுளம்ப பாடியுங்
குடமலை நாடுங் கொல்லமுங் கலிங்கமும்
முரட்டொழிற் சிங்களர் ஈழமண்டலமும்
திண்திறல் வென்றித் தண்டாற் கொண்டதன்
எழில் வளர்ஊழியுள் எல்லா யாண்டுந்
தொழுதக விளங்கும் யாண்டே செழியரைத்
தேசுகொள் கோராச கேசரி வர்மரான
உடையார் ஸ்ரீராச ராச தேவர்க்கு யாண்டு...

**இராஜராஜன் :** இராஜராஜன் என்னும் என் மெய்க்கீர்த்தி எங்கும் பரவுகிறது என்றால், சோழர்களின் சூரியோதயம் துவங்கிவிட்டது என்றுதான் அர்த்தம். எங்கும் தமிழர் நாகரிகம் பொன்னொளி பரப்புகிறது என்றுதான் பொருள்! மாநிலத்திற்கு மன்னர் மன்னன் வழங்கும் மகத்தான பரிசு இதுதான்!

[அமைச்சர்களில் ஒருவரான பருத்திக்குடி மதுராந்தக மூவேந்த வேளார் வருகிறார். சக்கிரவர்த்திகளை நோக்கித் தலைதாழ்த்தி வணங்குகிறார். அவர் பின்னால் வந்த நூலாசிரியர் ஒருவரும் வணங்கி வாழ்த்துகிறார்.]

**நூலாசிரியர் :** தென்ன பராக்கிரம இராசகேசரி உடையார் திருவளர் ராச ராச சோழ தேவரை வாழ்த்துகிறேன்.

**இராஜராஜன் :** (புன்சிரிப்புடன்) வாழ்த்துதல் வளர்ச்சிக்குத் தேவைதான்! வாழ்த்துபவனுக்கும் சரி, வாழ்த்தப்படுபவனுக்கும் சரி, அதனாலே வளர்ச்சி உண்டு!

**மதுராந்தகர் :** இவர் பல நூல்கள் எழுதிப் பயிற்சி பெற்ற பன்மொழிப் புலவர். சக்கிரவர்த்திகளின் வாழ்க்கை வரலாற்றை இந் நூலாசிரியர் ஒரு நாடகமாக எழுத விரும்புகிறார்.

**இராஜராஜன் :** தமிழருக்கு வரலாறு தேவைதான். இறந்தகாலத்தை எதிர்காலத்தோடு பிணைத்து, நிகழ் காலத்தில் நாட்டுப் பற்றை வளர்ப்பவை சரித்திர நாடகங்கள்தாம் !

**நூலாசிரியர் :** தமிழகத்துக்கு ஒரு தனி வரலாறு உண்டு. ஆனால் தமிழகத்தை ஆண்ட தலைவர் களுக்குச் சரித்திரங்கள் இல்லை.

**இராஜராஜன் :** தந்நலமும் தற்பெருமையும் இல்லாத தமிழர்கள் தங்களைப் பற்றிய வரலாறுகளையும் பிற்காலச் சந்ததிகளுக்காக எழுதி வைக்காமல் போனது பெருங் குறையே ! ஆசிரியரே, கோயிற் கல்வெட்டுகளில் மன்னர் களின் மெய்க்கீர்த்திகளைப் பொறித்துவரும் முறையை, வரலாற்று ஆராய்ச்சிக்குப் பயன்படும் வகையிலே நான் மாற்றியமைத்து வருகிறேன் ! இந்த வரலாற்றுப் பொத்த கங்களே வருங்காலத்தின் சரித்திரத்திற்கு இராஜராஜன் வழங்கும் வளர்ச்சியான பரிசுகள் !

**நூலாசிரியர் :** அவ்வாறானால் சரித்திரம் எழுத எனக்கு அனுமதி...

**இராஜராஜன் :** சாதிப்பற்றும் சமயப் பற்றும் இல் லாதவரே சரித்திரம் எழுதவேண்டும். ஆசிரியரே, நீர் இந்த அரண்மனையிலே சில ஆண்டுகள் இரும்; நான் வெறும் நடிகன்தானா என்பதை ஆராய்ந்தபிறகு நீர் என் நாடகத்தை எழுதலாம். உம்மை அழைத்துவந்த அமைச்சர் மதுராந்தக மூவேந்த வேளாரே உமக்குப் பொறுப்பேற்றுக் கொள்ளட்டும்.

**மதுராந்தகர் :** தங்களைப்பற்றிய நாடகம் சிறப்புடன் அரங்கேற இந் நூலாசிரியருக்காக நான் முழுப் பொறுப்பும் ஏற்றுக்கொள்வேன்.

**இராஜராஜன் :** (தமிழன்னையின் சிலையை நோக்கிப் புன்முறுவலுடன்) 'நெடியோன் குன்றமும் தொடியோள பௌவமும் தமிழ் வரம்பறுத்த தண்புனல் நாடு' என்று சேர, சோழ, பாண்டிய நாடுகளைச் செந்தமிழ் நாடாக ஒன்று சேர்த்துக் கனவு கண்டார் இளங்கோவடிகள். சிலப்பதிகாரம் கண்ட அந்தக் கனவை இன்று இராஜ ராஜன் நிறைவேற்றுகிறான்.

[இராஜதந்திரி பாலதேவப் பட்டரையர் வேறுபுறம் திரும்பிச் சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறார்.]

**இராஜராஜன் :** இராஜதந்திரி பாலதேவப பட்டரை யரே! வடதிசை நோக்கி நிற்கும் நீர், வெறும் சூன்யவெளி யைத் திரும்பிப் பார்த்துக் கொண்டிருப்பதேன் ?

**பாலதேவர் :** உதயத்திற்கு முன்னும் பின்னுமுள்ள அஸ்தமனத்தைப் பற்றியும் சிந்திக்க வேண்டியவன் நான்!

**இராஜராஜன் :** நம் சோழகுல சூரியோதயத்தின் முன் பாண்டியர்களின் சந்திரோதயம் மறைந்துவிட்டதே என்று அமரபுசங்க பாண்டியன் மனம் பதறலாம், சோழர் களின் புலிக்கொடி முன் சேரர் விற்கொடியின் அம்பு கூர்மை மழுங்கிவிட்டதே என்று சேரன் பாஸ்கர ரவிவர் மன் திருவடி மனம் சினக்கலாம். ஆனால் பலவாருகப் பிரிந்து கிடந்த தமிழரை ஒருவாருக ஒரே தாய் நாட்டின ராக ஒன்றுபடுத்திவிட்டோம் என்று நாம் மனம் பூரிப் போம். தெற்கே கன்னியாகுமரி முதல் வடக்கே திருவேங் கடம் வரை பரந்துகிடக்கும் தமிழ் கூறு நல்லுலகம்என்கிற பழம் பெரும் தொல்காப்பியக் கருத்தை நிறைவேற்றி விட்டோம் என்று களிப்புறுவோம்.

**பாலதேவர் :** ஆனல் தங்களுடைய சோழகுல சூரியோதயத்தைப் பற்றிப் பிற நாட்டினர் என்ன நினைக் கின்றனர் என்று......

**இராஜராஜன் :** எண்ணிப் பார்ப்போம், ஆனல் ஏமாறமாட்டோம்! தமிழர் குலத்திற்கு எமன் என்று பட்டயம் தீட்டிக்கொள்ளும் இரட்டபாடி நாட்டு மன்னன்

சத்தியாசிரயனை நம் எழுச்சி கண்டு சூழ்ச்சிகள் பல புரிய லாம். கங்கபாடிக் கன்னடர் கண்ணீர் வடிக்கலாம். கங்கை மன்னர் கனல் கக்கலாம். தெலுங்கு வீமன் தெருட்டலாம். இலங்கை மன்னன் இதயம் கலங்கலாம். இமயமே குமுறி விடலாம். வடநாட்டுக் கங்கை வெள்ளமே நம் நாட்டை நோக்கிப் பொங்கி வரலாம். ஆனல் காவிரி வள நாடன் கலங்கமாட்டான். தமிழரும் கைசோர மாட்டார்.

**மதுராந்தகர்** : மன்னர் மன்னு! இத்தனை ஆண்டு களாக உள்நாட்டு ஆட்சி முறையை ஒழுங்கு படுத்தி னீர்கள். இப்போது அயல்நாட்டு வியவகாரங்களிலே அதிகம் கவனம் செலுத்துகிறீர்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் சக்கிரவர்த்திகளின் முடிவான கொள்கைகளையும் திட்டங் களையும் தெளிவான முறையிலே தெரிந்துகொள்ள விரும்புகிறோம்.

**இராஜராஜன்** : உரிமைக்கு வேங்கடம்! உறவுக்கு இமயம்! கடலுக்கு அப்பாலும் தமிழரின் வாணிப நாகரிகம்! இவையே இராஜராஜ சோழனின் அடிப்படைக் கொள் கைகள்!

**மதுராந்தகர்** : ஆனல்...

**இராஜராஜன்** : ஆனல் இன்றைய நிலை எனக்குத் தெரியும். நம்முடைய வடவேங்கட உரிமையை இரட்ட பாடி மன்னன் சத்தியாசிரயன் விழுங்கிவிட விரும்புகிருன்! இமயமோ, தமிழர் மீது ஆதிக்கத்திற்குச் சித்தமாயிருக் கிறதே தவிர, உறவுக்குச் சித்தமாக இல்லை! கடலுக்கு அப் பாலோ, நம் வணிகர்களின் நாணயத் தன்மையை மதிக் கிருர்களே தவிர, அவர்களுக்குக் குடியேற்ற உரிமை தர மறுக்கிருர்கள்! இந்த நிலை மாற வேண்டும்.

**மதுராந்தகர்** : முதலில் நம்முடைய வட எல்லையான திருவேங்கடத்தின் மீது கருத்துச் செலுத்தவேண்டும். அதை நம்மிடமிருந்து திருடன்போல் கவர நினைக்கிருன் இரட்டபாடி சத்தியாசிரயன்.

**இராஜராஜன்** : (வீரம் பொங்கும் சிரிப்புடன்) அமைச்சர் மதுராந்தக மூவேந்த வேளாரே! ஆயிரம்

ஆயிரம் ஆண்டுகளாகவே, தொல்காப்பியர் காலத்தில், சிலப்பதிகார காலத்தில், அசோகன் காலத்தில், ஆழ்வார்கள் காலத்தில், பல்லவர் காலத்தில், பல ஆண்டுகளாகவே, தமிழ்நாட்டின் வட எல்லையாக இருக்கும் திருவேங்கடத்தை இந்த இராஜராஜன் ஒருபோதும் கைவிடமாட்டான். திருவேங்கடம் தமிழருக்குத்தான் உரியது என்பதை நிலைநாட்ட எங்கள் சோழகுல முன்னோரான ஆதித்த சோழர் நடத்திய எல்லைப் போரையும், அவர் உயிர் துறந்த தொண்டைமானூற்றூரில் அவர் பெயரால் ஆதித்தேஸ்வரம் கோயில் கட்டப்பட்டதையும் இராஜராஜன் ஒருபோதும் மறக்கவும் மாட்டான்! மக்களும் மறக்கவிடமாட்டார்கள்!

**மதுராந்தகர் :** நம்முடைய வடவேங்கடத்துக்கு அப்பால் வேங்கி நாடு. வேங்கி நாட்டின் வழியாகத்தான் இரட்டபாடி சத்தியாசிரயனோ கங்கை மன்னர்களோ நம் நாட்டிற்குள் நுழையமுடியும். வேங்கிநாடு நம் சோழ சாம்ராஜ்யத்திற்குத் தலைவாசல் போல......நாம் நம்முடைய வாசலைப் பலப்படுத்த வேண்டும்.

**இராஜராஜன் :** (சிரிப்புடன்) வேங்கி நாட்டைப் பலப்படுத்துவது மட்டுமன்று, அமைச்சரே! வேங்கி வேந்தனுக்கும் நமக்குமுள்ள உறவைக்கூடப் பலப்படுத்த வேண்டும்...

[காற்சிலம்புகள் குலுங்க, பாவாடை பதம்பாட, சிற்றுடை சலசலக்க, பருவப்பெண்ணான குந்தவி ஓடி வருகிறாள். அவள் வந்ததும் கலகலவென்றிருந்த சபை ஒருகணம் நிசப்தமாயிருக்கிறது. அனைவரின் முகத்திலும் ஒருவித அச்சம் படர்கிறது.]

**குந்தவி :** அப்பா! அப்பா!

**இராஜராஜன் :** இளவரசி குந்தவி நாச்சியாரே, வருக! வருக!... இல்லை, என் அருமை மகளே வருக, வருக...!

[குந்தவி, குறும்புச் சிரிப்புடன் தன் உதட்டில் விரலை வைத்து, 'போதும்' என்பதுபோல் நடனமுறையில்

அபிநயம் பிடித்துக் காட்டுகிறாள்; பின்னர் சுற்றுமுற்றும் யாரையோ தேடுவதுபோல் பார்க்கிறாள்; பின்புறமுள்ள கைப்பிடிச் சுவரருகே ஓடிக் குனிந்து கீழே எட்டிப் பார்க்கிறாள்; இராஜராஜனை நோக்கித் திரும்பவும் ஓடி வருகிறாள். அவள் ஓடி வரும் வழியிலுள்ள கிழவர்களான உடன் கூட்டத்து அதிகாரிகளனைவரும் சரேலெனப் பின்னெகிறி வழி விட்டு நிற்கிறார்கள்.]

**இராஜராஜன்:** (குந்தவியை நோக்கிப் புன்முறுவலுடன்) குந்தவி! நீ எதிர்பார்ப்பவன் இன்னும் இங்கே வந்து சேரவில்லை!!

**குந்தவி:** வேங்கி நாட்டில் வெற்றி பெற்ற நம் போர் வீரர்களனைவரும் திரும்பி வந்துவிட்டார்கள். **பண்டித சோழ தெரிந்த வில்லிகள்** படைகள் கூடத் திரும்பி வந்து விட்டன. ஆனால் அவர் இன்னும் வரவில்லை!

**இராஜராஜன்:** அவர் என்றால் எவர்?

**குந்தவி:** (வெடுக்கென) என் வீரத் தமையன் இராஜேந்திரர்தான்! எவரை வேங்கி நாட்டிலுள்ள இளைய பரம்பரையை விரட்ட அனுப்பினீர்களோ, எவருடைய வெற்றியைக் கொண்டு மூத்த பரம்பரையைச் சேர்ந்த உங்கள் அருமை நண்பர் சக்தி வர்மருக்கு முடிசூடப் போகிறீர்களோ, அந்த இராஜேந்திரரைத்தான்!

**இராஜராஜன்:** போர்க்களத்தில் நிற்கவேண்டியவள் அந்தப்புரத்தில் இருக்கிறாய்! குந்தவி இங்கே வா... (அவளைத் தனியாக ஒருபுறம் அழைத்துச்சென்று) இங்கே உன் வீரத் தமையனை மட்டும் நீ எதிர்பார்க்கவில்லை. அவனோடு வரப்போகும் விமலாதித்தனையும் எதிர்பார்க்கிறாய்.

**குந்தவி:** அது யார் விமலாதித்தன்...?

**இராஜராஜன்:** என் அருமை நண்பர் சக்தி வர்மரின் தம்பி, வேங்கிநாட்டு யுவராஜன் விமலாதித்தன்.

[குந்தவி வெட்கத்துடன் முகத்தைத் தன் இரு கைகளாலும் மூடிக்கொண்டு உள்ளே ஓடி மறைகிறாள்.]

**இராஜராஜன் :** (அவள் போகும் திசை நோக்கிப் புன்னகையுடன்) என் குந்தவி இன்னும் குழந்தையாகவே இருக்கிருள்!

[கிழவரான சக்திவர்மர் தம் கையில் ஒரு பன்றிக் கொடியுடன் வெற்றிக் களிப்பில் தள்ளாடிய வண்ணம் வருகிருர்.]

**சக்திவர்மர் :** (இராஜராஜனை நோக்கி) சக்கிரவர்த்திகளே! உங்கள் சோழகுல சூரியோதயத்தின் முன் எங்கள் வேங்கி நாட்டுச் சந்திரோதயத்தையும் நாங்கள் மறந்து விடவில்லை. இருபத்தேழு ஆண்டுகளாக நாடிழந்து உரிமை இழந்து தலைமறைந்து திரிந்த எங்கள் மூத்த பரம்பரையை மீண்டும் அரியணை ஏற்றப்போகிறீர்கள். (தன் பின்னல் வரும் இராஜேந்திரனைச் சுட்டிக் காணபித்து) தங்கள் வீரக் குமாரர் பண்டிதச் சோழ இராஜேந்திரர் செய்த படையுதவிகளை எங்கள் வேங்கிநாடு என்றென்றும் மறக்காது...!

**இராஜேந்திரன் :** நம் சோழநாட்டிலிருந்து கைக்கோளப் பெரும் படையும் மூன்று மகாசேனைகளும் இந்தப் பெரியாருக்குத் துணைபலமாக வருகின்றன என்று கேட்டவுடனேயே வேங்கி அரியணையிலிருந்து இளைய பரம்பரை பறந்தோடிவிட்டது, தந்தையே!

**பாலதேவர் :** இதன்மூலம் இளைய பரம்பரையை ஆதரித்த இரட்டபாடி நாட்டு மன்னன் சத்தியாசிரயனை நம்முடைய ஜன்ம விரோதியாக மாற்றிக் கொண்டு விட்டோம் என்பதையும் மன்னர் பெருமான் மறத்தலாகாது.

**இராஜராஜன் :** உண்மைதான் பாலதேவரே! அரசியல் சுழலில் நண்பர்கள் விரோதிகளாவதும், விரோதிகள் நண்பர்களாவதும் தவிர்க்க முடியாதனவல்லவா?

[இராஜமுடியும் இராஜவாளும் உள்ள பொற்றட்டை இராஜேந்திரன், தமிழன்னையின் பாதங்களில் கொண்டு போய் வைக்கிருன். "அண்ணு!" என்று குந்தவி ஆவலுடன் உள்ளிருந்து ஓடிவந்து, இராஜேந்திரன் கழுத்தைக் கட்டிக்கொள்கிருள்.]

**குந்தவி :** (சிரிப்புடன்) இராஜேந்திர அண்ணு! வழக்கம்போல் வெற்றிபெற்று வந்த நீ வழக்கம்போல் உன் தங்கைக்கு என்னபரிசு கொண்டுவந்திருக்கிருய்?

**இராஜேந்திரன் :** என்னையும் சக்கிரவர்த்திகளையும், ஏன் உன்னையும் விட மேலான பரிசைத்தான் உனக்குக் கொண்டு வருவேன்!

**குந்தவி :** எனக்குப் புது காட்டிய ஆசிரியரா?

**இராஜராஜன் :** (பரிகாசமாக) உனக்கு நடனம் சொல்லிக்கொடுக்க வருகிற ஆடலாசிரியர்களெல்லாம் உன் வாயைப் பார்த்தே பயந்தோடி விடுகிருர்களே!

**குந்தவி :** சக்கிரவர்த்திகள் பரிகாசம் செய்வதற்குப் பெற்ற மகளைத்தவிர இந்தப் பரந்த இராஜ்யத்தில் வேறு யாருமில்லை போலிருக்கிறது!...

[குந்தவி கோபமாகப்போக முயல்கிருள்; வழியில் நிற்கும் அமைச்சர் மதுராந்தகருக்குப் பின்புறம் அவரது தங்கை வீரமாதேவி மெல்லத் தயங்கித் தயங்கி வந்து நிற்பதைக் காண்கிருள்]

**குந்தவி :** (பரிகாசமாக) அருண்மொழித்தேவ வளநாட்டுப் பருத்திக்குடி உத்தமசோழராகிய அமைச்சர் மதுராந்தக மூவேந்த வேளாரே, உம் தங்கை வீரமாதேவி இங்கே ஏன் வந்தாள் என்று கேளும்!

**மதுராந்தகர் :** (தன் பின்புறம் திரும்பி) வீரமாதேவி...?

**வீரமாதேவி :** (தயக்கத்துடன்) இந்த நன்னுளில் சக்கிரவர்த்திகளைத் தரிசித்து விட்டுப்போகவும், வெற்றி பெற்று வரும் இளவரசருக்கு இந்த வாளைப் பாதகாணிக்கையாகத் தரவுமே வந்தேன்!

[அவளை நோக்கி இராஜேந்திரன் இரகசியமாகப் புன்முறுவல் செய்கிருன். வீரமாதேவியின் கண்களிலும் காதல் நோக்கு பரவுகிறது. அவளைக் குந்தவி தனியாக ஒருபுறம் அழைத்துப்போய் அவளுடைய காதைப்

பிடித்து வேடிக்கையாகக் கிள்ளி இரகசியமாக உரையாடுகிருள்.]

**குந்தவி :** (இரகசியமாக) திருடி! என் அண்ணனின் உள்ளத்தைத் திருடவே இங்குவந்தாய்!

**வீரமாதேவி :** உஷ்! இளவரசி...சக்கிரவர்த்திகளின் காதில் விழப்போகிறது.

**குந்தவி :** விழாது! விழுந்தாலும் உங்கள் விஷயம் தம் காதில் விழாதது போலவே அவர் நடிப்பார். என் தந்தையின் குணம் எனக்குத் தெரியாதா?

**வீரமாதேவி :** இளவரசி குந்தவி நாச்சியாரே, தயவு செய்து...

**குந்தவி :** உங்கள் கண்கள் காட்டிக்கொடுக்காததை என் வாய் ஒன்றும் காட்டிக்கொடுத்து விடாதடி...

[வீரமாதேவியின் கையைப் பரபரவென்று இழுத்துக் கொண்டு குந்தவி உள்ளே ஓடுகிருள்.]

[இராஜேந்திரனை இராஜராஜன் தனியாக ஒருபுறம் அழைத்துப்போகிருன்.]

**இராஜராஜன் :** இராஜேந்திரா! உன் தங்கைக்கு என்ன பரிசு கொண்டு வந்திருக்கிருய்? அதாவது அவளையும் உன்னையும் என்னையும்விட மேலான பரிசு என்ன கொண்டு வந்திருக்கிருய்?

**இராஜேந்திரன் :** (சிரிப்புடன்) வேங்கிநாட்டின் சந்திரோதயத்தை!

**இராஜராஜன் :** (கோபத்துடன்) என்னது, உன் பரிசாகவா...?

[இராஜேந்திரன் சட்டெனத் தன் சிரிப்பை அடக்கிக்கொள்ளவே, அவனுடைய முகத்தை உற்றுப் பார்த்த இராஜராஜன் ஒருகணம் கழித்து 'இடி இடி' யெனச் சிரிக்கிருன். இராஜேந்திரனும் கல கலவெனச் சிரிக்கிருன். இருவரும் சிலே அருகில் வருகிருர்கள். பேரிகை முழக்கங்கள் கேட்கின்றன.]

**இராஜராஜன் :** சக்திவர்மரே! ஏன் மணி மகுடம் புனையாமல்...

**சக்திவர்மர் :** புகழ்பெற்ற ராஜராஜ சோழ தேவர் தம் பொற்கரங்களாலேயே...

**இராஜராஜன் :** வேங்கிநாட்டுச் சக்திவர்மருக்கு முடி சூட்டுவேன்!

[பேரிகைகள் முழங்குகின்றன. கொம்புகள் ஊதுகின்றன. "இராஜராஜசோழ மித்திர சந்திரகுலப் பிரகாச, வேங்கிவேந்தர் சக்திவர்மர் வாழ்க!" என்னும் வாழ்த்தொலிகள் தொடங்குகின்றன. சக்திவர்மரின் தலையில் இராஜராஜன் கிரீடத்தைச் சூடும்போது, "சற்றுப் பொறுங்கள்" எனக் கூவிக்கொண்டே விமலாதித்தன் ஓடி வருகிறான்.]

**விமலாதித்தன் :** என் தமையன் தலையை அலங்கரிக்கப்போகும் இந்த மகுடம் எந்த முறையில் சூட்டப்படுகிறது என்பதை அறிவித்தால் இன்னும் சிறப்பாக இருக்கும்!

**இராஜராஜன் :** விமலாதித்தா! இதிலென்ன சந்தேகம்? அருமை நண்பர் என்ற முறையில்தான். நாங்கள் வெறும் படையுதவிதான் அனுப்பினேமே தவிர வேங்கி அரசுரிமையை வென்றது உன் படைவரிசைகள்தாம். அதுவும், இந்தப் பெரியவர், நான் பாகிநாட்டு தெலுங்குவீமனை வெல்வதற்குப் படைத்தலைமை ஏற்றதற்காகப் பரஸ்பர உதவி; என் நட்பின் பரிசு!

**விமலாதித்தன் :** (சக்திவர்மன் கையிலிருந்த பன்றிக்கொடியைத் தன் கையில் வாங்கிக்கொண்டு) அவ்வாருனல் இந்த உறவை நான் வரவேற்கிறேன். நிபந்தனையற்ற சுதந்திரத்தைத் தான் எங்கள் வேங்கிநாடு விரும்பும்!

[சக்திவர்மனுக்கு இராஜராஜன் முடிசூட்டுகிருன். மங்கள வாத்தியங்கள் ஒலிக்கின்றன. "பொன்னி வளநாடு வாழ்க! வேங்கிவளநாடு வாழ்க! சூரியகுலப் பிரகாச சோழமண்டலம் வாழ்க! சந்திரகுலப் பிரகாச

வேங்கி மண்டலம் வாழ்க !'' என்னும் வாழ்த்தொலிகள் கிளம்புகின்றன.]

**சக்திவர்மர் :** இராஜராஜ சோழ தேவர் என் தம்பியை மன்னிக்கவேண்டும். விமலாதித்தன் கொஞ்சம் வாய்த்துடுக்கு உள்ளவன். என்றால் அவன் வாயை அடக்கவே முடியவில்லை!

**இராஜராஜன் :** (சிரிப்புடன்) உமக்கு ஒருதம்பி வாய்த்திருப்பது போல, எனக்கும் மகளொருத்தி வாயாடியாக வாய்த்திருக்கிறாள். (விமலாதித்தன் அருகில்வந்து) இளமைக்கு எழுச்சியும் உணர்ச்சியும் இயல்பல்லவா?...விமலாதித்தா!...இராஜராஜன் இந்தப் போரில் உதவிபுரிந்தது உங்கள் வேங்கிநாட்டை அடிமைப்படுத்துவதற்கன்று. சோழரும் வேங்கியரும் என்றும் நல் உறவுகொண்டு வாழ வேண்டும் என்பதே என் விருப்பம்! உன் நாடு என்றும் தனியரசாகவே இருக்கும். கவலைவேண்டாம்!

**சக்திவர்மர் :** தங்களுடைய சைவமதத்தை நான் பின்பற்றும்போது, என் தம்பி விமலாதித்தன் சமணமதத்தின் சமதர்மத்தைப் பின்பற்றுகிறான்.

**இராஜராஜன் :** எம்மதமும் சம்மதம் என்று நினைப்பவன் இராஜராஜன்! அரசியலுக்கும் மதத்திற்கும் எந்த விதச் சம்பந்தமும் இல்லை.

**விமலாதித்தன் :** (தமிழன்னையின் சிலை முன்சென்று) தமிழ்ப் பேரரசே! உங்கள் தமிழன்னைக்குக் காற்சிலம்புகளாகச் சிலப்பதிகாரத்தையும் கைவளையலாக வளையாபதியையும், இடைக்கு மணிமேகலையையும், கழுத்துக்கு சிந்தாமணியையும், காதுகளுக்குக் குண்டலகேசியையும் தந்தது எங்கள் சமணமதந்தான்!

**இராஜேந்திரன் :** விமலாதித்தா! நாகப்பட்டினத்தில் கடாரத்தரசன் புத்தர் பிரானுக்கு ஒரு பௌத்த விகாரம் கட்டத் தொடங்கியுள்ளான். அதற்கு நிவந்தமாக ஆனைமங்கலம் என்கிற ஊரைப் பள்ளிச் சந்தமாக தந்தேதோடு, அதற்கு இராஜராஜப் பெரும்பள்ளி என என் பெய

ரையே வைக்கப்போகிறேன். புறச்சமயங்கள் எனக்குப் புறம்பு அல்ல.

**சக்திவர்மர் :** என் தம்பியைச் சக்கிரவர்த்திகள் மன்னிக்கவேண்டும். அவன் தங்களிடம் பேசும்விதம் தெரியாதவன்.

**இராஜராஜன் :** (சிரிப்புடன்) நாட்டில் பேச்சுரிமை வளரவேண்டும் என விரும்புபவன்தான் இந்தச் சோழ நாட்டு இராஜராஜன்.

**விமலாதித்தன் :** (சிரிப்புடன்) அதைப் பிதற்றல் உரிமையாகக் கருதாதவன்தான் இந்த வேங்கிநாட்டு விமலாதித்தன்!

[விமலாதித்தன் கண்கள் சுற்று முற்றும் குந்தவியைத் தேடுகின்றன]

**இராஜேந்திரன் :** (சிரிப்புடன்) விமலாதித்தா, இங்கே எதைத் தேடுகிறாய்?

**விமலாதித்தன் :** (சிரிப்புடன்) தேடக்கூடிய பொருளைத்தான் தேடுவேன்!

**இராஜேந்திரன் :** (சிரிப்புடன்) உன் உள்ளத்தில் உள்ளதை வெளியே தேடுகிறாய்.

[இருவரும் சிரிக்கிறார்கள்]

# காட்சி : 2

## அரண்மனையில் ஒரு பகுதி. பகல் நேரம்.

[திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி எனும் சிவனடியார் தேவாரம் பாடியவண்ணம் தம் கோஷ்டியுடன் வருகிறார்.]

தலையே! நீ வணங்காய்!
தலை மாலை தலைக்கணிந்து
தலை யாலேப்பலி தேரும் தலைவனைத்
தலையே நீ வணங்காய்!......

கண்காள்! காண்மின் களோ!
கடல் நஞ்சுண்ட கண்டன் தனை
எண்தோள் வீசிநின்று ஆடும்பிரான் தனைக்
கண்காள் காண்மின் களோ!

செவிகாள்! கேள் மின்க ளோ!
சிவன் எம் இறை செம்பவள
எரிபோல் மேனிப்பி ரான்திறம் எப்போதும்
செவிகாள் கேள் மின்க ளோ!

வாயே! வாழ்த்து கண்டாய்!
மதயானை உரி போர்த்துப்
பேய் வாழ் காட்டகத்(து) ஆடும்பி ரான்தனை
வாயே வாழ்த்து கண்டாய்!

[—குந்தவ்வையார் ஆவலுடன் எதிர்வந்து வரவேற்கிறார்.]

**குந்தவ்வையார் :** *நம்பியாண்டார் நம்பிகளே, வணக்கம் !*

**நம்பியாண்டார் நம்பி:** *(ஆவலுடன்) இராஜராஜ சோழ சக்கிரவர்த்திகளின் மதிப்புக்குரிய தமக்கையாரா? குந்தவ்வைப் பிராட்டியாரா? வந்தியத்தேவன் என்னும் மகா வீரனை மணந்தும் பிறந்தகத்திலே தங்கி எம்பெருமானுக்குச் சைவத் திருப்பணியாற்றும் பெருமாட்டியாரா? வணக்கம்!*

**குந்தவ்வையார் :** *சிறு வயதிலே தாயை இழந்த இராஜராஜனுக்குத் தாய்போல இருந்து வளர்த்ததால் என்னிடம் மிகவும் மதிப்புண்டு!*

(இராஜராஜன், விமலாதித்தன், அமைச்சர் மதுராந்தகர், இராஜதந்திரி பாலதேவப் பட்டரையர் முதலானோர் வருகிறார்கள்.)

**நம்பியாண்டார் நம்பி:** *(அந்தாதி பாடுகிறார்.)*

ஓடிடும் பஞ்சேந் திரியம் ஒடுங்கி என் உள் வினைகள்
வாடிடும் வண்ணநின் றெத்தவஞ் செய்தனன் வானிலுள்ளோர்
சூடிடும் சீர்த்திருப் பாதத்தர் தொண்டத் தொகையிலுள்ள
சேடர்தம் செல்வப் பெரும்புகழ் அந்தாதி செப்பிடவே

**இராஜராஜன்:** ஆகா! திருத்தொண்டர் திருவந்தாதி தித்திக்கிறது!

**குந்தவ்வையார்:** இராசராசா! இவர்தாம் நான் சொன்ன நம்பியாண்டார் நம்பி! திருவாரூர் தியாகேசப் பெருமானின் சந்நதியில் தேவாரப் பதிகங்களைக் கேட்டதிலிருந்து உன் உள்ளம் உருகிற்று என்றாயே...

**இராஜராஜன்:** ஆமாம்! ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் என்பன போன்ற உயரிய தேவாரக் கருத்துகள் நாடெங்கும் பரவ வேண்டும் என்றும் சொன்னேன்!

**குந்தவ்வையார்:** மூவர் தேவாரப் பதிகங்களையும் இவர் சைவத் திருமுறைகளாகத் தொகுக்க விரும்புகிறார். இனி நீ சைவத் திருப்பணி செய்ய வேண்டாமா? உன் பாட்டனார் கண்டராதித்தர் கூட திருவிசைப் பாவில் ஓர் பதிகம் பாடியவராயிற்றே......

**நம்பியாண்டார் நம்பி:** அப்பர், சுந்தரர், ஞான சம்பந்தர், இம்மூவரின் தேவாரச் சுவடிகளும் அவர்களது கைமுத்திரைகளுடன் சிதம்பரத்தில், பொன்னம்பலத்தில், மேற்றிசை அறையில் இருக்கின்றன. ஆனால் தில்லை வாழ் மறையவர் அத் திருவறையைத் திறந்துவிட மறுக்கின்றனர். மன்னர் சொன்னாலும் மறுக்கக் கூடியவர்கள்......

**குந்தவ்வையார்:** நம் முன்னவரான ஆதித்த சோழர் கொங்கு நாட்டை வென்று பொன் கொணர்ந்து சிற்றம்பலத்தைப் பொன்னம்பலமாக்கியதையுமா அவர்கள் மறந்து விட்டார்கள்?

**இராஜராஜன்:** மறுப்பிற்கு அவர்கள் சொல்லும் காரணம்......

**நம்பியாண்டார் நம்பி:** அப்பர், சுந்தரர், ஆளுடை பிள்ளையார், அம் மூவருமே வந்தால்தான் அவர்களது தேவாரச் சுவடிகளுள்ள திருமறையைத் திறக்க முடியும் என்கிறார்கள். அது முடியக் கூடிய காரியமா?

**இராஜராஜன்:** (தீர்மானமான குரலில்-) சிவபதவி அடைந்துவிட்ட அம் மூன்று நாயன்மார்களையும் திரும்பி

வரச் சொல்வோம். தில்லைத் திருச்சபை முன்னும் நிறுத்து வோம்!! (அனைவரும் திகைக்கும்போது இராஜராஜன் மட்டும் சிரித்த வண்ணம், மதுராந்தகரின் பக்கம் திரும்பி) அம்மூன்று நாயனுர்களுக்கும் படிமங்கள் செய்து வாகனங்களில் ஏற்றித்தில்லைத்திருவறையின்முன் கொண்டுவந்து நிறுத்துங்கள்! அப் படிமங்களை நாயனுர் கள் அல்ல எனச் சொல்ல முடியுமா? விக்ரகங்களைக், கடவுளர் அல்ல எனக் கூற முடியுமா அம் மறையவர்கள்?

**மதுராந்தகர்:** (புன்னகையுடன்) அரசர் தம் அதிகாரத்தை உபயோகிக்க விரும்பவில்லை; தம் இராஜ தந்திரத்தாலேயே காரியசித்தி பெற விரும்புகிறுர்!

**இராஜராஜன்:** நம்பியாண்டார் நம்பிகளே, பொன் னம்பலத்துள்ளே இருட்டறையில் கிடக்கும் தேவாரச் சுவடிகளை மீட்டுத் தருவேன், அவற்றைத் திருமுறை களாக வகுக்கும் தங்கள் திருப்பணி விரைவில் நிறை வேற வேண்டும்,

**நம்பியாண்டார் நம்பி:** மன்னர் மன்னவா! தங்கள் அரிய முயற்சியால் சைவம் தழைத்தோங்குமாக.

[நம்பியாண்டார் நம்பி தம் குழுவினரோடு தேவாரம் பாடிக்கொண்டு போகிறுர் ]

தேடிக் கண்டு கொண்டேன்
திரு மாலொடு நான்முகனும்
தேடித் தேடொணுத தேவனைஎன்உளே
தேடிக் கண்டு கொண்டேன்!

[நம்பியாண்டார் குழுவினரை வழியனுப்பி விட்டுக் குந்தவ்வையார் திரும்பிவருகிறுர்.]

[குந்தவி "அப்பா அப்பா!" என ஓடி வருகிருள்; விம லாதித்தனைக் கண்டு தன்தந்தையின் பின் நாணிநிற்கி ருள். அவளும் விமலாதித்தனும் கண்ணேடுகண்ணினை நோக்குகின்றனர்.]

[அது சமயம் முத்துப்பல் கவிராயரும், மேதினிராய ரும் வருகிருர்கள். முத்துப்பல்லர் சொத்தைப் பல்

லுடையவர்; மேதினிராயர் அளவு மீறிய பருத்த உருவினர்.]

**மேதினிராயர்:** கண்ணெடு கண்ணிணே நோக்கு ஒக்கின் வாய்ச் சொற்கள் என்ன பயனுமில.

**முத்துப்பல் கவிராயர்:** கண்ணுக்கும் கண்ணுக்கும் கொண்டாட்டம், பெண்ணுக்கும் ஆணுக்கும் திண்டாட்டம்

(விமலாதித்தன் அவர்களே வியப்புடன் நோக்குகிருன்)

**இராஜராஜன்:** (விமலாதித்தனே நோக்கி) இவர்கள் நம் அரசவைப் புலவர் குழுவைச் சேர்ந்தவர்கள்! நகைச் சுவை நாவலர்கள்!

**முத்துப்பல்லர், மேதினிராயர் :** (ஏககாலத்தில்) வேங்கிநாட்டு வேங்கையே! வணக்கம்!

**விமலாதித்தன்:** வணக்கம்!

**முத்துப்பல்லர்:** எம்மை மோனேப் புலவர் முத்துப்பல் கவிராயக் கவிச் சிங்கம் என்பர் கற்ருேர்.

**மேதினிராயர்:** எம்மை மேற்கோள் புலவர் மேதினிராயர் என்பர் எம் மேன்மை யறிந்தோர்.

**முத்துப்பல்லர் :** ஆமாம்! மே தினி ராயர்!

**இராஜராஜன்:** என்ன குழந்தாய் குந்தவி, விமலாதித்தனே நேரில் கண்டதும் மறைந்து கொள்கிருய்......?

**மேதினிராயர்:** நாணிக் கண் புதைத்தல் நங்கையர்க்கு அழகு!

**முத்துப்பல்லர்:** வெறித்து நோக்குதல் வேங்கையர்க்கு அழகு!

**இராஜராஜன்:** (குந்தவியை விமலாதித்தனுக்கு அறிமுகப்படுத்தும் விதத்தில் வாஞ்சையுடன் பரிகாசமாக) இவள்தான் சின்னக் குந்தவி! ஆனல் பெரிய குந்தவ்வை யாரையும் ஆட்டிவைக்கக் கூடிய இளவரசி!

**விமலாதித்தன்:** இளவரசி குந்தவி நாச்சியாரே, வணக்கம்,

[குந்தவி வெட்கத்துடன் தன் இரு கைகளாலும் முகத்தைப் புதைத்துக் கொள்கிறாள்.]

**இராஜராஜன்:** என்ன குழந்தாய் குந்தவி......அவனைப்பற்றி ஓயாமல் கேட்பாயே......குழந்தைகளாய் இருக்கும்போது விளையாடிப் பிரிந்தீர்கள்......அதனால் அடையாளம் தெரியவில்லை போலிருக்கிறது...

**விமலாதித்தன்:** (புன்னகையுடன்) என்ன இளவரசி இன்னும் வாயையே திறக்கவில்லை......?

**இராஜராஜன்:** (பரிகாசமாக) இவள் வாயைத் திறந்தால் மறுபடி அதை மூடவே முடியாது!

**குந்தவி:** போங்களப்பா! அவர் யார் எனச் சொல்லாமல்......!

**இராஜராஜன்:** அவனுடைய நாமம் விமலாதித்தன் அவனுடைய ஊர் வேங்கி. அடுத்தபடியாக அவன் எப்படிப்பட்டவன் எனக் கேட்கிறாயா...?

[முத்துப்பல் கவிராயரின் கையிலிருந்த தாளத்தை வாங்கி, வேடிக்கையாகத் தேவாரப் பாடலொன்றின் இரு அடிகளைப் பாடுகிறான்:]

முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவன்இருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்...

**குந்தவி:** (வெடுக்கென குந்தவ்வையாரை நோக்கிப் பாதி ஆனந்தமும் பாதிக் கோபமும் கலந்த குரலில்) அத்தை, பாருங்கள் அப்பாவை!

**குந்தவ்வையார்:** [இராஜராஜனை நோக்கிச் கண்டிக்கும் குரலில்] இராசராசா! உனக்கு இவ்வளவு வயதாகியும் இன்னும் குழந்தையாகவே இருக்கிறாய்!

**இராஜராஜன்:** என்ன செய்வது? குழந்தைகளோடு இருக்கும்போது குழந்தையாகவே ஆகி விடுகிறேன், இராஜதந்திரிகளோடு இருக்கும்போது படுகிழவனாகி விடுகிறேன்......சூழ்நிலைக்கு எவனும் விலக்கல்ல......

**குந்தவ்வையார்:** [குந்தவியை நோக்கி] குந்தவி! உன் காதில் என்னவோ புதிதாய்த் தொங்குகிறதே, அதென்னடி ஆபரணம்?

**குந்தவி:** போங்கள் அத்தை! நீங்கள் சுத்தக் கருநாடகம். என் காதில் தொங்குகிறது ஒரு விதத் தொங்கட்டான். சோனகச்சிடுக்கின் கூடு என்பது போல் புதிதாகக் கப்பல் வியாபாரிகள் கொண்டு வந்த ஆபரணம், இதை அணிவதுதான் இப்போது நாகரிகம், அத்தை!

**இராஜராஜன்:** [குந்தவியை நோக்கி] குந்தவி! உன் பூந்தோட்டத்தில் புதிது புதிதாகப் பல நாடுகளிலிருந்தும் புதுரகப் பூக்களை வரவழைத்துப் பயிரிடுகிறாயே,... அரண்மனைக்கு வருவோரையெல்லாம் அவற்றின் அழகை வர்ணிக்கும்படி உயிரை வாங்குகிறாயே. விமலாதித்தன் அவற்றைப் பார்க்கவேண்டாமா?

> [குந்தவி நாணத்துடன் போகிறாள். தன் பின்னால் விமலாதித்தன் வருகிறானா எனத் திரும்பிப் பார்த்து ஒரு கணம் நிற்கிறாள். விமலாதித்தன் அவளைப் பின் தொடர்ந்ததும் இருவரும் உதட்டோரங்களில் துள்ளும் புன்னகையுடன் போகிறார்கள்.]

**இராஜராஜன்:** [அவர்கள் போகும் திசை நோக்கி] மதுராந்தகரே, பார்த்தீரா? ஜோடிப் புறாக்களையும் சாதகப் பக்ஷிகளையும் போல!

**மதுராந்தகர்:** அதுதான் வேங்கி நாட்டிற்கும் நம் சோழநாட்டிற்கும் இருக்க வேண்டிய இராஜ்ய உறவு, மன்னவ......

> [நகைச் சுவைப் புலவர்களைத் தவிர ஏனையோர் போகிறார்கள். இராஜதந்திரி பாலதேவர் சிந்தனையோடு போய்க்கொண்டிருக்கிறார். அவரை முத்துப்பல் கவிராயர் கூவி நிறுத்தி உரையாடுகிறார்.]

**முத்துப் பல்லர்:** (பால பட்டரையரிடம்) ஏனையா, இராஜதந்திரியாரே......! ஜோடிப் புறாக்கள் இருக்குமிடத்தில் கழுகும் வட்டமிடுவது வழக்கமாயிற்றே? இங்கே கழுகு......?

**மேதினிராயர்:** மனிதக் கழுகுகள் எங்கும் வசிக்குமையா! அவற்றைக் கண்டு கொள்வதற்கு அறிவுக்கண் அதிகம் வேண்டும், ஐயா!

**பாலதேவர்:** காலம், இடம், சந்தர்ப்பம் தெரியாமல் ஏனய்யா உளறிக் கொட்டுகிறீர்கள்?

**முத்துப் பல்லர்:** உளறல் என்பது உண்மையின் மறு பெயர்!

**மேதினிராயர்:** இராஜதந்திரியார் வெகுளிக்கு இடங் கொடுத்தலாகாது! நம் கவிராயர் கழுகுப் புராணம் எழுதிக் கொண்டிருக்கிறார். ஜோடிப் புறாக்கள் என்று மன்னர் பெருமான் சொன்னதும் இவருக்குக் கழுகு கவனத்தில் பட்டது போலும்!

**பாலதேவர்:** (பரிகாசமாக) ஏனையா புலவரே! நீர் புராணமும் பாடுவீரா?

**முத்துப் பல்லர்:** பாடுவேனா? மோனைப் புலவர் முத்துப்பல் கவிராயர் கவிச்சிங்கம் பாடுகிறார் என்றால், அட போமையா, சாகலாம்!

**பாலதேவர்:** வேண்டாமய்யா! இப்போது நீர் பாடவும் வேண்டாம்! நான் சாகவும் வேண்டாம்!

[பாலதேவர் போகிறார்]

**மேதினிராயர்:** நன்றாகப் போட்டீரய்யா ஒரு போடு! நம் இளவரசி குந்தவி நாச்சியாரும் விமலாதித்தரும் கண்ணோடு கண்ணிணை நோக்கியபோது, இந்தப் பால தேவரின் முகத்தைக் கவனித்தீரோ?

**முத்துப் பல்லர்:** கழுகுப் பார்வையாகக் காணப் பட்டது! அதனால்தானே அதைப்பற்றிப் பேச்செடுத்தேன் அவரிடமே!

**மேதினிராயர்:** நன்று! நன்று! உம்முடைய அறிவே அறிவு!

**முத்துப் பல்லர்:** நன்று! நகரும்!

[போகிறார்கள்.]

## காட்சி : 3

### குந்தவியின் பூந்தோட்டம்; நிலாவெளிச்சம்.

[விமலாதித்தனும் குந்தவியும் தனித்து நிற்கிறார்கள். குந்தவியின் முகத்தில் நாணம்; விமலாதித்தன் முகத்தில் சிரிப்பு.]

**விமலாதித்தன் :** வானத்தில் என் குறிக்கோளாக என சந்திரகுலம். வையத்தில் என் கண்முன்னால் சூரிய குலம்...இரண்டும் ஒன்று கலந்தால் வைகறை உதயம். இரண்டும் ஒன்றோடொன்று பிணங்கினால், அதுவே அந்தி நேரம்...

[குந்தவி மெல்லச் சிரிக்கிறாள்—விமலாதித்தன் அவளை உற்றுப் பார்க்கும்போது அவள் தலைகுனிந்து நிலத்தை நோக்குகிறாள். அவன் முகத்தைத் திருப்பிக்கொள்ளும்போது மெல்ல அவன் முகத்தை ஏறிட்டுப்பார்க்கிறாள்.]

**விமலாதித்தன் :** இளவரசி குந்தவி நாச்சியாரே... என்ன வாயைத் திறக்கக் காணோம்?

**குந்தவி :** நீங்கள் கண்ணை மூடினால்தானே...? என்னையே ஏன் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டு நிற்கிறீர்கள்...?

**விமலாதித்தன் :** காலதேவனின் கைத்திறமையைக் கண்டு வியந்து நிற்கிறேன்.........அன்றும், இன்றும்...ஒன்பது ஆண்டுகளுக்குள் எவ்வளவு மாற்றம்?...காலதேவன் கைதேர்ந்த ஒரு சிற்பிதான்...சிறிய காலத்திற்குள் உளி கொண்டு வெட்டாமல் உன்னிடம் எவ்வளவு கற்பனை யுருவங்களைக் கருத்தையள்ளும்படி செதுக்கியிருக்கிறான்...?

மாக்கனிர் போலிருந்த மேனி பொன்னிறமானது. வெள்ளைக் கவிபோல் கள்ளமறியாதிருந்த உன் கண்களில் கருத்துகள் பொங்குகின்றன...கொவ்வை வாயில் குமிழ் சிரிப்பு. ஆனால் இரண்டுமட்டும் மாறவே இல்லை. ஒன்று உன் கண். இன்னொன்று உன் குறும்புத்தனம்.

**குந்தவி :** (வெடுக்கென) ஐயா, வேங்கி நாட்டவரே. உமக்கு மலர்களின் அழகைக் காணும்படிதான் கட்டளை. மங்கையரின் அழகை வர்ணிக்க அல்ல!

[விமலாதித்தன் அவள் அருகில் நெருங்கி வருகிறான். குந்தவி வெட்கத்துடன் தன்னிரு கைகளாலும் முகத்தை மூடிக்கொள்கிறாள்.]

**விமலாதித்தன் :** (உணர்ச்சியுடன்) குந்தவி...

**குந்தவி :** (வெடுக்கெனத் தலை நிமிர்ந்து) குந்தவி! மாலையிட்டவன்போல் கூப்பிடுகிற குரலைப் பார்!--வேங்கி இளவரசே, உமக்கும் எனக்குமுள்ள உறவு என்ன தெரியுமா?

**விமலாதித்தன் :** உயிருக்கும் உடலுக்குமுள்ள உறவென்ன? உணர்ச்சிக்கும் உள்ளத்திற்குமுள்ள உறவென்ன? பூவிற்கும் மணத்திற்கும் உள்ள உறவென்ன? அதே உறவுதான் எனக்கும் உனக்கும்...?

**குந்தவி :** என்னது...?

**விமலாதித்தன் :** குந்தவி, ஏன் உன்மனதை மூடப்பார்க்கிறாய்? நீ பார்த்தாயே ஒரு பார்வை. அது நம் பழைய கனவுகளைக் கிளப்பிவிட்டது. இரவிலும் பகலிலும், கனவிலும், நனவிலும் நாமிருவரும் சேர்ந்து விளையாடிய விளையாட்டுகள், வாஞ்சை ததும்ப ஆடிய வார்த்தைகள், யாவும் நினைவுப் படலங்களாக விரிகின்றன...குந்தவி, அந்தச் சின்னஞ் சிறு வயதில், முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள் என்கிற தேவாரப்பாடலை முந்நூறு தடவை பாடச் சொல்வாய். மூவாயிரம் விதமாக நீ அதற்கு அபிநயம் பிடிப்பாய்...அந்தப் பழைய நாட்கள்?

**குந்தவி :** வேங்கி இளவரசரே. நான் இன்னும் உம்மோடு கைகோர்த்து மணல்வீடு கட்டி விளையாடிய குழந்தை குந்தவி அல்ல, மன்னர் மன்னனின் கன்னிப் பெண்! தெரியுமா? ஆகையால் நம்மிருவரிடையே உள்ள பரிகாசப் பேச்சை நிறுத்திக்கொள்வோம்!

**விமலாதித்தன் :** அப்படியானல் நீ வாஞ்சை ததும்பப் பார்த்தாயே, அது பொய்யா? வாய் நிறையப் பேசினயே, அது பொய்யா? அரும்பு வயது தொட்டு உள்ளத்தோடு உள்ளம் வைத்து ஊறிவந்த அன்பு வெறும் கானல் நீர்தானு? ஆம்! மெய்தான்…இலங்கை இளவரசனையோ, மாளவ மன்னன் மகனையோ, மணக்க வேண்டியவள், நாடிழந்து உரிமைக்காக உன் தந்தையின் கையை எதிர் பார்த்த இந்த ஏழை வேங்கி நாட்டானை எங்கே மதிக்கப் போகிருய்?

**குந்தவி :** (இளம் விம்மலுடன்) அவ்வாறெல்லாம் சொல்லாதீர்கள். இந்தக் குந்தவி உங்களுக்காகவே பிறந்தவள்; வளர்ந்தவள்; வாழப்போகிறவள்…!

**விமலாதித்தன் :** குந்தவி, ஏன் கண் கலங்குகிருய்? உன் வாழ்க்கையில் முதன் முதலில் நான்தானு உன்னை அழவைக்க வேண்டும்?

**குந்தவி :** (வெடுக்கென) நான் ஒன்றும் அழவில்லை! என்னை யாரும் அழவைக்க முடியாது!!

**விமலாதித்தன் :** சிரிக்கவைக்க?

**குந்தவி :** அதுவும் நான் நினைத்தால்தான் முடியும்!

**விமலாதித்தன் :** (உணர்ச்சி நிறைந்த குரலில்) குந்தவி! நாளை நான் என் வேங்கி நாட்டிற்குப் போய்விடுவேன்! அதற்குப்பிறகு என்னைப்பற்றி நினைப்பாயோ, மறந்து விடுவாயோ!

**குந்தவி :** (பிரிவு என்னும் நினைப்பையே தாங்க முடியாதவளாய்) நாளையே நீங்கள் போகத்தான் வேண்டுமா?

**விமலாதித்தன் :** என் நாட்டின் நிலை அப்படி. புதிதாக உரிமைபெற்ற நாடு; பொறுப்புள்ளவன் போயே தீரவேண்டும் !

**குந்தவி :** மறுபடி நீங்கள் திரும்பி வரும்போது சோனக நாட்டிலிருந்து புதிதாய் ஒரு சிகப்பு ரோஜாச் செடியை வரவழைத்துப் பயிரிட்டு, அதன் முதல் மலரை உங்களுக்காகவே வைத்திருப்பேன் !

**விமலாதித்தன் :** குந்தவி ! வாஞ்சை என்ற வண்ணம் உன் முகத்தில் உணர்ச்சி என்னும் மெருகிடும்போது நீ எவ்வளவு அழகாயிருக்கிறாய், தெரியுமா...

**குந்தவி :** ஆரம்பித்துவிட்டீர்களே, எல்லோரையும் போல...

**விமலாதித்தன் :** உண்மையாகத்தான் சொல்கிறேன், குந்தவி! உன்னைவிட அழகானவள் இந்த உலகத்தில் எவளுமில்லை !

[இராஜேந்திரனும் வீரமாதேவியும் உரையாடிய வண்ணம் வருகிறார்கள்.]

**இராஜேந்திரன் :** உண்மையாகத்தான் சொல்கிறேன், வீரமாதேவி ! உன்னைவிட அழகானவள் இந்த உலகத்தில் ஒருத்தியுமில்லை !

**விமலாதித்தன் :** இல்லை, குந்தவி! உன்னைவிட அழகானவள் இந்தத் திருபுவனத்தில் எவளுமில்லை !

**இராஜேந்திரன் :** (தன் உடைவாளை உருவிய வண்ணம் வந்து) என் வீரமாதேவியைவிட அழகானவள் உண்டு என்று சொல்லுகிறவன் இந்தத் திருபுவனத்தில் யாரவன்...?

**விமலாதித்தன் :** (தன் உடைவாளை உருவி) என் குந்தவியைவிட அழகானவள் எவளுமில்லை என்பதை மறுப்பவன் எவனாக இருந்தாலும் விடேன்!

**இராஜேந்திரன் :** விமலாதித்தா! உன்னைப்போன்ற ஒரு மகாவீரனோடு வாட்சண்டை புரியவேண்டும் என்று

எத்தனையோ நாட்களாக ஏங்கிக்கிடந்தேன். இந்தப் பெண்களின் அழகை முன்னிட்டாவது நாம் இந்த அரிய சந்தர்ப்பத்தில்...

**விமலாதித்தன் :** இராஜேந்திரா! நாம் போரிட்டு உயிர் துறப்பதற்குமுன் எவள் அழகானவள் என்பதை இந்தப் பெண்களின் வாயாலேயே தெரிந்துகொண்டு விடுவோம்...

**குந்தவி :** (வெடுக்கென) இதிலென்ன சந்தேகம்? நான் தான் அழகானவள்!

**வீரமாதேவி :** இல்லவே இல்லை. நான் தான் அழகானவள்!!

**குந்தவி :** அடியே வீரமாதேவி. உன் மூக்கு இன்னும் கொஞ்சம் பெரியதாயிருந்தால் நீயுந்தான் அழகாயிருப்பாய்!

**வீரமாதேவி :** இளவரசியாரே! உங்களுக்கு வாய் இன்னும் கொஞ்சம் சிறிதாயிருந்தால் நீங்களும் அழகாய்த்தானிருப்பீர்கள்!

**இராஜேந்திரன் :** விமலாதித்தா! தன்னைவிட எந்தப் பெண்ணும் அழகில்லை என்று நினைக்கிற இப்பெண்களுக்காக நாம் ஏன் வீணுகச் சண்டைபோட வேண்டும்...?

**விமலாதித்தன் :** ஆமாம். பெண்கள் விஷயத்தில் நாம் கத்தியை உபயோகிக்காமல் கொஞ்சம் புத்தியை உபயோகிப்பதே நல்லது!

**விமலாதித்தன் :** (குந்தவியிடம் ஏதோ கேட்கிருன்)

**இராஜேந்திரன் :** என்ன விமலாதித்தா, இந்தப் பேரழகியை யாரென்று கேட்கிருயா? அமைச்சர் மூவேந்த-வேளாரின் உடன்பிறந்த தங்கை வீர மாதேவி!

**குந்தவி :** ஏனண்ணு? அப்படிச் சுற்றி வளைக்கிருய்? 'என்னுடைய அருமைக் காதலி' என்று ஒரே வார்த்தையில் சொல்லிவிடக் கூடாதா?

[வீரமாதேவி குந்தவியைக் கிள்ளிவிடுகிருள்; பின்னர் நால்வரும் சிரிக்கிருர்கள்.]

## காட்சி : 4

### அரண்மனை பகல் நேரம்.

[முத்துப்பல்கவிராயர், மேற்கோள் புலவர் மேதினி ராயர், இராஜராஜன், மதுராந்தகர், பாலதேவர் முதலியோர் வருகிறார்கள்.]

***முத்துப்பல்லர்:*** *அண்மையில் எம்மால் அரும்பெரும் முயற்சியுடன் எழுதப்பெற்ற ஆந்தை விடு தூது எனும் அரிய நூலை அரசர்க்கரசர் அவசியம் படித்துப் பரிசு அருள வேண்டும்.*

***இராஜராஜன் :*** *ஆந்தை விடு தூதா ?*

***மேதினிராயர் :*** *ஆமாம். குயில், கிளி, நாரை, அன்னம் முதலான பறவைகளை யெல்லாம் முன்பே புலவர்கள் தூதனுப்பிவிட்டார்கள். இவருக்காக எஞ்சி நின்றது ஆந்தை ஒன்றுதான்....*

***முத்துப்பல்லர் :*** *ஆகா : அரிது : அரிது ; தள்ளு தமிழின் தூது இலக்கியத்திலேயே ஆந்தை விடு தூது யாரும் காணாப் புதுமை! தீந்தமிழில் முத்து முத்தான எழுத்தில் திருத்தமாகவே எழுதியுள்ளேன்.*

***இராஜராஜன் :*** *நான் தமிழ் எழுத்தையே சீர்திருத்த விரும்புகிறேன் !!*

***முத்துப்பல்லர் :*** *(திகைத்து) என்ன...?*

***இராஜராஜன் :*** *பாண்டி நாட்டில் வழங்கி வந்த வட்டெழுத்து முறையை மாற்றி நம்முடைய நவீனக் கிரந்த எழுத்து முறையை அங்கு புகுத்தி வருகிறேன். பல நாடுகளில் பலவாறாகச் சிதறி வாழும் தமிழர் பலவிதமான எழுத்து முறைகளைக் கையாண்டால் பலவிதமான லிபிகளின் மூலம் பலவிதமான மொழிகள் ஏற்பட்டுத் தமிழ் சுருங்கிவிடும். ஏற்கனவே தெலுங்கும், கன்னடமும், மலை மொழியும் நம் தமிழ் மொழியிலிருந்து பிறந்து பிரிந்து போய்விட்டன. நான் பாண்டியநாடு சேரநாடு முதலானவற்றை வென்று ஒரே செந்தமிழ்ப் பெருநாடாக்குகிறேன்*

என்ருல், அதற்குக் காரணம் மண்ணுசை அன்று; ஒரே சாகர்கம் ஒரே இனம் என்கிற எண்ணம் என்பது மட்டும் அன்று; தமிழுக்கு ஒரே லிபி ஏற்பட வேண்டும் என்பதே ஆகும். இன்னும் பல நூற்ருண்டுகள் ஆனபிறகும் என்னுடைய இந்தப் புது எழுத்து முறையையே எல்லாத் தமிழரும் கைக்கொள்வார்கள். தமிழ் மொழிக்கு இராஜராஜன் அளிக்கும் சிறந்த பரிசு இந்த எழுத்துச் சீர்திருத்தமே!

**முத்துப்பல்லர்:** பாருமையா பாவலரே! எமையாளும் மன்னரும் எம்மைப்போல் புதுமை புனைகிருர்...

**மேதினிராயர்:** ஆமாம், இரண்டும் புதுமைதான். ஆந்தை இருளைத் தேடுகிறது; ஆதவன் ஒளியைத் தேடுகிருன்!...

[கவலை படிந்த முகத்தினளாய் குந்தவியும் இராஜேந்திரனும் வருகிருர்கள்.]

**இராஜராஜன்:** (மதுராந்தகரை நோக்கி) நேற்றிரவு உம்மிடம் ஏதோ ஒன்றைப்பற்றிப் பேசினேனே...?

**மதுராந்தகர்:** செக்கிறை, தட்டாரப்பாட்டம், தறிப் புடவை, அங்காடிக் கூலி என்று பலவிதமாகத் தொழில்களுக்கு ஏற்றவாறு வரி விதிக்கும் நம் முறை சிறந்ததா, அல்லது எல்லாவிதத் தொழில்களுக்கும் ஒரேமாதிரியான தொழில் வரியும் விற்பனை வரியும் விதிப்பது நல்லதா என்று....

**இராஜராஜன்:** (குந்தவியின் பக்கம் திரும்பிச் சிரிப்புடன்) குந்தவி! பலவிதமான வரிகள் போட்ட ஒரு பட்டுப் புடவையைச் சோனக வியாபாரிகளிடமிருந்து வாங்கினுயே, அது உனக்கு அழகாயிருந்ததா?... இன்று ஏன் உன் அலங்காரமும் அழகும் குறைந்திருக்கிறது...?

**குந்தவி:** எப்படி அழகாயிருக்க முடியும்? பெண்களை அலங்கரிக்க வேண்டிய பொன் நகைகளும் செப்புக் குடங்களும் பொற்காசுகளாகவும் செப்புக் காசுகளாகவும் மாறி வருகின்றனவே...

**இராஜராஜன் :** (மதுராந்தகரை நோக்கி) ஆமாம். நம்முடைய நாணய முறையை மாற்றிப் பழைய பண்ட மாற்று முறையை வழக்கத்திற்குக் கொண்டுவந்தால், பெண்களுக்கு மட்டுமல்ல,நாட்டுக்கே பெரும் பயன் உண்டாகும்! அதுவும் பண்டமாற்றுப் பொருளாக நெல் தானியம் இருந்துவிட்டால், நாட்டில் கள்ள நாணய உற்பத்திக்குப் பதில் உணவு உற்பத்தி பெருகும்...இல்லையா, அமைச்சரே...? (குந்தவியை நோக்கி) குந்தவி! இன்று ஏன் உன் முகத்தில் களையே இல்லை...? ஏன் உயிரே போனவள் மாதிரி நிற்கிறாய்...?

**இராஜேந்திரன் :** விமலாதித்தன் தன் ஊருக்குப் போய்விட்டான்! அவன் திரும்பிவரப் பல ஆண்டுகள் கூட ஆகலாம்!

**குந்தவி :** (வெடுக்கெனக் கோபமாக) அப்பா! அண்ணா! இனிமேல் என்னைப் பரிகாசம் செய்தால் அப்புறம் அத்தையிடம் சொல்லிவிடுவேன்! (வேகமாகச் செல்கிறாள்.)

**இராஜராஜன் :** இராஜேந்திரா! உன் அத்தையிடம் ஏதாவது காரியம் சாதித்துக்கொள்ள வேண்டுமானால் உன் தங்கையிடந்தான் சொல்ல வேண்டும்போலிருக்கிறது!

[அனைவரும் போகிறார்கள்]

# காட்சி : 5

## அரண்மனையில் ஒரு பகுதி ; பகல் நேரம்.

[இராஜராஜன், மதுராந்தகர், ஒரு வணிகர், திருவாய்க் கேள்வி அதிகாரி முதலியோர் வருகிறார்கள்.]

**மதுராந்தகர் :** (வணிகரைச் சுட்டிக்காட்டி) சீன தேசத்திற்கு ஐம்பத்திரண்டு வணிகர் அடங்கிய ஒரு தூதுக் குழு புறப்படுகிறதே, அதன் தலைவர் இவர். கடலில் புயல் இல்லாதிருந்தால், இரவு பகலாகக் கப்பற் பயணம் செய்தால், சீன நாட்டை அடைய ஆயிரத்தி நூற்றைம்பது நாட்களாகுமாம்.

**இராஜராஜன் :** நெடுந்தூரப் பயணந்தான்! ஆனல் அடிவானத்திற்கு அப்பாலும் தமிழர் உறவு கொள்ளத் தயங்கக் கூடாது...தூதுக் குழுத் தலைவரே, நீங்கள் செல்லும் சீன நாட்டு மன்னருக்கு இராஜராஜனின் பரிசுகளாக, ஒரு முத்து மகுடமும் மணியார ஆடையும், திருமுகமும் தருகிறேன். நீங்கள் சீன நாட்டிலிருந்து தாயகம் திரும்பி வரும்போது, அந்நாட்டு நாகரிக முறைகளை, மருந்து மூலிகைகளை, புதுப்புது ஆராய்ச்சி வழிகளை, நம் மண்ணிற்குச் செழிப்பமாக வளரக்கூடிய புதுப் புதுப் பயிர் வகைகளைக் கொண்டு வாருங்கள்.

**மதுராந்தகர் :** ஆணை, மன்னர் மன்னவா! காழகம், சாவகம், இலங்கை, கடாரம், நக்காவரம் முதலான அந்நிய நாடுகளுக்கும் தீவுகளுக்கும் கடல் கடந்து சென்று குடியேறியிருக்கும் நம் தமிழருக்கு ஏதாவது செய்தி உண்டா ?

**இராஜராஜன் :** 'எல்லாம் நம் ஊர், எல்லோரும் நம் உறவினர்' என்னும் நம் புறநானூற்றுக் கருத்தையும், 'எங்கு மக்கள் நல்லமுறையில் வாழ்கிருர்களோ, அதுவே நல்ல நாடு' என்னும் நம் ஔவையாரின் கருத்தையும் அவர்களுக்கு நினைவுபடுத்துங்கள். தமிழர் எங்கெங்கு குடியேறியிருக்கிருர்களோ அவையே தங்கள் சொந்த நாடுகள் என்று நினைக்கட்டும். தமிழ் நாகரிகம் என்பது வெறும் மண் பரப்பு அன்று. பௌத்தம், சைவம் என்பன போல் அதை மக்கள் பரப்புடைய ஒரு பரந்த நாகரிக இலட்சியமாகக் கருதுகிறேன்! இந்தக் கருத்தையே கடல் கடந்து வாழும் நம் தமிழ் மக்களுக்கு இராஜராஜன் விடுக்கும் செய்தியாக எடுத்துச் சொல்லுங்கள்.

[தலைமை வணிகரும், மதுராந்தகரும் ஒருபுறம் செல்ல, இராஜராஜன் வேருெருபுறம் செல்கிருன்.]

**முத்துப்பல்லர் :** (மகிழ்ச்சியில் திளைத்தவராய்) ஆ! வெற்றி! வெற்றி! வெற்றி!

**மேதினிராயர் :** என்னையா, இது! திடீரென்று?

**முத்துப்பல்லர் :** எம் ஆந்தை விடுதூது இலக்கிய வானில்பறக்கப் புறப்படும்போதே,அரசியல்வானில் சீனத் தூதும் புறப்படுகிறது. சிந்தித்துப் பாருமையா! இது என் ஆந்தையின் வெற்றிக்கு அறிகுறி!... இனி நம் இளவரசி நாச்சியாரிடமிருந்து விமலாதித்தருக்குக் காதல் தூதும் புறப்படும்!

**மேதினிராயர் :** ஆமாமையா? காதல் அரும்பிவெகு நாளாகி விட்டதே,...இன்னும் திருமணப் பேச்சையே காணோமே!

**முத்துப்பல்லர் :** அது காலங்கடப்பது நன்றே!

**மேதினிராயர் :** (திகைப்புடன்) ஏனையா?

**முத்துப்பல்லர் :** திருமணத்தன்று தெவிட்டாத ஒரு வாழ்த்துமடல் வழங்கவேண்டும்! அது என் கருத்தில் உருவாகக் காலம் வேண்டாமா?

**மேதினிராயர் :** ஏன், உம் கற்பனைக் குதிரையைத் தட்டிவிடுமே, பறக்கும்!

**முத்துப்பல்லர் :** பறக்க வேண்டாமைய்யா! காதல் விடயத்தில் என் கற்பனைக்குதிரை நொண்டக்கூட மாட்டேன் என்கிறதே!

**மேதினிராயர் :** காரிகையைக் காதலிக்காதவனுக்குக் கவிதை எப்படி ஐயா வரும்?

**முத்துப்பல்லர் :** ஆம்; அகத்துறை அனுபவம் இல்லாதவனுக்குப் புறத்துறை எதுவும் புறம்பு! எனவே ஒரு முடிவிற்கு யான் முனைந்துவிட்டேன்!

**மேதினிராயர் :** என்னையா முடிவு?

**முத்துப்பல்லர் :** அகத்துறை இலக்கணப்படி காதலித்தே தீர்வதென்று!

**மேதினிராயர் :** நல்ல முடிவு! நாம் இருவருமே காதலிப்போம்!

**முத்துப்பல்லர் :** நாமிருவருமா? என்னைய்யா.....

**மேதினிராயர்** : ஊஹூம்! அப்படியில்லை ஐயா! நாம் இருவரும் ஒரு நங்கையைக் காதலிப்போம் என்றேன்!

**முத்துப்பல்லர்** : ஒருத்தியையா ?

**மேதினிராயர்** : என்னையா, எதற்கெடுத்தாலும் குதர்க்கம் பேசுகிறீர்? நீர் ஒருத்தியைக் காதலியும், நான் ஒருத்தியைக் காதலிக்கிறேன்!

**முத்துப்பல்லர்** : சரி! வாருமைய்யா......ஒருத்தியைக் காதலிப்போம்!

(போகிறார்கள்)

## காட்சி : 6

### சோழ நாட்டின் எல்லைப் புறத்தில் ஒரு காடு ; நள்ளிரவு.

[குளிருக்குப் போர்வையொன்றால் உடம்பெல்லாம் போர்த்திக்கொள்பவன் போல் சத்தியாசிரயன் தன் முகத்தையும் மறைத்துக்கொண்டு வருகிறான். அவன் பின்னால் பாலதேவப் பட்டரையர் ஒரு தீப்பந்தத்தை ஏந்தியவண்ணம் திரும்பித்திரும்பிப் பார்த்தவண்ணம் வருகிறார்]

**பாலதேவர்** : என்ன பயங்கரமான இரவு! இராஜராஜனின் நம்பிக்கைக்குப் பாத்திரமான இராஜதந்திரி பாலதேவரின் மாளிகையிலே தமிழர்குலப் பகைவன்! இரகசியமாக என்னிடம் வந்தவன் இரட்டபாடி மன்னன் சத்தியாசிரயன் என்று தெரிந்திருந்தால், நாமிருவரும் என் மாளிகையிலிருந்து திருடர்களைப் போல ஒளிந்து ஒளிந்து வருவதை யாராவது சந்தேகித்திருந்தால், என் கதி என்ன ஆகியிருக்கும்? உன் கதிதான் என்ன ஆகியிருக்கும்? சத்தியாசிரய மன்னனே, உனக்கு எங்கிருந்து இந்தத் துணிவு வந்தது?

**சத்தியாசிரயன்** : நானே நேரே வந்தால்தான் நீர் இராஜராஜனுக்குத் துரோகம் புரிவீர் என்று நினைத்தேன். நீர் நம் இரட்டபாடி நாட்டில் பிறந்தவராகையாலே, நம் மேலைச் சளுக்கிய மேன்மைக்காக இந்தத் துரோகத்தைச் செய்துதான் ஆகவேண்டும்.

**பாலதேவர் :** அயல்நாட்டவன் நான் என்பது தெரிந்திருந்தும் இராஜராஜன் என் மீது எவ்வளவு நம்பிக்கை வைத்திருக்கிறுன் தெரியுமா...?

**சத்தியாசிரயன் :** இந்தத் துரோகத்திஞல் கிடைக்கும் பரிசு...? தமிழரின் சோழ சாம்ராஜ்யத்தின் மீது நம் இரட்டபாடி ஆட்சியின் கொடி! நம் ஆட்சி முறையிலே உள்ள சர்வாதிகாரி பதவி உமக்கு...

**பாலதேவர் :** வேங்கி நாட்டிற்கும் சோழ நாட்டிற்கும் விரோதத்தை உண்டாக்கி அவை ஒன்ருேடொன்று போரிட்டு இரண்டு வல்லரசுகளுமே சிதைந்து விட வேண்டும் என்கிருய். அதற்கு முன்னதாக விமலாதித்தன் குந்தவி திருமணத்தைத் தடுக்கவேண்டும். இவ்வளவுதானே? வேங்கி மண்டலத்தில் பொறுமையுள்ள சக்திவர்மன் விண்ணுலகேகி இப்போது பொறுப்புள்ள வஞக விமலாதித்தன் மணிமுடி சூடியிருக்கிருன். விமலாதித்தன் வாய்த்துடுக்கு உள்ளவஞகையாலே, அவனுக்கும் இராஜராஜனுக்கும் வெகு சுலபமாக விரோதத்தை உண்டாக்கி விடுவேன்!... ஆஞல் சத்தியாசிரயா, உன் குமாரனுக்கு இராஜராஜன் தன் குந்தவியைக் கொடுப்பாஞ?... முட்டாள்! தமிழர் குலத்திற்கு எமன் என்று பகிரங்கமாகவே பட்டயம் தீட்டிக்கொண்டு விட்டாயே...! மறைமுகமாகவே காரியம் சாதிக்கும் நம் பண்பை மறந்துவிட்டாயே!

**சத்தியாசிரயன் :** (நச்சுச் சிரிப்புடன்), உம்முடைய முதிர்ந்த மூளையை உபயோகப்படுத்திஞல் முடியாததும் உண்டோ?

**பாலதேவர் :** முயன்று பார்க்கிறேன்....சீக்கிரம் இந்தச் சோழநாட்டு எல்லையை விட்டுப் போய்விடு... எவஞவது நம்பிக்கையான ஓர் ஒற்றனே ஒவ்வொரு பௌர்ணமியின் போதும் என் மாளிகைக்கு இரகசியமாக

அனுப்பி வை....நீ வராதே...தேவைப்பட்டால் உனக்கு அந்த ஒற்றன் மூலமே உளவு ஓலைகள் கொடுத்தனுப்பு கிறேன்...போ.. உம்...சீக்கிரம்...

[அவனிடம் நிப்பந்தத்தைக் கொடுத்துவிட்டுப் பாலதேவர் இருளில் மறைகிறார். இருவரும் அகன்ற பின், ஒரு மரத்தின் மறைவிலிருந்து பூங்கோதை மூக்காட்டுடன் வந்து பாலதேவரைப் பின்பற்றிச் செல்கிறாள்.]

## காட்சி : 7

### பாலதேவரின் மாளிகை

[இராஜராஜனும், பாலதேவரும் மந்திராலோசனை செய்துகொண்டே வருகிறார்கள்]

***இராஜராஜன் :*** ஆம்; நீர் கூறுவது ஆலோசனைக்கு உரியதுதான்! அரசியலில் யாரையும் யாரும் சந்தேகிக்க வேண்டியது தான்! எந்தப் புற்றுக்குள் எந்தப் பாம்பு இருக்குமெனச் சொல்ல முடியாது...

***பாலதேவர் :*** குழந்தை போன்ற தங்கள் மனது யாரையும் எளிதில் நம்பி விடுகிறது!...

***இராஜராஜன் :*** உம்...! விமலாதித்தனையும் விரோதியாக எண்ணிப் பார்க்க வேண்டியதுதான்,

***பாலதேவர் :*** சந்தேகமென்ன? சோழ சாம்ராஜ்யத்தின் பக்கபலம் இருக்கும்போது, வேங்கி விமலாதித்தன் தனியாகவும் இரகசியமாகவும் பெரும் படை திரட்டுவது ஏன்? அது தன் தற்காப்பிற்கு என்று மட்டும் நான் நினைக்கவில்லை!

***இராஜராஜன் :*** ஆமாம்; நீர் நினைப்பதுபோல் நம் மீது படை எடுப்பதற்கும் திட்டமிட்டிருக்கலாம்!

***பாலதேவர் :*** உமது பகைவன் இரட்டபாடி சத்தியாசிரயன் மேலைச்சளுக்கிய குலம். வேங்கி விமலாதித்தனே கிழைச் சளுக்கிய குலம். இப்போது இருவரும் உம் சோழ நாட்டைப் பங்குபோட்டுக்கொள்ள முயன்றால்...?

**இராஜராஜன்** : எதற்கும் விமலாதித்தனை உடனே இங்கே வரவழைப்போம்!

[பூங்கோதை பூஜைத்தட்டுடன் வருகிறாள்.]

**பூங்கோதை** : சக்கிரவர்த்திகள் வாழ்க! (இராஜ ராஜனை வணங்கிவிட்டு) இராஜதந்திரியாரின் பூஜைக்கு மலர்கள் கொண்டுவந்திருக்கிறேன!

**பாலதேவர்** : ஓ! பூஜைக்கு நேரமாகிவிட்டது!...

[பூங்கோதைபின்தொடர பாலதேவர் புறப்படுகிறார்.]

**இராஜராஜன்** : பாலதேவரே! உங்களுக்கு வேண்டிய பணிவிடைகளை இவள் கவனமாக நிறைவேற்றி வருகிறாளா? யாரிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதில் இவள் நன்கு பயிற்சியுள்ள பெண் என்று கேள்விப்பட்டேன்! இவள் பெயர்கூட ஏதோ... பூவின்...?

**பூங்கோதை** : பூங்கோதை!

**பாலதேவர்** : பூங்கோதை மிகவும் நல்ல பணிப் பெண்!

[பூங்கோதையும், பாலதேவரும் ஒருபுறம் போகிறார்கள். இராஜராஜன் இன்னொரு புறம் போகிறான்.]

# காட்சி : 8

## அரண்மனையின் அவைக்களம்; பகல் நேரம்.

[*தரையில் இரத்தினக் கம்பளம் விரித்து வட்ட வடிவத்தில் வரிசையாகப் பலகை ஆசனங்களும் திண்டுகளும் போடப்பட்டுள்ளன. நடுவில் சக்கிரவர்த்திகள் அமர்வதற்கும் ஓர் ஆசனம் போடப்பட்டுள்ளது. ஒவ்வொரு பலகைப் பீடத்திற்கும் முன்னால் ஒவ்வொரு சிறு முக்காலியும் ஏட்டுச் சுவடியும் நறுக்கு ஓலைகளும் தயாராக வைக்கப்பட்டுள்ளன. ஒருபுறம் சோழர்களுக்குரிய புலிக்கொடியும், இன்னொரு புறம் சூரியகுலத்தைக் குறிக்கும் சூரியன் சின்னமுள்ள ஆலவட்டமும் தென்படுகின்றன.*]

[அவைக்களத்தில், இராஜராஜன், விமலாதித்தன், பாலதேவர், இம் மூவர் மட்டும் நிற்கிறார்கள்.]

**இராஜராஜன்** : விமலாதித்தா! பல ஆண்டுகளுக்குப்பிறகு ஏற்படும் சந்திப்பு, இல்லையா? வேங்கி நாட்டில் உன் ஆட்சி முறை வெகு நன்றாக இருக்கிறது என அடிக்கடி கேள்விப்படுகிறேன்!

**விமலாதித்தன்** : அதற்குக் காரணம், மகா சபையின் மூலம் எங்கள் நாட்டில் மக்களின் ஆட்சி நடக்கிறது. என்னை முடியரசன் என்பதைவிடக் குடியரசன் என்று சொல்வது இன்னும் பொருத்தமாயிருக்கும்!

**இராஜராஜன்** : எனக்குக் கூட ஜனநாதன் என்னும் ஓர் பட்டம் உண்டு. வெளிப் பார்வைக்குத்தான் சோழப் பேரரசே தவிர, ஒவ்வொரு ஊரிலும் குடியாட்சி முறையும் தேர்தல் முறையும் உண்டு. மக்களால் மக்களிடையே தேர்ந்தெடுக்கப்பட்ட ஊர்ச்சபையினரால் ஆளப்பட்டு, ஒவ்வொரு கிராமமும் சுயதேவைப் பூர்த்தியுள்ளதாய், சுய நிர்ணய உரிமை உடையதாய் விளங்குகின்றன! விமலாதித்தா, நான் மத்திய அரசின் அதிகாரங்களைக் குறைத்து கிராம ஆட்சியின் அதிகாரங்களைப் பெருக்கியிருக்கிறேன்!

**விமலாதித்தன்** : பொதுமக்களுக்கு அரசியல் அறிவும் ஆட்சித் திறனும் பெருகினால், நாட்டுப்பற்று மிகுந்தவர்களாய், அந்நியப் படையெடுப்புகளிலிருந்து நாட்டைப் பாதுகாப்பார்கள் என்ற எண்ணம்! இல்லையா? வெளிநாட்டவர்களின் முன் வடநாட்டில் ஒவ்வொரு பேரரசாய் முறிந்து விழுந்துகொண்டிருப்பதைக் கண்ட பயமே உங்களுக்குக் குடியாட்சி முறை மீதுள்ள நம்பிக்கை! சக்கிரவர்த்திகளே! தாங்கள் மத்திய அரசின் அதிகாரங்களைக் குறைத்துக் கிராம ஆட்சியின் அதிகாரங்களைப் பெருக்கினால்தான் தனிமனிதன் ஒவ்வொருவனுக்கும் உரிமையும், சுதந்திரப் பற்றும் பெருகும். அதுவே விசாலமான ஒரு நாட்டிற்கு உண்மையான பாதுகாப்பு!

**இராஜராஜன்** : (சிரிப்புடன்) விமலாதித்தா! உன் நாட்டில் என்னென்ன புதுப் புது வரிகள் போட்டிருக்கிறாய்?

**விமலாதித்தன்** : (சிரிப்புடன்) தாசிகளின் முகம் பார்க்கும் கண்ணாடிகளுக்கும் தனவந்தர்கள் தாங்கிச் செல்லும் குடைகளுக்கும் வரி விதித்திருக்கிறேன். வெய்யில் படாமல் உல்லாசமாக வாழ்பவர்களையே அந்த வரிகள் பாதிக்கும் என்பதினால்!

**இராஜராஜன்** : (சிரிப்புடன்) எங்கள் நாட்டில் தாசி லோலர்களையும் கள்ளுக் குடியர்களையும் தேர்தலுக்குத் தகுதியல்லர் என்று தள்ளிவிடுகிறோம்! விமலாதித்தா, நான் விளையாத நிலங்களுக்கு வரிகளை நீக்கிவிட்டு, திருமண வரியையும் ஆள் வரியையும் அதிகரித்திருக்கிறேன்!

**விமலாதித்தன்** : அவை இரண்டு வரிகளும் ஜனப் பெருக்கப் பளுவைக் கட்டுப்படுத்தும் என்பதினாலா? ஒரு நாட்டிற்கு உண்மையான க்ஷீணம், அதன் அளவு மீறிய விஸ்தீரணமும், அதன் அளவு மீறிய ஜனப்பெருக்கமுமே ஆகும்!

**இராஜராஜன்** : (சிரிப்புடன்) விமலாதித்தா! நீ வெளியிடும் வராகன் நாணயங்களுக்கு எங்கள் சோழ நாட்டு வணிகர்களிடையே அதிக மதிப்பு ஏற்படுவதாக அறிகிறேன். எங்கள் காசுகளுக்குப் பொருளாதார மந்தம் ஏற்படாமல் தடுக்க உன் வராகச் நாணயங்களுக்கு எங்கள் நாட்டில் தடைவிதிக்க நேரிடும்,

**விமலாதித்தன்** : (அதே மாதிரி புன் சிரிப்புடன்) தடையா? வேங்கி நாட்டு வராகன் நாணயங்களுக்குத் தடையா?...அப்படியானால் உங்கள் சோழத்துத் தந்தமும், தென்பாண்டிநாட்டு முத்தும் எங்கள் வேங்கிச் சந்தையிலே விலைபோக முடியுமா? அதற்கும் விமலாதித்தன் தடைவிதிக்க நேரிடும்!

**இராஜராஜன் :** விமலாதித்தா! நீ எதையும் வெளிப்படையாகவே பேசுகிறாய்! விமலாதித்தா, நீ விரைவில் எவனுக்கும் வெகு சுலபமாக எதிரியாகக் கூடியவன்!

**விமலாதித்தன்** : எவனுக்கும் அல்ல! (பாலதேவரைக் குறிப்பாக நோக்கி) பிறர் பேச்சைக் கேட்டுப் பொம்மையாக ஆடக்கூடியவர்களுக்கு மட்டுந்தான்!

**இராஜராஜன்** : நீ பகைவனு நண்பனு என்பதை என்னுல் நிதானிக்கவே முடிவதில்லே.

**விமலாதித்தன்** : நண்பன் என்றுல் உற்றுழியும் கைகொடுக்கும் நண்பன்! பகைவன் என்றுல் உயிர் போகும் வரை பகைவன்!!

**இராஜராஜன்** : உன்னே அவசரமாக இங்கே வரவழைத்த காரணம்...

**விமலாதித்தன்** : சுற்றி வளேக்காமல் அதைச் சக்கிரவர்த்திகள் முன்னதாகவே சொல்லியிருக்கலாம்!

**இராஜராஜன்** : விமலாதித்தா! என் பகைவன் இரட்டபாடி சத்தியாசிரயன் சிறு சிறு படைகளே அனுப்பி உன் வேங்கி நாட்டின் பலத்தைச் சிறுகச் சிறுகச் சோதிக்கிருன் என்று கேள்விப்படுகிறேன். உன் வேங்கி நாட்டைப் பலஹீனப்படுத்தி உன் நாட்டின் வழியாக எங்கள் செந்தமிழ் நாட்டிற்குள் புகுவதும் என் வேங்கட எல்லேயைக் கைப்பற்றுவதும் அவன் நோக்கம்!

**விமலாதித்தன்** : அது அவன் நோக்கமாயிருக்கலாம் என்பதை நான் மறுக்கவில்லே! ஆனுல் எங்கள் வேங்கிநாட்டைப் பலஹீனம் என்பதைத்தான் நான் ஒப்புக்கொள்ள வில்லே!!

**இராஜராஜன்** : விமலாதித்தா! எங்கள் எல்லேப்புற பாதுகாப்பிற்காக உன் வேங்கிநாட்டில் எங்களுடைய மாபெரும் நிலப்படை ஒன்றை நிறுத்திவைப்பது அவசியம் என்று கருதுகிறேன். அதோடு நாங்கள் அனுப்பும் அரசியல் தூதரின் ஆலோசனேகளே அனுசரித்தே உன் ஆட்சிமுறையையும் நடத்தவேண்டும் அயல்நாட்டு நிர்வாகங்களில் வல்லவரான இந்த இராஜதந்திரி பாலதேவப் பட்டரையரையே உன் வேங்கிக்கு அரசியல் தூதராக அனுப்பப் போகிறேன்,..என்ன முடிவு சொல்கிருய்?

**விமலாதித்தன்** : இந்த விமலாதித்தன் என்ன விடையளிப்பான் என்பது உங்களுக்கே தெரியும்! உங்கள் சோழ சாம்ராஜ்யத்தோடு எங்கள் வேங்கி நாட்டையும் ஓர் மாவட்டமாக இணைக்க விரும்பினால், எங்கள் சுயநிர்ணய உரிமையை நீங்கள் பறிக்க நினைத்தால், அது இந்த விமலாதித்தன் இருக்கும் வரை மட்டுமல்ல-இறந்த பிறகும் நிறைவேறாது. உங்கள் இராஜதந்திரி பாலதேவர் உருட்டி விளையாட விமலாதித்தனும் சொக்கட்டான் காயல்ல ..நான் வருகிறேன்!

[விமலாதித்தனைச் சந்திக்க ஆவலோடு ஓடிவந்து தன் பின்னால் நிற்கும் குந்தவியை இராஜராஜன் பார்க்கிறான்.]

**இராஜராஜன்** : (ஆத்திரத்துடன்) விமலாதித்தா! குந்தவி விஷயம்...?

**விமலாதித்தன்** : பெண்ணைக் காட்டி என் மண்ணைப் பறிக்கவா?...நான் காமுகன் அல்ல!

**இராஜராஜன்** : விமலாதித்தா! குந்தவியைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் போகிறாயே...?

**விமலாதித்தன்** : விமலாதித்தனை ஆண்மையற்றவன் என்பதைவிடக் குருடன் என்றே நினைத்துக்கொள்ளட்டும் குந்தவி!

[விமலாதித்தன் திரும்பிப் பாராமலே போய் மறைகிறான். குந்தவி திக்பிரமை பிடித்தவளாய் நிற்கிறாள். இராஜதந்திரி பாலதேவர் கலகலவென்று சிரிக்கிறார். இராஜராஜனின் கண்களில் கனல் தெறிக்கின்றன.]

**பாலதேவர்** : எவ்வளவு அவமதிப்பு! சோழப் பேரரசின் சரித்திரத்திலே எந்த அரசருக்கும் இவ்வளவு பெரிய அவமதிப்பு ஏற்பட்டிருக்குமா...?

**இராஜராஜன்** : குந்தவியைக் கூடப் பொருட்படுத்தாமல் போய்விட்டானே...

**பாலதேவர்** : மண்ணாசை பிடித்தவனுக்குப் பெண்ணாசைக்கு நேரமேது...? குந்தவியைக் காதலிப்பதுபோல

நடிக்கிறன் என்றல் அது உங்கள் சோழ சாம்ராஜ்யத்தை ஸ்திரீதனமாகக் கொள்ளேயிடவே. இராஷ்டிர கூடப் பேரரசனிடம் பெண்கொண்ட மேலைச் சளுக்கிய வம்சம், இராஷ்டிரகூட வம்சத்தையே விழுங்கிவிட வில்லையா ? மன்னர் மன்னவா! நான்தான் முன்பே கூறினேனே விமலாதித்தனுக்கு உங்கள் குந்தவி மீது ஆசை இல்லை, உங்கள் ராஜ்யத்தின் மீதுதான் ஆசை.

**இராஜராஜன்** : (குந்தவியின் பக்கம் திரும்பி) குந்தவி, இந்த நிலையில் என்னை என்ன செய்யச் சொல் கிறய் ?

**குந்தவி** : (தேம்பலுடனும், ஆத்திரத்துடனும்) எது சரி எனத் தங்களுக்குத் தோன்றுகிறதோ அதன்படி செய் யுங்கள் ! என் தன்னலமற்ற அன்பையும் என் தந்தை யையும் மதிக்காதவனை நானும் மதிக்கப் போவதில்லை. சுயநலக்காரனை எந்தப் பெண்ணும் எளிதில் மறந்துவிடு வாள். [விம்மிக்கொண்டே உள்ளே ஓடுகிருள்.]

**பாலதேவர்** : ஆகா! சக்கிரவர்த்தித் திருமகளல் லவா? அந்த வீரம் எங்கே போகும் ?

[அவைக்களம் கூடுவதற்கான அறிவிப்புப் பறை ஒலிகள் கேட்கின்றன.]

**இராஜராஜன்** : (பாலதேவரை நோக்கி) அரசியல் சபையில் உறுப்பினரல்லாதவர் இங்கே நிற்பது உசிதமல்ல. நீர் போகலாம்.

[பாலதேவர் போகிருர். மதுராந்தகரும் மற்ற உடன் கூட்டத்து அதிகாரிகளும் வருகிருர்கள்.]

**மதுராந்தகர்** : (இராஜராஜனை நோக்கித் தயக்கத் துடன்) சக்கிரவர்த்திகள் அனுமதித்தால் சபை கூடும் முன் எங்கள் அபிப்பிராயத்தைச் சொல்ல விரும்புகிறேம்.

**இராஜராஜன்** : யாருடைய அபிப்பிராயத்திற்கும் நான் செவி சாய்க்க மறுப்பதில்லையே! அதற்குத்தான் சபை கூடுகிறேம் !

**மதுராந்தகர்** : அந்நியரான அரசியல் தந்திரி பால தேவரின் ஆலோசனைகளுக்கேச் செவி சாய்க்கிறீர்கள்.

இப்படி ஓர் உடன்கூட்டத்து அதிகாரிகளின் அரசியல் சபையை எதற்காகக் கூட்டவேண்டும்...?

**இராஜராஜன்** : உங்கள் உள் நாட்டு ஆட்சி முறையில் எவரும் குறுக்கிட மாட்டார். பல ஆண்டுகளாக உள் நாட்டு நிலையை ஒழுங்குபடுத்தித் தந்த நான், இப்போது அயல்நாட்டு வியவகாரங்களைச் சமாளிக்க ஓர் அயல்நாட்டு இராஜதந்திரியின் ஆலோசனையைக் கேட்பது தான் உசிதமாகும்!

**மதுராந்தகர்** : விமலாதித்தனுக்கும் தங்களுக்குமிடையே ஏற்படுத்தப்பட்டிருக்கும் மனக்கசப்பு...?

**இராஜராஜன்** : உங்கள் உடன்கூட்டத்து அதிகாரிகளின் சபையில் விவாதிக்க அது உள்நாட்டு விஷயமன்று! விமலாதித்தனின் வேங்கியை நேச நாடாக்கிக் கொள்வதா, பகை நாடாக்கிக் கொள்வதா என்கிற விஷயமும் அயல்நாட்டு வியவகாரம்...மதுராந்தகரே, இன்று இந்தச் சபையில் விவாதிப்பதற்குப் பொருள் அட்டவணைப் பொத்தகத்தில் என்னென்ன குறிக்கப் பெற்றுள்ளன ?

**மதுராந்தகர்** : முதலாவதாக...காவிரிக் கரை வயல்களையும் வானத்து மழையையும் மட்டும் நம்பியிராமல், நாடெங்கும் பல கண்ணாறுகளை வெட்டி அவை பாயும் நிலச் சதுரங்களைப் பெருக்கித் தஞ்சாவூர் நாடு முழுவதையும் செழிப்பான பூமி ஆக்குவது! அடுத்தபடியாக, விளை நிலங்களை அளவிட்டுக் காணிக்கடன் மூலம் அரசாங்க வருவாய்க்குரியதை நம் உலகளந்தான் நிர்ணயித்தது சம்பந்தமாக உறையூர் ஊர்சபையார் எழுப்பியுள்ள ஒரு கேள்வி. அடுத்தபடியாக...

**இராஜராஜன்** : இன்று என் மனம் ஒரு நிலையிலில்லை...அதற்காகச் சபையைக் கலைக்கவேண்டாம்! நடக்கட்டும்!

**மதுராந்தகர்** : வேங்கி விமலாதித்தன் குந்தவி நாச்சியார் திருமண விஷயம்!...

**இராஜராஜன்** : அது உங்கள் அரசியல் விஷயமன்று!

[இராஜராஜன் போகிறான். மதுராந்தகர் பெருமூச்சு விட்டுச் சிந்தனையுடன் நிற்கிறார்.]

# காட்சி : 9

## குந்தவ்வையாரின் வேளம்

## பகல் நேரம்.

[இராஜராஜனும், கால்களில் சிலம்பு குலுங்கக் குந்தவியும் உரையாடிய வண்ணம் வருகிறார்கள்.]

**இராஜராஜன் :** குந்தவி! இப்போதெல்லாம் உன் அத்தையோடு விளையாடுவதில்லையாமே? எந்நேரமும் நடனப் பயிற்சியிலேயே மூழ்கியிருக்கிறாயாமே?

**குந்தவி :** பின்னே எனக்கு வேறு வேலை? காலமுழுவதும் நடனமாடியே கழிக்கப்போகிறேன்.

**இராஜராஜன் :** (சிரிப்புடன்) ஆமாம். மனதின் துக்கத்திற்குச் சரியான மாற்று மருந்து கலைப்பயிற்சி தான்! அதுதான் மெய்மறக்கச் செய்யும்.

**குந்தவி :** (ஆவலுடன்) அப்பா! நடனக்கலையில் உங்கள் மகளுக்கு யாரும் நிகரில்லை என உலகம் பாராட்டினால் அது உங்களுக்கு இன்னொரு பெருமையில்லையா? அப்பா! அப்பா! என்னுடைய நடனத்தை எப்போது அரங்கேற்றப் போகிறீர்கள்? அந்த அரங்கேற்றத்திற்கு உலகத்திலுள்ள கலைஞர்கள் அனைவருமே வரவேண்டும்.

**இராஜராஜன் :** விமலாதித்தனைத் தவிர அனைவருக்கும் அழைப்பு அனுப்புவேன். ஆனால் அவன் காதிலும் விழும்படியாக உலகெங்கும் பறைசாற்றுவேன்.

**குந்தவி :** (சிந்தனையுடன்) ஆமாம்...அவருக்கு அழைப்பு அனுப்பவே கூடாது. என் நடனத்தைக் காண வேண்டுமென்று ஆசையிருந்தால் அவராகவே வந்து பார்க்கட்டுமே!...உம், அப்பா எப்போது என் நடனத்தை அரங்கேற்றப் போகிறீர்கள்?

**இராஜராஜன் :** அரசருக்கு அரசர் மகள், பொதுமக்கள் முன் ஆடுகிறாள் என்றால் அதற்குச் சரியான சந்தர்ப்பமும், இடமும் வேண்டாமா?

**குந்தவி :** ஊம்...புது ஆடலாசிரியரும் நிருத்தப் பேரரையரும் வந்திருப்பார்கள்...நான் போகிறேன், அப்பா !

[குந்தவி போகிருள். வேறு புறமிருந்து குந்தவ்வையார் விபூதிப் பிரசாதத்துடன் வந்து, இராஜராஜன் நெற்றியில் திருநீறு பூசியவண்ணம் உரையாடுகிருள்.]

**குந்தவ்வையார் :** நம் விமலாதித்தனு விரோதியாகி விட்டான் ?...

**இராஜராஜன் :** அரசியலில் இது வெகு சாதாரணம்.

**குந்தவ்வையார் :** இதன் விளைவு ?

**இராஜராஜன் :** போர் மூளலாம்......

**குந்தவ்வையார் :** போர் ! போர் ! மக்களின் உயிர்களைப் பணயமாக வைத்து மரணத்தின் தலைவாசலில் நின்று மன்னர்களெல்லாம் போராடத் தொடங்கி விட்டால் நாட்டில் அமைதியும், அறமும் கலைவளர்ச்சியும் எப்படி ஏற்படும்? இராசராசா ! அரசருக்கரசனுகி நீ ஒவ்வொரு நாட்டிலும் வெற்றியின்மேல் வெற்றிபெற்று வருவதைக் கேள்விப்படும் போதெல்லாம்...

**இராஜராஜன் :** உள்ளம் உவகை கொள்வது இயற்கையே! ஆனுல் வெற்றியின்போது பணிவையும் தோல்வியின்போது துணிவையும் கைக்கொள்ள விரும்புவன் தான் உங்களால் வளர்த்து விடப்பட்ட உங்கள் தம்பி.

**குந்தவ்வையார் :** ஒவ்வொரு வெற்றியின்போதும் அநாதைகளாகிவிடும் எண்ணற்ற பெண்களின் நிலையை நான்தானே யோசிக்கவேண்டும்? அந்தப் பெண்கள் தங்கள் துன்பங்களை மறந்து கலைப்பணிகளில் ஈடுபடத் தாய்மையான இடம் எது? இயல், இசை, நாடகம், ஓவியம், சிற்பம் முதலான கலைகளனைத்தையும் வளர்க்கும் கலைக் கூடம் எது? மாணவர்களைப் பயிற்றுவிக்கும் பள்ளிக் கூடம் எது? மருத்துவம், அன்னதானம் முதலான அறத் துறைகளை வளர்ப்பது எது? எந்த ஏழை உழவரும் நிலத்தை உழுது வாழச் செய்வது எது? மெய்க்கீர்த்திகளைக்

கல்வெட்டுகளாகப் பதித்து வரலாற்றை வளர்ப்பது எது? காசற்றவர்களுக்குக்கடன் உதவி செய்து பொருளாதாரத் துறையை வளர்ப்பது எது? ஊருக்குப் புதியவர்கள் தங்கவும், ஊர் மக்கள் ஒன்று கூடிப்பேசவும் ஏற்ற இடம் எது? எல்லோருக்கும் பொதுவாக விளங்கக்கூடிய ஒரே பொது இடம் எது?

**இராஜராஜன் :** (சிரிப்புடன்) கோயிலா? கலைத் துறைக்கு. கல்வித்துறைக்கு. அறத்துறைக்கு, தொழில் துறைக்கு, வரலாற்றுத் துறைக்கு, பணத் துறைக்கு, அரசியல் துறைக்கு, அனைத்துக்குமே பயன்படும் பொதுவிடம் கோயில் என்று குறிப்பிடுகிறீரா, அக்கையார் ?

**குந்தவ்வையார் :** இராசராசா. உன் மனைவியின் பெயரால் திருவையாற்றில் உலகமாதேவிச்சரம் என்ற ஆலயத்தையும், உன் தாயின் பெயரால் இலங்கையில் வானவன் மாதேவிச்சரம் என்ற ஆலயத்தையும், உன் பாட்டனார் பெயரால் அரிஞ்சயேச்சுரம் என்ற ஆலயத்தையும், திருமுக்கூடலில் உன் பாட்டியின் பெயரால் செம்பியன் மாதேவிப் பெருமண்டபமும் கட்டப்பட்டன. இப்போது இராசராசன் என்ற உன் பெயராலேயே இந்தத் தஞ்சை மண்ணில் மாபெரும் ஆலயம் ஒன்றைக் கட்ட வேண்டும். இதுதான் என் ஆசையெல்லாம்!

**இராஜராஜன் :** உங்கள் மனம்போல விசாலமான ஓர் ஆலயத்தை இந்தத் தஞ்சையில் கட்டுகிறேன்! ஆனால் இறைவனுக்கு இந் தஞ்சையில் எந்த இடத்தில் ஆலயம் கட்டுவது ?

**குந்தவ்வையார் :** அப்பர் சுவாமிகளின் தேவாரப் பாடல்பெற்ற வைப்புத் தலமாக விளங்குவது நம்முடைய தஞ்சை தளிக்குளத்தார்...

**இராஜராஜன் :** அந்த இடத்திலேயே ஆலயம் எழுப்பி விடுகிறேன்...அங்கேயே கோயிலின் மூலம் கலை வளர்க்கும் காவலன் தன் மகள் குந்தவியின் நடனத்தையும் அரங்கேற்றுவான்.

[போகிறார்கள்]

# காட்சி : 10

## அரண்மனைப்பகுதி;
## அந்திமாலை நேரம்.

[முத்துப்பல் கவிராயரும் மேதினிராயரும் வருகிறார்கள்.]

**மேதினிராயர்:** மோனைப் புலவர் முத்துப்பல் கவிராயக் கவிச்சிங்கமே! தாமரைபோன்ற உம் வதனம் இன்று கூம்பியிருப்பதேன்?

**முத்துப்பல் கவிராயர்:** போயிற்று! போயிற்று! மனக்கோட்டையெல்லாம் மண்ணாய்ப்போயிற்று! வாழ்த்துப்பா வழங்குவதற்குரிய வாய்ப்பு வராமலே போயிற்று!

**மேதினிராயர்:** ஏனையா இப்படி உருகுகிறீர்?

**முத்துப்பல் கவிராயர்:** பின் என்னையா? திருமண வாழ்த்துமடல் தீட்டுவதற்காகத் திட்டமிட்டிருக்கும் கட்டத்தில் மணமகன் முறித்துக்கொண்டு போய்விட்டாரே?

**மேதினிராயர்:** ஓ, மன்னருக்கும் விமலாதித்தருக்கும் நடந்த வாக்குவாதத்தால் மணமே நடைபெறாதென்னும் முடிவிற்கு வந்துவிட்டீரா?

**முத்துப்பல் கவிராயர்:** உம்! இனியேது...? முறிந்த காதல் மீண்டும் முளைக்கப்போகிறதா?

**மேதினிராயர்:** ஐயா! காதல்மரம் பேச்சுவார்த்தைகளால் முறியக்கூடியதன்று! நீர் சும்மா நீட்டும்!...கலங்காதீர்!...... மலை கலங்கினாலும் மனங் கலங்கலாகாதய்யா!

**முத்துப்பல் கவிராயர்:** ஓய்! மலை என்றதும் மன்னரின் செயலை எண்ணி எமக்கு மலைப்பு வந்துவிட்டது! என்ன துணிவய்யா! ஒரு சிறு மலைப்பிஞ்சுகூட இல்லாத இந்தத் தஞ்சைமாவட்டகையில் பெரிய கற்கோயிலாம்!...விமானக் கோபுரமாம்! அடேயப்பா!

**மேதினிராயர் :** செயற்கரிய செய்வர் பெரியர்! செயற்கரிய சிறு செயலும் செய்யார் சிறியர்!

**முத்துப்பல் கவிராயர் :** மெய்தானய்யா! காதல் என்னும் சிறு செயலும் நீர் செய்திலீர். நீர் சிறியர்தான்!

**மேதினிராயர் :** ஓ! நீர் எவளையாவது காதலித்து விட்டீரோ?

**முத்துப்பல் கவிராயர் :** அடியேன் நிலையும் அதுவே தான்!

**மேதினிரயர் :** அந்தோகோ! அந்தோகோ! பரிதாபம்!

**முத்துப்பல் கவிராயர் :** யான் என்செய்வேன்? எந்தப் பாவையும் என் கருத்தில் கால் பாவவில்லையே? தக்கதோர் ஆரணங்கை இத் தரணியெங்கும் தேடுகின்றேன், தேடுகின்றேன், தேடிக்கொண்டே இருக்கின்றேன்...

[பூங்கோதை பூஜைத்தட்டுடன் கவிராயர்களைக கடந்து செல்கிருள். முத்துப்பல் கவிராயர் அவளை விழுங்குவது போன்று பார்க்கிருர்! மேற்கோள் புலவர் மேதினிராயரும் நாலாபுறமும் எவ்விவளைந்து பலவாறும் பார்க்கிருர்.]

**முத்துப்பல் கவிராயர் :** ஐயா! ஐயா!......

**மேதினிராயர் :** (போகும் பூங்கோதையைப் பார்த்தவாறே) ஆ!...ஆ!...

**முத்துப்பல் கவிராயர் :** கண்டேன்! கண்டேன்! கண்டேன் காரிகையை! கொண்டேன் காதல்! உண்டேன் உள்ளத்தால்! (பாடுகிருர், தேவாரச் சந்தத்தில்)

தேடிக்கண்டு கொண்டேன்<br>
திருமாலோடு நான் முகனும்<br>
தேடிக் கண்டிடாத் தேவியை<br>
இங்கே-நான் தேடிக் கண்டுகொண்டேன்!

**மேதினிராயர் :** (பாடுகிருர்) தலையே நீ வணங்காய்! தலைமேலே மலர்சூடி......

**முத்துப்பல் கவிராயர்:** ஆகா! காத்திருந்து காதலித்தாலும் இதுபோன்ற கண்மணியையன்றோ கவிராயன் காதலிக்கவேண்டும்?

**மேதினிராயர்:** (திடுக்கிட்டு ஏமாற்றத்துடன்) ஐயா! நீர் காதலித்து விட்டீரா?...ச் சூ!

[பூங்கோதை போய் மறையும் திசையை நோக்கி]

**முத்துப்பல் கவிராயர்:** இவள் விண்ணிலிருந்து மண்ணில் குதித்த மங்கையோ? மடந்தையோ? பேரிளம் பெண்ணோ?

**மேதினிராயர்:** வானுலகத் தேவமங்கையாயின் நான்கு கரங்கள் இல்லையே?

**முத்துப்பல் கவிராயர்:** மாமயிலோ?

**மேதினிராயர்:** தோகையில்லையே!

**முத்துப்பல் கவிராயர்:** மோகினிப் பேயோ?

**மேதினிராயர்:** கால்கள் காணப்படுகின்றனவே!

**முத்துப்பல் கவிராயர்:** எம் கோட்டான் புராணத் தலைவி கோகிலமோ?

**மேதினிராயர்:** இல்லை, ஐயா! இவள் மனிதியே தான்!

**முத்துப்பல் கவிராயர்:** அதென்னய்யா, மனிதி?

**மேதினிராயர்:** மனிதன் ஆண்பால்! மனிதி பெண்பால்!

**முத்துப்பல் கவிராயர்:** ஆகா! இந்த நங்கையின் நடை அழகும் நக அழகும்...

**மேதினிராயர்:** நகத்தை எங்கே ஐயா கண்டீர்?

**முத்துப்பல் கவிராயர்:** 'நங்கை' 'நடை' 'நகம்' என்று மோனைக்காக மொழிந்தேனையா!...ஆகா...மங்கை நல்லாள் மறுபடியும் வருகின்றாள்! புலவரே! சற்றே விலகி இரும்! யான் காதலிக்கிறேன்.

**மேதினிராயர் :** உம்! முயன்று பாரும்! பொறுமையுடன்! அது கொம்புத்தேன்! எட்டாது உமக்கு.

(போகிறார்.)

[பூங்கோதை வருகிறாள். அவள் வழியில் முத்துப் பல்லர் குறுக்கிட்டு நிற்கிறார்.]

**முத்துப்பல் கவிராயர் :** பெண் பாவாய்! சற்றே நில்!

**பூங்கோதை :** (திகைப்புடன்) என்னேயா பயமுறுத்து றீங்க?

**முத்துப்பல் கவிராயர் :** இல்லை! யான் உன்னைக் காதலிக்கின்றேன்.

**பூங்கோதை :** என்னது? என்னது?

**முத்துப்பல் கவிராயர் :** கானகத்திலும் காணக் கருங்குயிலே!...இல்லையில்லை!...இல்லையில்லை!...(மோனையைத் தேடித் தடுமாறி)...செந்தாமரையிலும் சேராச் செங்குயிலே!...

**பூங்கோதை :** என்னேயா உளறீங்க? திடீர்னு வந்தீங்க! நில்லுன்னீங்க! காதலிக்கிறேன் என்கிறீங்க!... யாரையா நீங்க?

**முத்துப்பல் கவிராயர் :** யான் மோனைப்புலவர் முத்துப்பல் கவிராயர்!

**பூங்கோதை :** முத்துப்பல்லா? ஐயோ!....இந்தச் சொத்தைப்பல்லுக்கு யாரய்யா முத்துப்பல்லுன்னு பேரு வச்சாங்க? காதலிக்கிறாராம் காதல்!...இன்னொரு தடவை காதல் கீதல்னு சொன்னீரோ, அந்த முத்து உதிர்ந்திடும்!

[பூங்கோதை விரைந்து போகிறாள். திகைத்து நிற்கும் முத்துப்பல் கவிராயரிடம் மேற்கோள் புலவர் மேதினிராயர் மெல்ல வருகிறார்.]

**மேதினிராயர் :** என்னேயா? காதலித்தீரா?

**முத்துப்பல் கவிராயர் :** ஆ! பொன்னெனத் தோன்றி மின்னென மறைந்தனளே பூவையாள்!

*மேதினிராயர் :* என்னது? என்னையா நடந்தது?

*முத்துப்பல் கவிராயர் :* செந்தாமரையிலும் சேராச் செங்குயிலே என்றேன்! சென்றுவிட்டாள்!

*மேதினிராயர் :* செந்தாமரைக்கும் செங்குயிலுக்கும் என்னய்யா சம்பந்தம்?

*முத்துப்பல் கவிராயர் :* முதலில் கானகத்திலும் காணுக் கருங்குயிலே என்றேன்! நோக்கினேன்! அவளோ செந்நிறம்! செங்குயிலே என்று செப்ப எண்ணி மோனைக்காகத் தேடினேன். செந்தாமரைதான் அகப்பட்டது!

*மேதினிராயர் :* அட போமையா! இப்படியா காதலிப்பது? காதல் என்ருல் முதலில் கண்ணுல் பேசி, பிறகு கருத்தால் பேசி, அதன்பிறகல்லவா வார்த்தைகளைக் கொட்டவேண்டும்! திடீரெனக் காதலிக்கிறேன் என்ருல் எவளய்யா காதலிப்பாள்? அதிலும் உம்மை!...நான் காதலிக்கிறேன் பாரும்!

[பூங்கோதை போன திசையில் மேதினிராயர் விரைந்து போகிருர்.]

*முத்துப்பல் கவிராயர் :* (திகைத்து) யாரை.....? ஐயா புலவரே...மேதினிராயரே, சற்று நில்லும்!

[பின் தொடர்கிருர்.]

# காட்சி : 11

## வேங்கி நாட்டில் விமலாதித்தன் அரண்மனை

## பகற் பொழுது

[விமலாதித்தன், பன்றி இலச்சினை பொறித்த பட்டுக் கொடி ஒன்றைக் கையில் பிடித்துப் பார்வையிட்ட வண்ணம் வருகிருன். அவனுடன் ஓர் அமைச்சரும் வருகிருர்.]

*விமலாதித்தன் :* நம்முடைய இந்தப் பன்றிக்கொடியையே நம் வேங்கி நாட்டு எல்லையில் புலிக்கொடிக்கு

எதிராக நடுங்கள். நம் கொடியைச் சுற்றி ஒரு பெரும் காவற்படையை நிறுத்துங்கள்.

**அமைச்சர்:** இராஜராஜசோழ சக்கிரவர்த்திகளின் புலிக்கொடிக்கு எதிராகவா...?

**விமலாதித்தன்:** [பெருமூச்சுக் கலந்த சிரிப்புடன்] சோழப் பேரரசின் சூரியோதயம் ஏழைக் குடியானவர் களின் புஞ்சை வயல்களையும் பொன் வயல்களாக்கும் என்று எதிர்பார்த்தேன். அது நம் சந்திரோதயத்தையும் துடைத்துக்கொண்டு இரத்தக் கடலில் ஏகாதிபத்திய திசை நோக்கியே உதயமாக முயல்கிறது...இந்த விமலா தித்தன் மீதும் அது திரும்பலாம்......

**அமைச்சர்:** தற்காப்பிற்காக இந்த வேங்கி மண் ணில் மாபெரும் படையொன்றை நாம் உருவாக்கி வைத் திருப்பது அவசியந்தான்!

**விமலாதித்தன்:** எல்லாம் அந்த இராஜதந்திரி பால தேவப் பட்டரையனின் பிரித்தாளும் சூழ்ச்சி .....அவனது ஆலோசனையின்படியே கைப்பொம்மையாக ஆடுகிறார் அரசருக்கு அரசர்!

**அமைச்சர்:** முக்கியமான செய்தியொன்று சொல்ல மறந்து விட்டேன். இராஜராஜ சோழர் தம் தமக்கை யாரின் தூண்டுதலால் தஞ்சையில் மாபெரும் கோயில் ஒன்றைக் கட்டி முடித்து விட்டாராம். அதை ஒட்டிய திரு விழாவில் இளவரசி குந்தவி நாச்சியாரின் நடன அரங் கேற்றமும் நடைபெறப்போகிறதாம்...கோயிலின் நர்த்தன மண்டபத்தில் அந்தக் கலைவிருந்தைக் காண எவரெவருக் கெல்லாமோ சக்கிரவர்த்திகள் அழைப்பு அனுப்பியிருக் கிறாராம்.

**விமலாதித்தன்:** என் குந்தவியா கோயிலில் ஆடப் போகிறாள்? அழையா வீட்டிற்குள் நுழைவது அழகல்ல என்றாலும், கலைஞன் என்ற முறையிலே அவள் நடனத் தைக் காண நான் அவசியம் செல்வேன்!

**அமைச்சர்:** பகைகொள்ளும் நாட்டில் படை பல மில்லாமல் செல்வது தங்கள் உயிருக்கு அபாயம்.

**விமலாதித்தன்:** சுத்த வீரர்களான சோழர்களை நான் அப்படி நினைக்கவில்லை.

[விமலாதித்தன் விரைந்து போகிறான்.]

# காட்சி: 12

## தஞ்சை இராஜராஜேச்வர ஆலயத்தின் முன்; உதய நேரம்

[இராஜராஜன், குந்தவ்வையார், மதுராந்தகர், பால தேவர், பரிவார மெய்க்காப்பாளர், உடன் கூட்டத்து அதிகாரிகள், ஸ்ரீகாரியம் செய்த பொய்கை நாடு கிழவன் ஆதித்தன், இராஜராஜன் குருக்களான ஈசான சிவபண்டிதர், அருச்சகரான பவன பிடாரர், முதலானோர் கோயிலைச் சுற்றிப் பார்த்த வியப்பில் நிற்கிறார்கள். கருவூர்த் தேவர் திருவிசைப்பா பாடுகிறார்.]

**கருவூர்த் தேவர் திருவிசைப்பா:**

பன்னெடுங் காலம் பணிசெய்து பழையோர்
தாம்பலர் ஏம்பலித் திருக்க
என்னெடுங் கோயில் நெஞ்சுவீற் றிருந்த
எளிமையை என்றும் நான் மறக்கேன்.
மின்னெடும் புருவத் திளமயி லனையார்
விலங்கல் செய் நாடக சாலை
இன்னடம் பயிலும் இஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே.

**இராஜராஜன்:** [மெய்மறந்து] கருவூர்த் தேவரின் திருவிசைப்பா என் கருத்தைக் கவர்கிறது. மாபெரும் விமானச் சிகரத்தின் நடுவே அழகி என்ற ஒரு கிழவியின் வீட்டுக் கல்லையும் சிற்பிகள் சேர்த்து விட்டார்களே என்று கோபப்பட்டேன். ஆனால் கிழவி தரும் நிழலிலேதான் பெருவுடைப் பெருமான் அமர்ந்திருக்கிறார் என்று இப்போது புலப்படுகிறது. அந்தக் கிழவியின் பெயரால் அழகிக் குளமும் அழகித்தோட்டமும் தர ஏற்பாடு செய்ய வேண்டும்.

**மதுராந்தகர்**: இம்மாதிரி மகாலயம் இந்த யுகத்தில் ஏற்பட்டதில்லை. சூரியன் எத்திசை திரும்பினாலும் இக் கோயிலின் கோபுர நிழல் பூமியில் படுவதே இல்லை.

**இராஜராஜன்**: அது நம் கல்தச்சர்களும் கணிதப் புலவர்களும் கண்டு காட்டிய நுட்பம்.

**பாலதேவர்**: கல்லால் செய்த சிலைகள்! ஆனாலும் அவற்றின் முகங்களில் எத்தனை விதமான உணர்ச்சி பாவங்கள் ஓடுகின்றன! கல்லிலும் உயிர் தோய்ந்திருக்கிறது!

**இராஜேந்திரன்**: கல்லுக்கும் உயிர் கொடுக்கும் வித்தையைக் கற்பித்தவர் தமிழர்! அப்பெருமை எங்களுக்கு உண்டு, பாலதேவரே!

**இராஜராஜன்**: இப் பேசும் சிலைகளே என் புகழ் பாடும் மௌனக் கவிதைகள்! இனி எஞ்சி நிற்கும் வாழ்க்கையை இக் கலைப் பணிக்காகவே அர்ப்பணிப்பேன்!

**மதுராந்தகர்**: சக்கிரவர்த்திகள் ஆணையிட்டபடி இக் கலைக் கோயிலில் முத்தமிழ்க் கலையை வளர்க்க நானூறு பெண்களையும் தமிழிசை பாடுவோர் நாற்பத்தெண்மரையும், காந்தர்வர் எழுபத்தைவரையும் ஏற்பாடு செய்திருக்கிறோம்.

**பாலதேவர்**: சைவம் தழைக்க வந்த பெருவேந்தர் நீங்கள்!

**இராஜராஜன்**: இராஜராஜனுக்கு எம் மதமும் சம்மதம் என்று காட்ட இக்கோயிலிலேயே, விக்கிரமன் திருவாசலில் கீழ்ப்பாகத்திலும் சுவர்களிலும் புத்தர் பிரான் சிலைகளை அமைத்திருக்கிறேன். அக்கையார் பார்க்கவில்லையா?

**குந்தவ்வையார்**: இராசராசா! நீ என் அருமைத் தம்பி மட்டுமல்ல, தஞ்சையில் கலைக்கோயில் கட்டிய தமிழ்ப் பெருவேந்தன்! இராசராசா, இனி உன் பெயராலேயே எந்தக் கோயிலின் கோபுரத்தையும் இராச கோபுரம் என்றே அழைக்கட்டும்!

# காட்சி: 13

## தஞ்சையில் பெரிய தெரு;
## காலைப் பொழுது

***பறைக்கொட்டோடு கூடிய அறிவிப்பு:***

பாண்டிய குலாசனி வளநாட்டுத் தஞ்சாவூர்க் கூற்றத்துத் தஞ்சாவூரில் இராசகேசரி இராசவித்யாதர உடையார் இராசராச சோழ அருண்மொழித் தேவர் எடுப்பிச்ச திருக்கற்றளியான ஸ்ரீ ராஜராஜேச்வரத்தில் இன்றிரவு குமாரி குந்தவி நாச்சியாரின் நடன அரங்கேற்றம்...எழுதினேன் திருமந்திர ஓலை...

# காட்சி: 14

## அரண்மனைப் பகுதி;
## பகல் நேரம்

[முத்துப்பல் கவிராயரும் மேதினிராயரும் வருகிறார்கள்.]

**முத்துப்பல்லர்:** *இதென்னய்யா அதிசயம்? அடங்கி ஒடுங்கி இருக்கவேண்டிய அரிவையரெல்லாம் அரங்கேறி ஆட ஆரம்பித்து விட்டால், ஆணுலகே ஆட்டம் கண்டு விடுமய்யா!*

**மேதினிராயர்:** *பின்னே பெண்களின் ஆட்ட பாட்டமெல்லாம் அடுப்பங்கரையிலே பூட்டப் படவேண்டியது தானா? அம்பலத்திற்கு வந்தால் தானய்யா அதனதன் அருமை தெரியும்!...*

[மதுராந்தகர் வருகிறார்.]

**முத்துப்பல்லர்:** *[அவரிடம் விரைந்து சென்று] அறிவுசால் அமைச்சரிடம் ஓர் ஐயப்பாட்டினை அறையலாமோ?*

**மதுராந்தகர்:** *[புன் சிரிப்புடன்] நன்றாக அறையலாம்!*

**முத்துப்பல்லர்:** *வீட்டரசிகள், கூட்டத்தில் ஆட்டம் போடுவது நாட்டுக்கு நல்லதா?*

**மதுராந்தகர்:** அதிலென்ன தவறு? ஆட்டக்கலை அருள்வழியிலே செல்ல வேண்டும் என்பதற்காகத்தான் அதை அம்பலவாணன் சந்நதியிலே வளர்க்கிறோம்!

[வீரமாதேவி வருகிறாள்.]

**மதுராந்தகர்:** வா வீரமாதேவி!...தங்கையே, பார்த்தாயா நித்த விநோதரான நம் சக்கிரவர்த்திகளின் கலையுணர்ச்சியை! கலைத்துறைக்குப் பயன்படவேண்டும் என்பதற்காகக் காலவெள்ளத்தாலும் அழியாத கற்கோயில்! நங்கையரெல்லாம் நடனக் கலையால் நளினம் பெறவேண்டும் என்பதற்காக......ஆலயத்திலே அருமைப் புதல்வியின் ஆடல் அரங்கேற்றம்! இது எந்த மன்னரும் செய்து காட்டாத புதுமை!

**மேதினிராயர்:** பெண்பாலரும் பொதுவாழ்வில் பங்கு கொள்ள உரிமையுண்டு என்பதும் இதிலுள்ள குறிப்பு! புரிந்துகொள்ளுமையா புலவரே புரிந்து கொள்ளும்!

**வீரமாதேவி:** (மதுராந்தகரை நோக்கி) அண்ணா! நான் கேள்விப்படுவது உண்மைதானா? விமலாதித்தருக்கு அழைப்பு இல்லையாமே?

**இராஜேந்திரன்:** (ஆத்திரத்துடன் வந்து) உண்மைதான்! எதிரியென நம் எதிரிலேயே பட்டயம் தீட்டும் அந்தச் சத்தியாசிரயமன்னனுக்கும் சம்பிரதாயமாக அழைப்பு அனுப்பப்பட்டது! காலமெல்லாம் பகைவரெனக் கனல்கக்கும் கங்கை மன்னர்களுக்கும் அழைப்பு அனுப்பப்பட்டது! சீறி விழும் சிங்களருக்கும் அழைப்பு! ஆனால் வேங்கி விமலாதித்தனுக்கு, என் அருமை நண்பனுக்கு அழைப்பு இல்லை......!

[கோபத்துடன் கைகளைப் பிசைந்தவண்ணம் இராஜேந்திரன் உலாவுகிறான்.]

**வீரமாதேவி:** (தயக்கத்துடன்) குமாரச் சக்கிரவர்த்திகள் இன்றிரவு அவசரமாகக் கருவூர்ப் பாசறைக்குப் புறப்படுகிறார்களாமே? ஏன் அண்ணா?

**மதுராந்தகர்:** (புன் முறுவலுடன்) நீயே நேரில் கேளேன்!......

**வீரமாதேவி:** (நாணத்துடன் தலை குனிந்து, பிறகு நிமிர்ந்து) இன்றிரவை எதிர்நோக்கித் தஞ்சை மாநகர் முழுதும் பேராவலுடன் காத்திருக்கிறது. கலைஞர்களெல்லாம் இப்பொழுதே கோயிலில் குழுமி விட்டார்கள். அருமைத் தங்கையின் நடனத்தைக் கூடக் காணுமல் புறப்படுகிருரே, அப்படியென்ன அவசரமாம்?

**இராஜேந்திரன்:** என் தங்கையின் நடனத்தைக் கண்டு களிக்கவேண்டிய கண்கள் வேங்கியில்தான் இருக்கின்றன. விமலாதித்தன் காண்பதற்கில்லாத காட்சியை நானும் காணப்போவதில்லை! என் எதிர்ப்புணர்ச்சியை இதன் மூலமாவது மன்னர் பெருமான் எண்ணிப் பார்க்கட்டும்.

[ஆத்திரத்துடன் இராஜேந்திரன் வெளியேறுகிருன்.]

**மதுராந்தகர்:** என்னசெய்வது? எல்லாம் அந்தப் பாலதேவனின் இராஜதந்திரம்! நண்பர்களைப்பிரித்து நாட்டைப் பலஹீனப் படுத்தும் சூழ்ச்சி!

**வீரமாதேவி:** பாவம்! அரங்கேற்றத்திற்கு அருமைத் தமையரும் இல்லை யென்ருல் இளவரசி குந்தவி நாச்சியார் மிகவும் வேதனைப் படுவார்கள்!

[வீரமாதேவியும் மதுராந்தகரும்போகிருர்கள்.]

**முத்துப்பல் கவிராயர்:** பார்த்தீரா ஐயா! நான்முன்பே மொழிந்தேனே! அரிவையின் ஆட்டத்தால் ஆணுலகு படும்பாட்டைப் பாரும்.

**மேதினிராயர்:** ஊம்! நாட்டுத் தவளைக்குக் கிணற்று வளப்பம் ஏனையா?......வாரும்!......

[கவிராயர்கள் இருவரும் போகிருர்கள்.]

## காட்சி : 15

### தஞ்சைப் பெரியகோயிலின் வெளிப் பிரகாரம்;
### அந்திமாலை நேரம்

[பிரகாரத்தில் கலைஞர்கள் அங்குமிங்கும் உலாவியவண்ணம் காணப்படுகிறார்கள். விமலாதித்தன் வருகிறான். "சித்தவிநோத இராஜராஜ சோழ சக்கிரவர்த்திகள் வாழ்க! உடையார் அருண்மொழித்தேவர் வாழ்க!" என்னும் வாழ்த்தொலிகளுடன் பரிவாரங்கள் புடைசூழ இராஜராஜன் வருகிறான். அவனை எதிர்நோக்கி விமலாதித்தன் வணங்குகிறான்.]

**இராஜராஜன்:** (சிரிப்புடன்) வணங்கா முடி விமலாதித்தா! அதுவே புத்திசாலித்தனம்!

**விமலாதித்தன்:** மண்ணை வென்ற மாபெரும் மன்னர் மன்னவன் என்பதற்காக உம்மை வணங்கவில்லை! இக்கலைக் கோயிலைக் கட்டிய கலைஞர் காவலன் என்பதற்காகவே உம்மை வணங்கினேன்!

[விமலாதித்தன் விரைந்து போகிறான்.]

**பாலதேவர்:** (மெல்ல இராஜராஜனிடம்) என்ன இறுமாப்பு...

**இராஜராஜன்:** ஆம்; இளமையின் துடிப்பு!

**பாலதேவர்:** (இராஜராஜனை நோக்கி மெல்ல) பெரும் படை தயாரித்து முடித்துவிட்ட விமலாதித்தன் இங்கே வரவேண்டிய நோக்கம்......?

**இராஜராஜன்:** (பாலதேவரைக் கூர்ந்து நோக்கி) சோழர்களின் சூரியோதயத்தை அவன் தன் பிஞ்சு விரல்களால் அணைத்துவிட முடியாது!

**பாலதேவர்:** எதையும் முளையிலே கிள்ளிவிடவேண்டும். அது தான் சரியான அரசியல் தந்திரம்......

[போகிறார்கள். ஆலயமணிகள் ஒலிக்கின்றன. "இராஜராஜ சோழசக்கிரவர்த்திகளின் திருப்புதல்வி குந்தவி நாச்சியார் வாழ்க! இளைய பெருமாட்டியார் வாழ்க!" என்னும் வாழ்த்தொலிகளுடன் பெண்கள் பரி

வாரம் புடைசூழ குந்தவி நடனக் கோலத்துடன் வரு கிருள். அவ்வாழ்த்தொலிகள் கேட்டு விமலாதித்தன் ஆவலோடு அங்குவந்து குந்தவிமுன் எதிர்ப்படுகிருன். குந்தவியோ எதிரிலுள்ள விமலாதித்தனைக் கவனிக்கா தவள் போல் செல்ல முயலுகிருள்.]

*விமலாதித்தன்:* குந்தவி! குந்தவி!...திரும்பிக்கூடப் பாராமல் போகிருயே......குந்தவி!

[குந்தவி வெடுக்கென்று திரும்பி அலட்சியம்தோய்ந்த ஒரு பார்வையை வீசிவிட்டு விரைந்து சென்று மறை கிருள்.]

**விமலாதித்தன்:** (தனக்குள் மெல்லிய குரலில்) என்ன மமதை—மன்னர் மன்னவனுக்குள்ள இரத்தம் மகளிடம் இல்லாதிருக்குமா?—

[விமலாதித்தன் வேறுபுறம் உட்செல்கிருன்.]

# காட்சி : 16

## தஞ்சை இராஜராஜேச்வர ஆலயத்தில் நர்த்தன மண்டபம்; இரவு நேரம்

[மேடையின் ஒரு புறம் புலிக்கொடியும் இன்னொரு புறம் சோழர்களின் சூரியகுலத்தைக் குறிக்கும் சூரியச் சின்னமுள்ள அடையாளக் கொடியும் காட்சி யளிக்கின்றன. மேடை முழுவதும் நன்கு அலங்கரிக் கப்பட்டு, தோரணங்களும் ஆலவட்டங்களும் தொங்குகின்றன. மேடையின் ஒருபுறம் இசைக் கருவிகளுடன் காந்தர்விகளும் காந்தர்வர்களும் அமர்ந்திருக்கின்றனர். மேடையைச் சுற்றிலும் கலை ரசிகர்களும் அரசப் பிரதானிகளும் குழுமியிருக்கின் றனர். இராஜராஜன், மதுராந்தகர், பாலதேவர், வீரமாதேவி முதலானேரும் அங்கு இருக்கிருர்கள்.]

**உள்ளிருந்து குரல்:**

*இராஜராஜ சோழ உடையார் அருண்மொழித்தேவர் திருப்புதல்வி இளவரசி கலைச்செல்வி குமாரி குந்தவி நாச்சியார் வாழ்க!......*

[பின்வரும் தேவாரப் பாடலுடன் குந்தவி நடனமாடு கிருள்.]

முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெம்மான் அவனுக்கே பிச்சி யானுள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்ருள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள்தன் நாமங்கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன்தாளே!

[ஆட்டத்தின் நடுவே விமலாதித்தனைப்பற்றி நினைத்துக் குந்தவி மனம் குழம்புகிருள். அவன் "குந்தவி!" என்று கடுமையாகக் கூப்பிடவே, திரும்பிப் பார்த்த அவள், தாளம் தடுமாறிக் குழம்புகிருள்.]

***விமலாதித்தன்*** : *நடன தேவதையே! தடுமாற வேண்டாம்! நிறுத்து உன் நடனத்தை!*

[குந்தவி ஆத்திரத்துடன் மேடையிலிருந்தவாறு சுற்று முற்றும் கூட்டத்திலுள் பார்க்கிருள்.]

***குந்தவி*** : *என் ஆட்டத்தில் குற்றம் கண்டுபிடிக்கும் அகம்பாவி யார்?*

***விமலாதித்தன்*** : *கலையைக் கொலை செய்வதைக் காணச் சகியாத ஒரு கலைஞன்!*

***குந்தவி*** : *ஆடியவள் அரசர்க்கரசன் அருமை மகள் என்பதை அறிந்தும் அவமதிக்கும் அந்த ஆணவக் கலைஞன் யார்?*

***விமலாதித்தன்*** : *(கூட்டத்தைவிட்டு விலகி குந்தவி எதிரே வந்துநின்று கம்பீரமாக) வேங்கி நாட்டு வேந்தன். விண்ணில் விளங்கும் விஞ்சையரும் வணங்க வித்தை பயின்ற விமலாதித்தன்!*

[கூட்டத்தில் பரபரப்பு உண்டாகிறது. விமலாதித்தனை அடக்கலாம் என்னும் எண்ணத்துடன் மதுராந்தகர் முன் செல்ல முயல்கிருர். ஆனல் இராஜராஜன் அவரைத் தடுத்து நிறுத்துகிருன்.]

**குந்தவி** : வேங்கிநாட்டு விமலாதித்தரா? பிறர் புகழைக் காணச் சகியாத பெருந்தகையல்லவா அவர்?

**விமலாதித்தன்** : அத்தகைய கீழ்மகன் வேங்கி மண்ணில் இதுவரை பிறந்ததில்லை.

**குந்தவி** : ஏன், இந்நாட்டு மன்னர் இராஜராஜ சோழரின் வெற்றிப் புகழைக் காணச் சகியாமல் பெரும் படை யொன்றைத் திரட்டி வருகிறீர். அவர் மகள் ஆடல் பாடலில் சிறந்து கலையுலகில் பெறும் வெற்றிப் புகழைக் காணச் சகியாமல் அவளை அவமதிக்கவும் வந்துவிட்டீர்!

**விமலாதித்தன் :** உன் ஆடல் அகம்பாவத்தை அடக்குவது கலைஞனாகிய என் கடமை. தாளம் தவறி விட்டது தையலே, உன் கருத்து ஆட்டத்தில் இல்லாத தாலே...

**குந்தவி** : என்ன ?...

**விமலாதித்தன்** : (பரிகாசச் சிரிப்புடன்) ஆத்திரம் வேண்டாம், இராஜகேசரி இராஜ வித்யாதர இராஜராஜ சோழரின் அருந்தவப் புதல்வி குந்தவி நாச்சியாரே!... ஆத்திரம் வேண்டாம்!

**குந்தவி** : அரங்கேற்றத்திலேயா இந்த அவமானம்?

**விமலாதித்தன்** : அவமானமல்ல, உன் அகம்பா வத்தின் அலங்கோலம்! நீ எனக்குக் குருவணக்கம் செய்யவில்லை ; அதனுல் வந்த கேடு.

**குந்தவி** : உமக்கா குருவணக்கம்? நீரா என் குரு?

**விமலாதித்தன்** : ஆமாம், குந்தவி! பிஞ்சு வயதில் பிள்ளைப் பிராயத்திலே நாட்டியத்தில் உனக்கு ஆசை உண்டாக்கி உனக்கு ஆடலாசிரியனுக இருந்தவன். உன் மலர்க் காலில் மதுரமான கலை இருக்கிறது என்று கண்ட மகா குரு!

**குந்தவி** : அவ்வாருனுல் நான் ஆட அருகதையற்ற வளா ?

**விமலாதித்தன்** : இல்லை, குந்தவி! நீ ஆட்டத்தில் மாதவி. ஆயகலைகளில் ஆதிமந்தி. அன்பில் ஆதிரை.

அழகில் மணிமேகலை. அடக்கத்தில் குணமாலை. கானத்தில் காந்தருவதத்தை. காதலில் வாசவதத்தை. ஆனால், அதிகாரத்திலும் பிடிவாதத்திலும் மட்டும் அந்தச் சுரமஞ்சரியேதான்.

**குந்தவி**: என் நடன அரங்கேற்றத்திற்கு அழையாமலே வந்து ஊரார் முன் என்னைச் சிரிப்பிற்கு ஆளாக்கினீர். நான் புகழ் பெற்ற இராஜராஜ சோழ சக்கிரவர்த்திகளின் மகளாயிருந்தால், இராஜேந்திரன் என்ற மகா வீரன் தங்கையாயிருந்தால், நீரும் மமதையிழந்து சிரிப்பிற்கு ஆளாகச் செய்வேன்!

**விமலாதித்தன்**: ஆனால் தாளம் தவறும்படியான நடனத்தைக் காணும் தண்டனையை மட்டும் மறுபடியும் தந்துவிடாதே!

**குந்தவி**: தாளம் தவறியிருந்தால் இத்தனை இசைவாணர்களில் ஒருவராவது சொல்லியிருப்பார்களே...?

**விமலாதித்தன்**: பாராளும் பார்த்திபன் மகளாயிற்றே என்று பயந்துகொண்டிருந்தார்கள்!

**குந்தவி**: உமக்கு மட்டும் அப் பாராளும் என் தந்தையிடம் பயமில்லையா?

**விமலாதித்தன்**: உன் தந்தை பேயா, பெரும் பூதமா, பயப்பட?

[இராஜராஜன் அவன் முன் வந்து நின்று, தன்னைப் பின்பற்றி வரும் பாலதேவரை நோக்குகிறான்.]

**பாலதேவர்**: என்ன, பார்த்திரா, நீர் பேயா, பெரும் பூதமா என்பதை. மக்களும் மன்னரும் நிலமும் கடலுமே உம்மைக் கண்டு தலைவணங்கும்போது...

**விமலாதித்தன்**: மனிதனைக் கண்டு மனிதன் ஏன் தலைவணங்க வேண்டும்?

**இராஜராஜன்**: (ஆத்திரத்துடன் விமலாதித்தன் முன் வந்து நின்று) இந்தச் செருக்கு...?

**விமலாதித்தன்**: இது செருக்கல்ல! தன்மதிப்பை நிலைநாட்டும் வீர நிமிர்ச்சி!

**பாலதேவர்** : பார்த்திரா ராஜராஜ தேவரே! உமது மகள் ஆட்டத்தைக் காண வருவது போல் வந்து உம் மகளையும் அவமதித்து உம்மையும் அவமதிக்கிருன், விமலாதித்தன்!...சண்டைக்கும் காரணம் வேண்டுமல்லவா ?

**விமலாதித்தன்** : குள்ளநரியின் பிரித்தாளும் தந்திரமோ ?

**இராஜராஜன்** : என் மதிப்பிற்குரியவரை அவமதிப்பது என்னையே அவமதிப்பதாகும்!

**விமலாதித்தன்** : எண்ணியதைச் சொல்ல எனக்குள்ள உரிமையைப் பறிக்க எவருக்கும் அதிகாரம் கிடையாது!

**இராஜராஜன்** : விமலாதித்தா, நீ தூங்குகிற புலியை எழுப்புகிருய்.

**விமலாதித்தன்** : இல்லை. பாயவரும் புலியைத்தான் தடுக்கிறேன்.

**இராஜராஜன்** : நீ புலியின் குகைவாசலில் இருக்கிருய்.

**விமலாதித்தன்** : புலியின் குகை வாசலுக்கு வருபவன் புலியையும் வெல்ல வல்ல போர்வீரனுகத் தானிருப்பான். மேலும் நிராயுதபாணியாய்த் தனித்து நிற்கும் ஒருவனைக் கொல்லும் கோழையென்று உம்மை நினைக்கவில்லை. பூனையோடு சேர்ந்து புலியும் பூனையாகும் பேரதிசயத்தை இன்று இங்கே காண்கிறேன்.

**இராஜராஜன்** : விமலாதித்தா, காவிரி வளநாடன் தொடர்பை இழப்பதை நீ மறந்துவிட்டாய்.

**விமலாதித்தன்** : ஒரு காவிரி நதி உம் நாட்டில் ஓடினல் என் நாட்டு வளத்திற்கு கிருஷ்ணு, துங்கபத்திரை என்னும் இரு நதிகள் ஓடுவதை நீர் மறந்துவிட்டீர்!

**இராஜராஜன்** : விமலாதித்தா! நீ என் பேரரசையே அவமதிக்கிருய்!

**விமலாதித்தன்** : இல்லை. என் நாட்டின் சுதந்திரத்தை நீர் அலட்சியம் செய்கிறீர்.

**இராஜராஜன்** : நாடு? நான் உன் தமையனுக்குக் கொடுத்த முடிதானே? உன் தமையனுக்கு உவந்தளித்த பிச்சைதானே?

**விமலாதித்தன்** : அல்ல; அவன் உம் வெற்றிப் பாதைக்கு வழி வகுத்ததற்காக நீர் செலுத்திய நன்றிக் கடன்!

**இராஜராஜன்** : விமலாதித்தா, நான் பல நாடுகளை வென்று சோழப் பேரரசை நிலை நாட்டுவது உனக்குப் பொறுக்கவில்லை!

**விமலாதித்தன்** : இல்லை. பல நாடுகளோடு என் நாட்டையும் பறித்துக்கொள்ளப் பார்க்கிறீர். நாங்கள் பிறநாட்டு மக்களுரிமையையும் மன்னர் முடியையும் பறிப்பதுமில்லை; பறிகொடுப்பதுமில்லை!

**இராஜராஜன்** : பார்த்தீரா மதுராந்தகரே. இந்தச் செருக்குள்ளவனோடுதானே தணிந்துபோகச் சொன்னீர்?

**மதுராந்தகர்** : பரஸ்பர அவநம்பிக்கை! சக்கிரவர்த்திகளே. வேங்கி மன்னர் விமலாதித்தரே... சோழரும் வேங்கியரும் தங்கள் பிரிவு மனப்பான்மைகளை மறந்து ஒன்றுபட வேண்டும். ஒன்றுபட்ட நாடும் ஒன்றுபட்ட நாகரிகமும் உருவாகவேண்டும்.

**விமலாதித்தன்** : சோழகுலமும் வேங்கி குலமும் சேர்ந்து உங்கள் தமிழர் குலம் தழைக்கவேண்டும் என்று தான் நான் விரும்புகிறேன். ஆனால் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் அந்நியன் ஒருவன் நடுவே நின்று எங்களைப் பிரிக்கிறான்!

**பாலதேவர்** : சக்கிரவர்த்திகளே, அவன் என்னை ஏளனம் செய்வதற்காக வருந்தவில்லை. உங்கள் சோழ சாம்ராஜ்யத்திற்கு ஏற்படும் அவமதிப்பிற்குத்தான் வருந்துகிறேன்!

**இராஜராஜன் :** விமலாதித்தா, இனி உன் வேங்கி நாடு தன்னிச்சைபோல் வாழ முடியாது. சோழப்பேரரசு ஒன்றிருக்கும்போது ஆங்காங்கே சிறு சிறு நாடுகள் சிதைந்து கிடக்கக்கூடாது.

**விமலாதித்தன் :** தாமரை மலர்வது கண்டு கொட்டி கூம்பி விடுவதில்லையே? மாணிக்கக் கற்கள் இருக் கிறதே யென்று மற்றக் கற்களெல்லாம் மறைந்து விடுவ தில்லையே ?

**இராஜராஜன்** விமலாதித்தா! போருக்கு ஒரு காரணம் தேடத்தானே வந்தாய் ? கேள், இனி இந்த இராஜ ராஜ சோழனுக்கு நீ திறை செலுத்தவேண்டும் !

**விமலாதித்தன் :** என்ன, திறையா ? இராஜராஜ சோழ மகாராஜனே! இந்த விமலாதித்தன் அடிமை என்ற முத்திரையுடன் எவனுக்கும் திறை செலுத்துவான் என்று உம் கனவிலும் எண்ணுதீர். தன்மதிப்பிற்கும் தன் நாட்டின் சுய நிர்ணய உரிமைக்கும் முன் தன் உயிரையும் துரும்பாக மதிப்பவன்தான் இந்த விமலாதித்தன். உத்தமப் பெண் தன் உயிரைப் பறிகொடுப்பாளே தவிரக் கற்பைப் பறிகொடுக்க மாட்டாள் !

**இராஜராஜன் :** விமலாதித்தா, பணியப் போவதில்லையா நீ?

**விமலாதித்தன் :** பணிவது என்ற பதமே எங்கள் வீர பரம்பரையில் கிடையாதே? அதுவும், இந்த விமலாதித்தன் வணங்கா முடி!

**இராஜராஜன் :** வணங்கா முடி! கடல் போன்ற என் சேனை வெள்ளத்தைக் கண்டும் தலை வணங்காயோ?

**விமலாதித்தன் :** வெள்ளப் பெருக்கைக் கண்டு வெறும் புல்தான் தலை வணங்கும்! வீரமலை கடல் பொங்கினலும் தலை வணங்காது! சோழ மகாராஜனே, விமலாதித்தனைப் பகைப்பதும் விதிக் காவலனைப் பகைப்பதும் ஒன்றே!

**இராஜராஜன் :** என் புலிக்கொடி முன் உன் பன்றிக் கொடியா?

**விமலாதித்தன்:** உலகைப் பாதுகாக்கத் திருமால் எடுத்த அவதாரம் பன்றியே யன்றிப் புலியல்ல!

**இராஜராஜன்:** என் சூரியகுலத்திற்கு முன் உன் சந்திர குலமா?

**விமலாதித்தன்:** விரிசடைக் கடவுளின் திரு முடியிலும் ஏறியமர்ந்தது, சந்திரனேயன்றிச் சூரியனல்ல!

**இராஜராஜன்:** விமலாதித்தா, போதும்! இன்று பதினோராவது நாள் உன் படையுடன் போருக்குச் சித்தமாயிரு.

**விமலாதித்தன்:** இராஜராஜசோழச் சக்கிரவர்த்திகளே, மத்திய அரசின் அதிகாரங்களைப் பெருக்கி, மாவட்ட வளநாடுகளின் உரிமைகளையும், தனி மனிதனின் சுதந்திரத்தையும் சூறையாடும் இராஜதந்திரத்தை அந்நியரிடமிருந்து கற்க முயல்பவரே, உமக்கு ஓர் எச்சரிக்கை. பலம் என்பது படைகளின் எண்ணிக்கையில் இல்லை. மக்களின் இருதயத்தில் இருக்கிறது.

**பாலதேவர்:** [கள்ளப் புன்னகையுடன்] சக்கிரவர்த்திகளின் திருக் குமாரனே படைத்தலைமை ஏற்று......

**இராஜராஜன்:** ஆம், என் வீரத் திருமகன் இராஜேந்திரனே உன் வாக்கின் பலத்தைப் போர்க்களத்திலே சந்திப்பான்.

**விமலாதித்தன்:** மனம் பொருந்தாவிட்டால், போர்க்களந்தான் வீரர்கள் சந்தித்து விருந்தருந்த வேண்டிய இடம்...வருகிறேன். நடன தேவதை இளவரசி குந்தவி நாச்சியாரே, வருகிறேன்.

[விமலாதித்தன் போகிறான். இராஜராஜனும்பாலதேவப் பட்டரையரும் ஒருவரை யொருவர் பார்த்து அர்த்தம் நிறைந்த பார்வையுடன் புன்னகை செய்து கொள்கிறார்கள்.]

# காட்சி: 17

## அரண்மனை ; காலை நேரம்

[வீரமாதேவியும் குந்தவியும் உரையாடிக் கொண்டிருக்கிறார்கள்]

**குந்தவி:** போர் என்றால் சக்கிரவர்த்திகளுக்கு ஒரு பொழுதுபோக்காய் இருக்கலாம். எனக்கு இப்போது உயிர் வாதையாய் இருக்கிறதே!

**வீரமாதேவி:** அதற்கு நாமென்ன செய்வது? அவ்வளவு பெரிய சபையில் சக்கிரவர்த்திகளை அவமதித்துப் பேசலாமா? இருந்தாலும் விமலாதித்தருக்கு இவ்வளவு வாய்த்துடுக்குக் கூடாது!

**குந்தவி:** அவர் என்னோடுதானே பேசினார்? நானும் அவரும் நடனக் கலையைப்பற்றித்தானே வாதித்துக் கொண்டிருந்தோம். எங்கள் பேச்சுக்கிடையில் அப்பா எதற்காக அனாவசியமாய்க் குறுக்கிடவேண்டும்? அதனால் தானே இப்போது போர் மூண்டிருக்கிறது?

**வீரமாதேவி:** இப்பொழுதும் ஒன்றும் வீணாகிவிட வில்லையே! விமலாதித்தர் நம் சோழப் பேரரசுக்குத் திறை செலுத்திச் சிற்றரசனாக இருக்கச் சம்மதித்தால்......

**குந்தவி:** அது எப்படிச் சம்மதிக்க முடியும்? நிபந்தனையற்ற சுதந்திரம் என்று முன்பு வாக்களித்துவிட்டு இப்போது திறை செலுத்த வேண்டுமென்றால் அதென்ன நியாயம்? விமலாதித்தர் என்ன கோழையா?

[இராஜேந்திரன் ஆத்திரத்துடன் வருகிறான். குந்தவி தன் கண்ணீரை அவனுக்குக்காட்டாமலே, உள்ளே ஆத்திரத்துடன் விரைந்து போகிறாள். வீரமாதேவி தயங்கித் தயங்கி இராஜேந்திரனிடம் பேச முயல்கிறாள்.]

**வீரமாதேவி:** இளவரசி குந்தவி நாச்சியார் அழுகிறாள்......

**இராஜேந்திரன்:** நன்றாக அழட்டும்! பெண் அழத் தான் பிறந்தாள்! நீயும் சேர்ந்து அழு!

**வீரமாதேவி:** மகாவீரர் இராஜேந்திரரின் அன்பிற் குப் பாத்திரமானவர்கள் அழுகிறார்கள் என்றால், அந்த அவமானம் எங்களுக்கு அல்ல!

**இராஜேந்திரன்:** என் மதிப்பிற்குரிய நண்பனோடு போரிட வேண்டும் என்றால் நான் மகாவீரனாகவே பிறந் திருக்க வேண்டியதில்லை!.........அந்த விமலாதித்தனுக்கு நடனத்தைப் பற்றி என்ன தெரியும்? குந்தவி தாளம் தவறி யிருந்தால் அவனுக்கு என்ன வந்தது? அதற்காகச் சக்கிர வர்த்திகள், சபைநடுவே அவனோடு வாக்கு யுத்தம் புரிந் திருக்க வேண்டியதுமில்லை; இப்போது என்னை மரண யுத்தத்திற்கு அனுப்ப வேண்டிய அவசியமும் இல்லை, என்ன இருந்தாலும் படைத்தலைமை பற்றி என்னை ஒரு வார்த்தை கேட்டிருக்க வேண்டாமா? நானும் இராஜ தந் திரி பாலதேவப் பட்டரையரால் ஆட்டப்படும் சதுரங்கக் காயா?

**வீரமாதேவி:** இளவரசியாரிடம் என்ன சொல்ல...?

**இராஜேந்திரன்:** அவளுடைய தமையன் உயிரோடு இருப்பதா, இறப்பதா என்று தடுமாறிக் கொண்டிருக் கிறாள் என்று சொல்,

[வீரமாதேவி ஒரு புறம் போகிறாள். இன்னொரு புற மிருந்து இராஜராஜனும் பாலதேவப் பட்டரையரும் வருகிறார்கள். சக்கிரவர்த்திகளை வணங்கி விட்டு இரா ஜேந்திரன் வேறுபுறம் முகத்தைத் திருப்பிக் கொள் கிறான்.]

**இராஜராஜன்:** இராஜேந்திரா! போர் என்றால் தோள் பூரிக்கும் நீ இன்னும் படைத் தலைமைக்குச் சித்தமாக வில்லையா?

**இராஜேந்திரன்:** தந்தையே! சொந்தச் சோதரர் போன்ற சேரபாண்டியர்களை வெல்லச் சொன்னீர்கள்! வென்றேன்! தமிழ் நாட்டின் தற்காப்பிற்குத் தேவையான சேரனின் கப்பற்படையைக் காந்தளூர்ச்சாலையில்கொளுத் தச் சொன்னீர்கள்! கொளுத்தினேன்! பாண்டியன் அமர

புஜங்கனையும் போரில் புறங்காணச் சொன்னீர்கள்! புறங் கண்டேன்! இப்போது என் அருமை நண்பன் விமலா தித்தன் மீதும் படையெடுக்கச் சொல்கிறீர்கள்........! தந்தையே!

**இராஜராஜன்** : இராஜேந்திரா! அசோகன் காலத் திலும் அந்நியர் அடி வைக்காத தமிழ் நாட்டை இப் போது கங்கை மன்னர் அடிமைப்படுத்தக் காத்திருக்கின் றனர். தமிழகத்தைக் காக்கத் தமிழ்நாட்டு மூவேந்தரும் ஒன்றுபட்டு கூட்டாட்சி நடத்தலாம் என்று தூதர்களை அனுப்பினேன். செய்திகொண்டுபோன நம் தூதனை உதகையில் சிறை வைத்தான் சேரன். பாண்டியனே பரி கசித்தான். ஆகையால் அவர்களை வென்று மூவேந்தர் நாட்டை ஒரே செந்தமிழ் நாடாக ஆக்கவேண்டிய அவசி யம் ஏற்பட்டது. இப்போது சோழப் பேரரசிற்கு வாசல் போல் விளங்கும் வேங்கிநாட்டிலோ நம்முடைய நிலப் படையை நிறுத்த மறுக்கிறான் விமலாதித்தன். அவனை வென்றடக்கும் வரை நம்முடைய தமிழ்க்கொடி உயரப் பறக்க முடியாது!

**பாலதேவர்** : கடமையின் முன்னும் காரிய சித்தியின் முன்னும் கர்மவீரனுக்கு உறவினன் யார், பகைவன் யார்? போர்க்களத்திலே அருச்சுனனுக்குக் கண்ணன் காட்டிய கீதோபதேச வழியை அரசகுமாரர் நினைவு படுத் திக்கொள்ளவேண்டும். எதையும் உணர்ச்சிகளின் மூல மாகப் பாராமல் அறிவு ஒன்றின் மூலமாகவே பார்த்துக் காரிய சித்தி பெறுவதுதான் கர்மவீரனுக்குரிய செயல்!

**இராஜேந்திரன்** : இருதயத்தை அறுத்தெறிந்துவிட்டு காரியவெற்றி ஒன்றிலே ஈடுபடுபவன்தான் கர்மவீரன் என்றால், சொந்தச் சகோதரர்களின் பிணக் குவியல்கள் மீது கட்டப்படுவதுதான் சாம்ராஜ்யம் என்றால், நண் பனின் இரத்தத்தில் நனைத்துத்தான் நம் புலிக்கொடியை நாட்டவேண்டும் என்றால், வீணான இரத்த வெறிதான் வீரம் என்றால், வெறும் கானல் நீர்தான் புகழ் என்றால், உங்கள் குமாரன் மாபெரும் கோழை என்றே நினைத் துக்கொள்ளுங்கள்!

**இராஜராஜன்** : இராஜேந்திரா ! நீதான் வீரப்பால் உண்டாயா, அல்லது நான்தான் வீண் கனவு காண்கிறேனா என்று நாளை நன்றாகச் சிந்தித்துப் படைத்தலைமை ஏற்றுக்கொள்.

[இராஜேந்திரன் தன் உடைவாளை உறையிலிருந்து உருவுகிறான்.]

**இராஜேந்திரன்** : இந்த ஒப்புயர்வற்ற வீரவாள் என் கையாலே என் நண்பனின் இரத்தத்தைச் சிந்த உபயோகப்படாது. இந்த வாளை அவ்வாறுதான் உபயோகப் படுத்த வேண்டும் என்றால், இந்த இராச்சியத்தில் இருதயமற்றவன் எவனையாவது தேடிப்பிடித்து, அவனை இளவரசனாக்கி, விமலாதித்தன் மீது போர் தொடுக்கச் சொல்லுங்கள் !

[இராஜேந்திரன் தன் உடைவாளை இராஜராஜனின் காலடிகளில் வைத்து வணங்கிவிட்டு, வேகமாகப் போய் மறைகிறான். இராஜராஜன் தன் காலடியில் கிடக்கும் வாளை எடுத்துப் பார்த்தவனாய்ச் சிந்தனையில் ஆழ்கிறான்.]

**இராஜராஜன்** : வீர உணர்ச்சி யுள்ளவன் வெறும் பந்தபாச உணர்ச்சிக்கும் ஆளாவான் என்று நான் எதிர்பார்த்ததுதான்.

**பாலதேவர்** : காதலில் இறங்கிவிட்டானல்லவா, அதனால் அவன் மனம் போரில் இறங்கவில்லை...

**இராஜராஜன்** : காதலா ? யாரைக் காதலிக்கிறான் ?

**பாலதேவர்** : உங்கள் மதியமைச்சர் மதுராந்தக மூவேந்த வேளாரின் தங்கை வீரமாதேவியை !

**இராஜராஜன்** : மகிழ்ச்சிக்குரிய செய்திதான் ! பழந்தமிழ் நாட்டில் காதலுக்குக் குலப் பிரிவினை கிடையாது... ஆனால், இளம்பருவத் தோழியான இளவரசி குந்தவியோடு விளையாடவல்லவா வீரமாதேவி அடிக்கடி நம் மாளிகைக்கு வருகிறாள் என்று நினைத்தேன்...?

**பாலதேவர்** : எவ்வளவு பெரிய மகாவீரனும் காதலால் எவ்வளவு தூரம் கோழையாகி விடுகிறான், பார்த்தீரா?

**இராஜராஜன் :** *இல்லை, பாலதேவரே! காதலிலிருந்து பிறப்பதுவே வீரம்!...இருந்தாலும்—வீரமங்கையாய் வீர உணர்ச்சி ஊட்ட வேண்டியவள் என் வீர மைந்தனைக் கோழையாக்கினளா...எங்கே வீரமாதேவி...? எங்கே வீரமாதேவி...?*

[இராஜராஜன் வாளைக் கம்பீரமாக உயர்த்திப் பிடித்துக்கொண்டு வேகமாகச் செல்கிறான். பாலதேவர் கள்ளப் புன்னகையுடன் அவனைப் பின் தொடர்கிறார்.]

## காட்சி : 18

### மதுராந்தகர் மாளிகையின் முன் ;

### இரவு நேரம்

[இராஜேந்திரனைப்பற்றிய இன்ப நினைவின் குதூகலச் சிரிப்புடன் வீரமாதேவி குதித்துக்கொண்டே உள்ளே ஓடுகிறாள். மதுராந்தகர் வியப்புடன் அவளைப் பார்த்தவண்ணம் மாளிகையின் வெளியே நிற்கிறார். இராஜராஜன், கையில் வீரவாளுடன், புயலென வேகமாய் வருகிறான். சக்கிரவர்த்திகள் தம் மாளிகைக்கு வருவார் என எதிர்பாராத மதுராந்தகவேளார் திகைப்புறுகிறார்.]

**மதுராந்தகர் :** *சக்கிரவர்த்திகள் இந்த நேரத்தில்......?இங்கே...?*

**இராஜராஜன் :** *உம் தங்கை வீரமாதேவி எங்கே...?*

**மதுராந்தகர் :** *(வியப்புடன்) என் தங்கையா...? சக்கிரவர்த்திகள் கட்டளை அனுப்பியிருந்தால் அவள் தங்கள் திருவாய்க் கேள்விக்காக அரண்மனையில் வந்து காத்துக் கிடப்பாளே... வீரமாதேவி... வீரமாதேவி...*

[மாளிகையின் பக்கம் மதுராந்தகர் திரும்பி வீரமாதேவியைக் கூப்பிடுகிறார். வீரமாதேவி ஆவலுடன் ஓடிவருகிறாள். சக்கிரவர்த்திகளைக் கண்டதும் திகைக்கிறாள் ; வணங்குகிறாள்.]

**இராஜராஜன் :** *மதுராந்தகரே, நீர் போகலாம்... உமக்கும் தெரியக்கூடாத அவசரமான ஓர் அரசியல்*

விஷயத்திற்காக உம் தங்கையைத் தனித்துச் சந்திக்க விரும்புகிறேன்...

[வாளுடன் உக்கிரமாக நிற்கும் மன்னரின் விசித்திர மான செய்கைகண்டு மதுராந்தகர் மலைக்கிறார்; வீர மாதேவி நடுங்குகிறாள்.]

**மதுராந்தகர் :** என் தங்கை ஏதாவது தவறிழைத் திருந்தால் அதன் முழுப் பொறுப்பையும் நானே ஏற்றுக் கொள்கிறேன்...!

**இராஜராஜன் :** உம்மைச் சம்பந்தப்படுத்த விரும் பாத விஷயம் இது! நீர் போகலாம்!

[மதுராந்தகர், முகத்தில் கலவரக் குறிகளுடன் விரைந்துசென்று மறைகிறார். சக்கிரவர்த்திகளோடு தனித்து விடப்பெற்ற வீரமா தேவி, அவரை நிமிர்ந்து பார்க்கவும் துணிவற்றவளாய், ஒன்றும் விளங்காமல் நிற்கிறாள்.]

**இராஜராஜன் :** வீரமாதேவி...அருகில் வா...பயப்படு கிறாயா...பயப்படவேண்டியவள் நீயல்ல!

**வீரமாதேவி :** (அதிகத் திகைப்புடன்)...சக்கிரவர்த் திகள் இவ்வாறு பேசுவதைப் பார்த்தால் தான் எனக்குப் பயம் உண்டாகிறது!

**இராஜராஜன் :** வீரமாதேவி! பல்லாண்டுகளாக தலைகுனிந்திருந்த தமிழகம் இப்போது தான் தலைநிமிர் கிறது. அதன் இணையற்ற நாகரிகம் இவ்வுலகெங்கும் பரவுவதற்கு, அடிவானத்திற்கப்பாலும் சோழ சாம் ராஜ்யத்தின் சூரியோதயத்தைத்தான் அது எதிர்நோக்கு கிறது! இல்லையா?

**வீரமாதேவி :** (வியப்புடனும், தயக்கத்துடனும்)... தங்கள் அமைச்சர் மதுராந்தகரின் தங்கை என்ற முறை யில் மட்டுமல்ல, சோழப் பேரரசின் ஒவ்வொரு பிரஜை யின் கனவும் அதுதான்.

**இராஜராஜன் :** வேங்கி நாடு மட்டுமல்ல, தமிழரைத் தாழ்வாக நினைக்கும் கங்கையும் கடாரமும் தாண்டி நம் சோழர் படை செல்லவேண்டும் என்பது என் கனவு. மக் கள் அதற்கு மதிப்பும் கொடுப்பார்கள்! இல்லையா?

**வீரமாதேவி :** (இன்னும் அதிக வியப்புடன்)...சக்கிர வர்த்திகளே !

**இராஜராஜன் :** ஆனல் நான் வயதானவன். என் கனவை நிறைவேற்றச் சக்தியும், இலட்சிய யாத்திரையை முடிக்க ஆயுளும் இல்லாதவன்! வேறு யாரையாவது நம்பித்தான் அந்தப் பொறுப்பை விட்டுச்செல்ல வேண்டியவன்... இல்லையா ?

**வீரமாதேவி :** தங்கள் குமாரசக்கிரவர்த்திகள் தங்கள் கனவை நிறைவேற்றுவார் என்கிற பரிபூரண நம்பிக்கை எனக்கு உண்டு!

**இராஜராஜன் :** சோழர்கள் என்றுமே தேசபக்தியில் சிறந்தவர்கள். தாங்கள் பிறந்த தமிழ் நாட்டின் மானுபிமானத்தையும் பெருமையையும் காப்பாற்றுவதில் எதையும் தியாகம் செய்யத் தயங்கமாட்டார்கள். இல்லையா ?

**வீரமாதேவி :** (இன்னும் அதிக வியப்புடன் கைகளைப் பிசைந்துகொண்டு) மகராஜா...

**இராஜராஜன் :** எவருக்கும் எட்டாத இமயமும் என் முன் மண்டியிடுவது உண்டு. ஆனல் எந்த மன்னர் மன்னன் முன்னும் இந்த மாநிலத்தில் ராஜராஜன் மண்டியிட்டதில்லை...இல்லையா ?...

**வீரமாதேவி :** (திகைப்புடன்) ஆ...!

**இராஜராஜன் :** ஆனல் இந்த ராஜராஜன் உன்னிடம், சோழ சாம்ராஜ்யத்திற்காக ஒரு பிச்சை கேட்கிருன்!

**வீரமாதேவி :** சக்கரவர்த்திகளே! இவ்வாறு சொல்வதைவிட என்னைச் சித்திரவதை செய்துகொன்றிருக்கலாம்! தாங்கள் கேட்பது என் உயிரை என்ருல் இப்போதே ஆனந்தத்துடன் தருவேன் !

**இராஜராஜன் :** நான் உன்னிடம் அதிகமாக ஒன்றும் கேட்டுவிடவில்லை! என் வீரமகனைத்தான் திருப்பித்தா என்று பிச்சை கேட்கிறேன்! அதுவும் எனக்காக அல்ல. இந்த சோழ சாம்ராஜ்யத்திற்காக!...வீரமாதேவி...வேங்கி

காடு நம் சோழ சாம்ராஜ்யத்திற்கு வாசல்போல. அதன் மீது படையெடுத்து விமலாதித்தனோடு போரிட என் வீர மகன் இராஜேந்திரன் மறுப்பானாகில், சோழப் பேரரசின் விருக்ஷமே ஆட்டம் கண்டுவிடும். அது உனக்கு வெகு நன்றாகத் தெரியும். தெரிந்திருந்தும், வீரமங்கையாய் வீர உணர்ச்சி ஊட்ட வேண்டிய வீரமாதேவி, தன் காதலைக் காட்டி என் ஒரே மகனைக் கோழையாக்குகிறாள்...வீரமா தேவி, உன்னிடம் நான் கேட்பதெல்லாம் ஒன்று தான். ...இதோ வாழையடி வாழையாக வந்த வீரவாளை என் வீர மகனின் கையில் அலங்கரிக்கச்செய்...அல்லது அவ னைக் கோழையாக்கி இந்த வாளாலேயே சோழப் பேரரசின் மூலவேரை அழித்துவிடு...

[அவள் காலடியில் முன் இராஜவாளை வைக்கிறான். அதைச் சகிக்காதவளாய், வீரமாதேவி துடிக்கிறாள்.]

***வீரமாதேவி :*** (இன்ன சொல்வதெனத் தெரியாது உணர்ச்சி வசமாகி மருகுகிறாள்)...நான் எவ்வளவு துர்ப் பாக்கியவதி!

[இராஜேந்திரன் அங்கு அவளைத் தேடிக்கொண்டு வந்தவன், சக்கிரவர்த்திகளைக்கண்டு திகைத்து நிற் கிறான்]

***இராஜேந்திரன் :*** வீரமாதேவி...

***வீரமாதேவி :*** (உணர்ச்சிக்கு வடிகால்போல் அவனை நோக்கிச் சீற்றத்துடன்) யார்...? இளவரசரா...? ...என்னை வீரமாதேவி என்று உங்கள் வாயால் கூப்பிட வேண்டாம்...போரென்றால் படைத்தலைமைக்குத் தலை மறையும் ஒரு கோழையைக் காதலித்ததற்காக நான் வெட் கப்படுகிறேன்...

***இராஜேந்திரன் :*** ஆ, வீரமாதேவி...நம் காதல்?

***வீரமாதேவி :*** நெஞ்சுரமில்லாத ஒருவன் நெஞ்சில் உதித்த காதல் நிலையாக நிற்க முடியாது.

***இராஜேந்திரன் :*** வீரமாதேவி!

***வீரமாதேவி :*** வீரத் தமிழ் மண்ணில் பிறந்து வீரப் பெண் குலத்திலே வளர்ந்தவள் நான். உன் கணவன் எங்கே என்று கேட்க போர்க்களத்தைச் சுட்டிக்காட்டிய தமிழ்ப் பெண்மையில் தழைத்தவள் நான், முன்னையப் போரில் தன் தமையனையும், நேற்றையப் போரில் தன் கணவனையும் பறிகொடுத்தும், இன்று போர்ப்பறை கேட்டுத் தன் ஒரே பச்சிளம் மகனையும் போருக்குப் பரிந்தனுப்பிய தமிழ்த்தாய் வழியில் வந்தவள் நான்...

***இராஜேந்திரன் :*** *(குமுறி)* ஆ, வீரமாதேவி,

***வீரமாதேவி :*** தவமிருந்து பெற்ற தன் தனையன் போரில் புறமுதுகிட்டான் என்று கேட்டு, அவன் புறமுதுகிட்டிருந்தால் அவன் புன்வாயால் சுவைக்கப் பாலூட்டிய தன் தனத்தையே அறுத்தெறிவேன் என்று வஞ்சினம் கூறிய தாய் வழியில் வந்தவள் நான்... *(இராஜராஜனை நோக்கி)* சக்கரவர்த்திகளே !...ஒரு கோழையைக் காதலித்த குற்றத்திற்காக, நானே படைத்தலைமை ஏற்று வேங்கி வேந்தர் விமலாதித்தரோடு போரிட்டு, வீரபூமியிலேயே வெற்றி கீதத்துடன் மரணமடைகிறேன் !... காதலன் கௌரவத்தைக் காரிகை ஒருத்தி காத்தாள் என்று பெண்குலம் பெருமை பேசட்டும்.

[வாளை எடுத்துக்கொள்கிறாள்.]

***இராஜேந்திரன் :*** *(உணர்ச்சி வசமாகி வீரமாதேவியின் கையிலிருந்த வாளைப் பறித்து படபடவென)* என்ன சொன்னாய் வீரமாதேவி? சோழன் கரிகாலன் வம்சத்தில், இராஜராஜ சோழரின் மகனாய்ப் பிறந்த இராஜேந்திரன் ஒருநாளும் கோழையாக இருக்கமுடியாது !...நண்பனின் அன்பினால் கோழையானவனை நங்கையின் காதல் வீரனாக்கியது என்று பெண்குலம் பெருமை பேசட்டும்!

[தந்தையின் முன் செல்கிறான்.]

***இராஜேந்திரன் :*** சக்கரவர்த்திகளே ! இதோ புறப்பட்டுவிட்டேன் போருக்கு ! விமலாதித்தனை முறியடித்து வேங்கி மண்ணில் சோழர் புலிக்கொடியைப் பறக்க விடு

வேன். வெற்றி மகளோடு விளையாடி வாகை மாலை சூடும் அந்த வீரக் கையாலே என் வீரமாதேவிக்கு மணமாலை சூடுவேன். நாட்டின் தேவை முன் நட்பையும் துடைத்தெறிந்தான் ஒரு நன்மகன் என்று வீரர் பெருந்திருக்கூட்டம் வெற்றிகீதம் பாடட்டும்...வாழ்க சோழநாடு! வளர்க வீரபரம்பரை!

[இராஜேந்திரன் விரைந்துபோய் மறைந்த பிறகு, இராஜராஜனை நோக்கி, கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, ஆனந்தப் புன்முறுவல் செய்கிருள் வீர மாதேவி. இராஜராஜன் சிரிக்கிருன்.]

**வீரமாதேவி :** சக்கிரவர்த்திகளுக்கு இப்போது திருப்திதானே...?

**இராஜராஜன் :** இன்னும் இல்லை! ஆனாலும் உன் தியாகம் மகத்தானது!

**வீரமாதேவி :** இதிலென்ன தியாகம் இருக்கிறது? ஒன்பது லட்சம் போர்வீரர்களுடன படையெடுத்து எத்தனையோ நாடுகளை வென்று பஞ்சவன் மாராயன் என்று பட்டம் பெற்ற குமாரச் சக்கிரவர்த்திகளுக்கு வேங்கி விமலாதித்தரின் சிறு படை எம்மாத்திரம்? இளவரசர் வெற்றி பெறுவது வெகு சுலபம்!

**இராஜராஜன் :** அவ்வளவு சுலபமாயிருந்தால் அவ்வளவு பெரிய சோழப் படையுடன் சாமானியமான ஆளையே அனுப்பியிருப்பேனே! வீரமாதேவி. இரட்டபாடி சத்தியாசிரயனும் வடவேந்தர்களும் நம் சோழ நாட்டை நோக்கிப் படையெடுத்து வந்தால், எந்த நேரத்திலும் நம் மூன்று மகா சேனையும் தேவைப்படும்! அதனல்...வெறும் ஐநூறு போர்வீரர்களை மட்டுந்தான் இராஜேந்திரன் வசம் வேங்கிப் போருக்கு அனுப்பப் போகிறேன்...இந்த ஐநூறுவரை வைத்துக்கொண்டு தான் நம் இராஜேந்திரன் விமலாதித்தனின் ஐம்பதினுயிரம் போர் வீரர்களை வெல்லவேண்டும். அது அவ்வளவு சுலபமன்று...(வீரமாதேவியின் முகத்தைக் கூர்ந்து நோக்கி) வீரமாதேவி...ஏறக்குறைய என் மகனை மரணப் போருக்கு அனுப்புவது போன்றது தான்!

***வீரமாதேவி :*** ஆ! (விம்மலையும் அழுகையையும் அடக்கமுடியாமல் அவள் தன்னிரு கைகளாலும் முகத்தை மூடிக்கொண்டு தேம்புகிருள்.)

***இராஜராஜன் :*** அரசியலில் இருதயத்தை இரும்பாக்கிக்கொள்ளப் பழகவேண்டும்.

[இராஜராஜன் போகும்போது வீரமாதேவியை ஒருமுறை திரும்பிப் பார்த்துவிட்டுச் செல்கிருன்.]

# காட்சி: 19

## பாலதேவரின் பூஜை அறை ;
## சாளரத்தின் பின்புலத்தில் பூரணநிலா காய்கிறது

[ஒற்றனெருவனுடன் பாலதேவர் இரகசியமாக உரையாடுகிருர்.]

***பாலதேவர் :*** நான் சொன்னவையெல்லாம் நினைவிருக்கட்டும். அடுத்த பௌர்ணமிக்குள் நம் பலநாள் கனவு பலித்துவிடும். நம் இரட்டபாடி நாட்டிற்கு ஜன்ம சத்ருக்களான சோழருக்கும் வேங்கியருக்கும் போர் மூண்டுவிட்டது. இனிக் கடைசிவரை போராட்டத்தை விடமாட்டார்கள். இரு பகுதிகளிலும் பல்லாயிரக் கணக்கான போர் வீரர்கள் பலியாகி இரண்டு வல்லரசுகளுமே பலஹீனமடைந்துவிடும். மாபெரும் சேனைத் தலைவர்களாக விளங்கும் விமலாதித்தன், இராஜேந்திரன் இவ்விருவரில் ஒருவர் மடிவது நிச்சயம். இரு தரப்பில் எவர் அழியினும் நமக்குச் சாதகமே! இனி எந்தச் சமயமும் இந்தத் தமிழ் நாட்டின் மீது படையெடுத்து வர நம் இரட்டபாடி சித்தமாயிருக்கவேண்டும்! என் அறிவிப்பை எந்தக் கணமும் எதிர்நோக்கிப் படைகளுடன் காத்திருக்குமாறு சத்தியாசிரய மன்னரிடம் சொல்...

***ஒற்றன் :*** ஓலை ஏதாவது...

***பாலதேவர் :*** (கள்ளச் சிரிப்புடன்) இப்போது என் எழுத்தில் எதுவும் வேண்டாம்! எதிர்பாராத விதமாக எவர் கையிலாவது சிக்கினல் நம் இலட்சியமே சிதறி

விடும்! எவராலும் நிரூபிக்க முடியாத வகையிலே சதித் திட்டங்கள் உருவாகட்டும்! நான் ஏதாவது ஓலை எழுதி னுல் அது கடைசி ஓலையாகவே இருக்கட்டும்!

**ஒற்றன் :** *(சத்தியாசிரய மன்னனின் இலச்சினை பொறித்த குத்துவாளை பாலதேவரிடம் கொடுத்து) இந் தக் குத்துவாளை நம் இரட்டபாடி மன்னர் தங்களிடம் கொடுக்கச் சொன்னுர்.*

**பாலதேவர் :** *(அதை வாங்கி அதன் இலச்சினையை யும் கூர்மையையும் குறிப்பாகப் பார்த்துவிட்டு)...இது எதற்கு? என் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்கா? அல்லது இராஜராஜனைக் கொல்வதற்கா? இரண்டுக்கும் தேவைப்படாது! முட்டாள்! (குத்துவாளை அவன் முன் வீசியெறிந்துவிட்டுச் சுற்று முற்றும் பார்த்தவண்ணம்) வெளியே யாரோ வரும் காலடி ஓசை...! சரி, சரி...சீக் கிரம் வந்த சுவடு தெரியாமல் போய்விடு!...*

**பூங்கோதை :** *(வெளிப்புறமிருந்து கூவுகிருள்) பூங் கோதை வந்திருக்கிறேன்!*

[பாலதேவர் பரபரப்புடன் ஒற்றனைப் பின்புறமாக ஓடிச்செல்லும்படி சைகை காட்டிக்கொண்டே, முன்னுல் நடந்து போகிருர். ஒற்றன் பின்புறம் ஓடி மறைகிருன்.]

**பாலதேவர் :** *(முன்னுல் நடந்துகொண்டே உரத்த குரலில் கூவியவராக) வா, பூங்கோதை! பூஜை முடிந்து விட்டது! எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு போ!*

[பாலதேவர் வெளியே போகிருர். அவர் போனதும் அவருடைய ருத்திராட்சமாலை, உத்தரீயம், பூஜைச் சாமான்களையும் ஒரு தட்டில் பூங்கோதை எடுத்து வைத்துக்கொண்டு வருகிருள். கீழே கிடக்கும் குத்து வாளையும் எடுத்து அவற்ருேடு வைத்துக்கொண்டு போகிருள்.]

[பூங்கோதை பூஜைத் தட்டுடன் வெளியேறும் சமயம் மேற்கோள் புலவர் மேதினிராயர் வந்து அவளது வழியை மறித்துக்கொண்டு நிற்கிருர். நாணிக் கோணிக்கொண்டு நிற்கும் அவருடைய பெரிய

உருவத்தைப்பார்த்து ஏளனமாகப் பூங்கோதை சிரிக்கிருள். மேதினிராயர் அதிகமாகக் கண் சிமிட்டிப் பல்லிளிக்கிருர்.]

**பூங்கோதை:** என்னஐயா இது, பைத்தியமா?

**மேதினிராயர்:** (நாணத்துடன் தலை அசைக்கிருர்.)

**பூங்கோதை:** புரியலையே!...யாரையா நீங்க? பெரியகோயில் நந்தி எழுந்திருச்சு வந்து நிக்கிறமாதிரி?... உமக்கு என்னய்யா வேணும்?

**மேதினிராயர்:** (விடைபகராமல் காதல் பார்வை பார்க்கிருர்.)

**பூங்கோதை:** (அவரைச் செவிடு எனக் கருதி உரத்த குரலில்) ஓ ஐயா! உமக்கு என்னவேணும்?

**மேதினிராயர்:** ஹி...ஹி...ஹி.!

**பூங்கோதை:** சரிதான்! செவிட்டு ஊமை போலிருக்கு!

[அவரிடம் சைகைகள் மூலம் 'என்னவேண்டும்' எனக் கேட்கிருள்.]

**மேதினிராயர்:** (மெய் சிலிர்த்து உரத்த குரலில்) ஆ! பூங்கோதாய்! உன் பருவத்திற்கும் என் உருவத்திற்கும்...ஆகா...என்ன பொருத்தமோ...நங்காய் உனக்கும் எனக்கும் இசைந்த பொருத்தம். என்ன பொருத்தமோ?

**பூங்கோதை:** அடேயப்பா! என்ன குரலய்யா?

[இந்தச் சமயம் முத்துப்பல் கவிராயர் வந்து பார்த்துத் திடுக்கிட்டு மறைந்து நிற்கிருர்.]

**பூங்கோதை:** நீங்கள் யாரய்யா?

**மேதினிராயர்:** (தம்மைத் தற்பெருமையுடன் சுட்டிக்காண்பித்து) மேற்கோள் புலவர் மேதினிராயன் என்ருல் அரசவையில் அவனுக்கு ஒரு **தனியிடம்** உண்டு!

**பூங்கோதை:** ஆமாமா, உமக்குத் **தனி** இடம் வேண்டியது தான்! ஏன்று **மேதிப்** புலவரில்லையா?

**மேதினிராயர் :** (இருமிக் கனைத்துக்கொண்டு) அன்று உன்னை நான் கண்டநாள் முதலாக உருகிக் கொண்டே இருக்கிறேன்!...அதிலும் அரசியல் ஞானி பாலதேவரின் பணிப்பெண் என்று அறிந்ததும் என் காதல் எல்லையைத் தாண்டி எங்கோ போய்விட்டது!

**பூங்கோதை:** அப்படியே போயிடட்டும்! புலவர் களாம் புலவர்கள்! ஆளுங்களைப் பாரு! அன்னைக்கி ஒரு சொத்தைப் பல்லுக் கவிராயர் வந்தாரு, திடீர்னு காதலிக் கிறேன்னாரு! இன்னைக்கு என்னடான்னு இந்தப் பருவதப் புலவர் வந்து பல்லைக் காட்டுகிறார்! போங்கய்யா! போங்க! ஊரெல்லாம் ஆம்பிளைங்க வரிஞ்சுக் கட்டிக்கிட்டு போர்க் களத்துக்குப் போறாங்க! இவங்க என்னடான்னு இப்பத் தான் சாவகாசமாக் காதலிக்கிறாங்களாம்! போங்கய்யா! போங்க! போர்க் களத்திற்குப் போய் இரண்டு பரணியா வது பாடித் தள்ளிட்டு வாங்க!

[பூங்கோதை வேகமாக வெளியேறுகிறாள். வாடிக் குனிந்து நிற்கும் மேதினிராயரிடம் முத்துப்பல் கவி ராயர் வருகிறார். அவருடைய முதுகில் தட்டி நிமிர்த்து கிறார்.]

**முத்துப்பல்லர்:** ஐயா! என்ன செயல் செய்து விட் டீர்?

**மேதினிராயர்:** செயற்கரிய செய்வர் பெரியர்!

**முத்துப்பல்லர்:** உறவாடியே உதைத்து விட்டீரே?

**மேதினிராயர்:** கண்ணால் பேசி, கருத்தால் பேசி...

**முத்துப்பல்லர்:** என்னய்யா நடந்தது?

**மேதினிராயர்:** உமக்கு நடந்ததுதான் எமக்கும் நடந்தது.

**முத்துப்பல்லர்:** அதுதானே? என்னையே காதலிக் காத ஏந்திழையாள் எப்படி ஐயா இந்த உருவத்தை விட்டு நோக்குவாள்?

**மேதினிராயர்:** உண்மைக் காதலுக்கு உருவம் எதற் கய்யா? உள்ளத்தோடு உள்ளம் உறவாடுதலன்றோ உண்மைக் காதல்?

**முத்துப்பல்லர்:** அப்படியானால் ஒன்று செய்யும்! நீர் உள்ளத்தைக் காதலியும்! யான் உருவத்தைக் காதலிக்கின்றேன்!

**மேதினிராயர்:** ஆகா! அதில் வெற்றி யாருக்கு என்று பார்ப்போம்!

[இருவரும் போகிறார்கள்.]

## காட்சி : 20

### தஞ்சை அரண்மனை ; அருணோதய நேரம்

[இராஜராஜனும், மதுராந்தகரும், குந்தவியும் வருகிறார்கள்.]

**மதுராந்தகர் :** சக்கிரவர்த்திகளின் கோழிச்சண்டை விளையாட்டு இன்றுதான் மக்கள் முன் நடைபெறும் என்று நாட்குறித்தோம். அதற்குள் வேங்கிப்போர் ஒன்று வந்து...

**இராஜராஜன் :** (புன் சிரிப்புடன்) அதற்காக மக்களுக்குரிய பொழுதுபோக்கை நிறுத்தவேண்டாம். அந்த வேங்கி நாட்டுப் போரும் ஒரு வகையில் கோழிச் சண்டையே! ஆனால் அதைவிட இந்தக் கோழிச்சண்டை விளையாட்டுதான் வெகு நேரம் நீடிக்கும்.

**மதுராந்தகர் :** சண்டையில் தங்களுடைய கோழி ஊத்தையடையாமல் வெற்றிபெற வேண்டும் என வில்லவ மூவேந்த வேளான் என்பவன் ஆலயத்திற்குத் திருவிளக்கு ஒன்று தானம் செய்திருக்கிறான்,

**இராஜராஜன் :** அதையும் கோயிற் கல்வெட்டில் குறிப்பிடச்சொல்லும். மக்களின் பொழுதுபோக்கையும் விளையாடல்களையும் கவனிப்பதுகூட ஓர் அரசியல் கடமைதான் என்று பிற்காலச் சந்ததியினர் அறியட்டும்.

[படை அணிவகுப்பிற்குரிய அறிவிப்பு முரசொலிகள் கேட்கின்றன.]

**குந்தவி :** (இராஜராஜனை நோக்கி குழந்தைபோல்) அப்பா...போர் என்றால் என்னப்பா...?

**இராஜராஜன் :** உன்னிடமிருந்தா இந்தக் கேள்வி...? குழந்தாய்! நீ பூப்பந்தை வைத்துக்கொண்டு அம்மானை விளையாடுகிறாயல்லவா, அதுபோல் போரென்பது பெரியவர்களாகிய நாங்கள் உயிரைப் பணயமாக வைத்து மரணத்தின் தலைவாசலில் நின்று விளையாடும் ஓர் அம்மானையம்மா!

**குந்தவி :** உயிர்களைக் கொல்வதா ஒரு விளையாட்டு?

**இராஜராஜன் :** அதுதான் உன்னதமான விளையாட்டு என்று விமலாதித்தன் கருதுகிறான். ஆனால் பயிற்சிபெற்ற நம் சோழப் படை முன் அவன் நிற்கமுடியாது. உன் வீரத தமையன் சிறு படையை வைத்துக்கொண்டே பெரும் படையையும் பொறிகலங்கச் செய்து முறியடித்து விடுவான்!

**மதுராந்தகர் :** முற்றுகையிட்டுத் தாக்குவதில் நம் குமாரச் சக்கரவர்த்திகள் எவ்வளவு வல்லவரோ, அது போல் தற்காப்பு யுத்தம் புரிவதிலும், படைகளை வியூகம் வகுப்பதிலும் விமலாதித்தர் வல்லவர். விமலாதித்தர் அணிவகுத்து நிறுத்தும் முன்னணிப் படையைச் சிதறடித்துக்கொண்டு வேங்கி எல்லையில் நம் படைகள் பிரவேசிப்பது என்பது அவ்வளவு விரைவில் முடியக்கூடிய காரியமன்று! மேலும் வேங்கிப்படையும், சோழப் படையும் எப்போது அழியுமென கங்கை மன்னர்கள் முதலான நம் எதிரிகள் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சமயம் இது!

**இராஜராஜன் :** விமலாதித்தனும் நம் இராஜேந்திரனும் தனி வாட்போர் புரிவார்களேயானால்...

**குந்தவி :** (வெடுக்கென) வெற்றி யாருக்கென்பது என்ன நிச்சயம்?

**இராஜராஜன் :** (புன்சிரிப்புடன்) தனி வாட்போரில் நிச்சயம் உன் வீரத் தமையன் இராஜேந்திரனுக்குத்தான் வெற்றி கிடைக்கும்! வியூகம் வகுப்பதிலும், வாய்வீச்சிலும்தான் விமலாதித்தன் வல்லவனே தவிர, வாள்வீச்சிலே நம் இராஜேந்திரன்தான் வல்லவன். எண்ணற்ற

போர்களிலே எதிரிகளை உயிரோடு பிடித்த வாட்பயிற்சி உன் வீரத் தமையனுக்கு உண்டு! ஆனால் விமலாதித்தன் சுத்த வீரனுகையாலே, தோல்வியைத் தன் தோள்களிலே சுமக்கமாட்டான்; போர்க்களத்திலேயே தன் உயிரை விட்டுவிடுவான்!

[குந்தவி சிந்தனைவசமாகி நிற்கிறுள். இராஜேந்திரன் போர்க் கவசங்கள் அணிந்து வீரப் புன்னகையுடன் வருகிருன். இன்னொரு புறமிருந்து வரும் குந்தவ்வை யாரை வணங்குகிருன். அறைகூவல் முரசுகள் முழங்குகின்றன.]

**இராஜேந்திரன் :** அத்தை! போருக்குப் புறப்பட்டு விட்டேன்,

**குந்தவ்வையார் :** (அவன் நெற்றியில் குங்குமத் திலகமிட்டு) வழக்கம்போல் வெற்றி விஜயனுய்த் திரும்பி வா!

[குந்தவ்வையார் போகிருர். குந்தவியிடமும் விடை பெற்றுக்கொண்டு இராஜேந்திரன் புறப்பட்டுச் செல்லுகிருன். குந்தவி வேகமாக அவன் பின்னல் ஓடி வருகிருள்.]

**இராஜேந்திரன் :** என்ன குந்தவி, என் பின்னலேயே ஓடி வருகிருய்? வேங்கி வரை ஓடி வந்துவிடுவாய் போலிருக்கிறதே?

**குந்தவி :** நீங்கள் என் அருமை அண்ணன் அல்லவா, உங்களிடம் ஒன்று கேட்கலாமா?

[அவன் முகத்தை நிமிர்த்திக் கெஞ்சுதலாய்ப் பார்க் கிருள் குந்தவி.]

**இராஜேந்திரன் :** என்ன குந்தவி?

**குந்தவி :** ஊஹும், கேட்கமாட்டேன்! கேட்டால் நீங்கள் நிச்சயம் கோபித்துக்கொள்வீர்கள்!

**இராஜேந்திரன் :** நிச்சயம் கோபித்துக்கொள்ளவே மாட்டேன். என்ன வேண்டும் குந்தவி?

**குந்தவி :** உயிர் பத்திரமாயிருக்க வேண்டும்!

*இராஜேந்திரன் :* என் உயிரை என்னிடமிருந்து பறிக்க எமனுக்குக்கூடத் தைரியமில்லையே !

*குந்தவி :* உன் உயிரைப் பற்றியல்ல, அண்ணா !

*இராஜேந்திரன் :* பின் யார் உயிரை ?

*குந்தவி :* நீயே யோசித்துப் பார் !

*இராஜேந்திரன் :* (புன்னகையுடன்) விமலாதித்தன் உயிரைத்தானே ? பத்திரமாய்க் கொண்டுவந்து சேர்க்கிறேன் ! கவலைப்படாதே...!

*குந்தவி :* நம் படை தோற்கும்போலிருந்தாலும் அவர் உயிருக்கு ஆபத்து ஏற்படக்கூடாது. ஏற்பட்டதோ...

*இராஜேந்திரன் :* ...என் முகத்தில் விழிக்கமாட்டாய் !

*குந்தவி :* இல்லை, என்னை இந்த உலகில் நீ பார்க்க மாட்டாய் !

*இராஜேந்திரன் :* குந்தவி, உன் மனசு எனக்குத் தெரியாதா ? அந்த விமலாதித்தனை உயிரோடு பிடித்து வந்து உன் கையில் பொம்மையாக விளையாடத் தருகிறேன். இது உன் வீரத் தமையன் இராஜேந்திரனின் வாக்குறுதி !

[போகிறார்கள்.]

## காட்சி : 21

வேங்கி நாட்டின் எல்லைப்புறத்தில், பன்றிக் கொடி பறக்கும் விமலாதித்தன் பாசறை. பின்புறம் வெகு தொலைவு வரை பலவிதப் பாசறைகள் தென்படுகின்றன.

அந்தி நேரம்.

[பாசறை முன், எப்போதும் புன்னகை ததும்பும் முகம் படைத்த விமலாதித்தன், தன் முன்னே கிடக்கும் பல உடைவாள்களில் ஒன்றைப் பொறுக்கியெடுத்து வளைத்துப் பார்த்துவிட்டுச் சிரிக்கிறான்.]

**விமலாதித்தன் :** மெல்லிய பூங்கொடிபோல் எதற்கும் வளைந்துகொடுக்கிருள் இந்த வானெனுங் கன்னி...

[அமைச்சர் வருகிருர்.]

**அமைச்சர் :** துறவி ஒருவர் தங்கள் திருமுகம் காணக் காத்துநிற்கிருர்.

**விமலாதித்தன் :** போர்க்களத்திலே துறவியா? வரட்டும்...

[அமைச்சர் வெளிச்சென்று, துறவி வேடத்திலுள்ள இராஜராஜனை அழைத்து வருகிருர்.]

**துறவி :** வாழ்க! மன்னவா! வாழி நலம் சூழ.

**விமலாதித்தன் :** அமருங்கள்! விமலாதித்தனை நாடிவந்த காரணம்...

**துறவி :** வேறென்றுமில்லை! அமைதி நிலவிய இம் மாநிலம் மீண்டும் அமர்க்களமாகப் போவதை அறிந்தேன். வருந்தினேன். இந்த மக்கட் கொலையைத் தடுக்க ஏதாவது வழி கிடைக்குமா என ஆராய்ந்துபோகவே வந்தேன். வேங்கி மன்ன, இக் கொடும்போர் நடைபெற வேண்டியதுதான ?

**விமலாதித்தன் :** அடிகளே! போரை விரும்பியவன் விமலாதித்தனன்று! சோழரின் பெரும் நிலப்படையை என் வேங்கி மண்ணில் நிறுத்தவும், சோழப் பேரரசுக்குத் திறை செலுத்தித் தலைவணங்கவும் சம்மதிக்காததால் சோழரே போர்முரசு கொட்டியிருக்கிருர்கள். என்ன செய்ய முடியும்? ..விமலாதித்தன் கோழையல்லவே!

**துறவி :** வெற்றிமேல் வெற்றி பெற்று வரும் வீரன் இராஜேந்திரன் வேங்கிநாட்டின் படைகளைச் சிதறடித்து விடுவான் என்று பேசிக்கொள்ளுகிருர்கள்.

**விமலாதித்தன் :** அது அவ்வளவு எளிதல்ல அடிகளே! கங்கை மன்னரோ இரட்டபாடி சத்தியாசிரயனே எங்கள் வேங்கி வாசல் வழியாக சோழ நாட்டின் மீது படையெடுத்து வர முயலும்போது என் தற்காப்பிற்குத்

தேவையென மாபெரும் படையொன்றைத் தயாரித்தேன். இப்போது என் படை தோற்ருலும், வென்ருலும் நஷ்டக்கணக்குச் சோழர்களுக்குத்தான்!

**துறவி :** அவ்வாறு உன் படைபலம் அழிவது என்றென்றும் உன் மூத்த பரம்பரைக்கும் நஷ்டந்தான்! உன் படைகள் அழிந்துவிட்டன என்று கேள்விப்படும் மறு கணமே இரட்டபாடி சத்தியாசிரயன் மறுபடியும் இளைய பரம்பரையைக் கிளப்பிவிட்டு உங்களுடைய அரியணையைக் கைப்பற்றிக்கொள்வான்.

**விமலாதித்தன் :** என்ன செய்வது? வேங்கியே அழியினும் இப்போது சோழர் புலிக்கொடியை வேங்கி மண்ணில் ஊன்ற விடமாட்டேன். ஐம்பதினுயிரம் வீரர்களைக் கொண்ட என் வீரர்களின் படையில் ஒரு வீரனின் உயிர் இருக்கும் வரையில் எதிரி எவனும் வேங்கி எல்லையை மிதிக்கவும் முடியாது!

**துறவி :** ஐம்பதினுயிரம் வீரர்களைக் கொண்ட முன்னணிப் படையா? என்ன ஆச்சரியம்? சோழர் படையில் ஐயாயிரம் வீரர்கள்தானே வருகிருர்கள்?... என்ன துணிவு! ஐயாயிரம் வீரர்களை வைத்துக்கொண்டு ஐம்பதினுயிரம் வீரர்களை எதிர்க்க வேண்டுமென்ருல் இராஜேந்திர சோழனுக்குத்தான் தன் வீரத்தில் எவ்வளவு நம்பிக்கை இருக்கவேண்டும்!

**விமலாதித்தன் :** வெறும் ஐயாயிரம் வீரர்களோடுதான் இராஜேந்திரன் வருகிருஞ? எனது படைபலம் சோழர்களுக்குத் தெரிந்திராது. விமலாதித்தனின் பலத்தைத் தவருகக் கணக்கிட்டுவிட்டார்கள். வேங்கியர் வெற்றி பெறுவது நிச்சயம்!

**துறவி :** வெற்றி வேங்கியருக்கே கிடைக்கலாம். ஆனல் ஐயாயிரம் வீரரை ஐம்பதினுயிரம் வீரர் எதிர்த்து வெற்றி கொண்டாரென்ருல், அதில் என்ன வீரமிருக்கிறது? விமலாதித்தனின் வீரத்திற்குத்தான் களங்கம் ஏற்படும்...

**விமலாதித்தன் :** அடிகள் கூறுவதும் உண்மைதான்! சிறு படையுடன் போரிட்டுப் பெரும் படையை

முறியடிப்பது சிறப்பு என்னும் எண்ணத்தோடுதான் இராஜேந்திரன் சிறு படையுடன் புறப்பட்டிருக்க வேண்டும்.

**துறவி :** இராஜேந்திரன் மகாவீரனென்று கேள்விப் பட்டிருக்கிறேன். படை வலிமையை விட அவனுக்குத் தன் வாள் வலிமையில்தான் அதிக நம்பிக்கை இருக்குமென நினைக்கிறேன். எப்படியோ போரில் அதிகமான உயிர்ச் சேதம் ஏற்படாது விரைவில் ஒற்றுமை நிலவவேண்டு மென்பதே எனது விருப்பம். ஏனெனில் உங்கள் இரு வரின் படைபலத்தை அழித்துக்கொள்வது, கங்கை மன் னர்களைத் தமிழகத்தின் மீது படையெடுத்துவர வழி வகுப்பது போலாகும் !

**விமலாதித்தன் :** ஆம் ; அடிகளே. வீணுகப் படைச் சேதமும், உயிர்ச் சேதமும் ஏற்படாமல் தடுக்க ஒரு வழி தோன்றுகிறது. இராஜேந்திரனின் தன்னம்பிக்கையைச் சிதறடிக்கவும் அதுவே சரியான வழி !

**துறவி :** என்ன ?

**விமலாதித்தன் :** இந்த விமலாதித்தன் சமபலத் தோடுதான் போராடுவான் ! இராஜேந்திரனோடு தனி வாட்போர் புரிந்தே முடிவு காண்பான் !

**துறவி :** நல்ல யோசனை ! அதுதான் ஆண்மைக்கு அழகு. வீணன மக்கட் கொலையும், படையழிவும் தவிர்க் கப்படும். தமிழகமும் பாதுகாக்கப்படும் ! வாழ்க உன் வீரம் !

[விமலாதித்தனிடம் விடைபெற்றுக்கொண்டு துறவி புன்னகையுடன் வெளியேறுகிறார்.]

## காட்சி : 22

### தஞ்சை அரண்மனை ; பகற்பொழுது

**மேதினிராயர் :** வாருமையா கவிராயரே ! எங்கே காலை முதல் உம்மைக் காணோம் ?

**முத்துப்பல்லர்:** புலவரே, பூங்கோதை புகன்றபடி போர்க்களம் புகுந்து பரணிபாடப் புறப்பட்டேன். புவிமன்னர் மறுத்துவிட்டார். போர்க்களத்திலே போரே நடக்கப் போவதில்லையாமே !

**மேதினிராயர் :** இதென்னையா புதுமை?

**முத்துப்பல்லர் :** படைகளோடு படைகள் பொருதாவாம். விமலாதித்தரும் வீர இராஜேந்திரரும் தனி வாட்போர் புரிந்தே தகுதியான வெற்றி தோல்வி காண்பராம் !

**மேதினிராயர் :** வேங்கிப் போரில் வெற்றி யாருக்கோ ? யாரே கண்டார் ?

**முத்துப்பல்லர் :** (உட்புறம் நோக்கி) ஆ ! வருகிருள் வனிதை !......

**மேதினிராயர் :** பார்த்துவிடுவோம் இதில் வெற்றி யாருக்கு என்பதை.

**முத்துப்பல்லர் :** நீரே பாரும். அடுக்கடுக்காக விடும் உவமை வரிசைகளால் அவளை எப்படி உருக்குகிறேனென !

[பூங்கோதை மலர்க் குடலையுடன் வருகிருள். முத்துப்பல் கவிராயர் அவள் எதிரில் சென்று வழி மறைத்து நிற்கிருர்.]

**முத்துப்பல்லர்:** பூமாலை கொண்டு செல்லும் பூங்கோதாய் ! பாமாலை பாடும் பாவலனைப் பாராயோ?...

**மேதினிராயர் :** (முத்துப் பல்லரை விலக்கிக் கொண்டு பூங்கோதையின் முன் சென்று) பண்மொழிப் பாவாய் ! நின் மின்னொளிக் கரங்களால் தொடுத்த தேன் வழிப் பூமாலைகள் யாருக்கோ?......

**பூங்கோதை :** (பரிகாசமாக) உங்களுக்குத் தான் !

**முத்துப்பல்லர் :** அப்படிச்சொல், அடிசிற்கினியாளே!

**மேதினிராயர்:** அடிசிற்கினியாளே என்ருல் 'சமைப்பதற்கு அருமையான சமையற்காரியே' என்று பொருள். இதோ நான் சொல்கிறேன்.........ஆ ! மதியை மயக்கும் மடவன்னமே !

**முத்துப்பல்லர்:** (நகைத்து) அன்னம் என்ருல் சோறு. மட அன்னமே என்ருல் மடத்தனமான சோற்றுப் பருக்கையே என்று பொருள். இதோ பாரும்......... கருத்தறிந்து காதல் வழங்கும் காமதேனுவே! கற்பகத் தருவே!

**மேதினிராயர்:** (நகைத்து) காமதேனுவே என்ருல் மாடே என்று பொருள். கற்பகத் தரு ஒரு மரம். ஏனையா வனிதையை மாடே என்றும் மரமே என்றும் அழைக்கின்றீர்?

**முத்துப்பல்லர்:** உம்முடைய பதவுரை பொழிப்புரை வேண்டாமய்யா; நிறுத்தும்! (பூங்கோதையை நோக்கி) எழில் மிகு காரிகையே! எங்களில் எவர் நின் காதலுக்கு ஏற்றவர்? நின் செவ்வாய் திறந்து செப்புவாய்,

**பூங்கோதை:** செவ்வாயாவது? புதனவது?......... பொம்பிளேயோடு பேசவே உங்களுக்குத் தெரியலே. எபபடி ஐயா உங்களேக் காதலிக்கிறது...காலம் வரட்டும். கொஞ்சம் காத்திருங்கள்.

[பூங்கோதை போகிருள்.]

**முத்துப்பல்லர்:** சரி! காலம் வரும்வரை காத்திருந்தே காதலிப்போம்!

**மேதினிராயர்:** காலம் வரும் வரை மட்டுமன்று! காலன் வரும் வரையும் காத்திருப்போம்!

[போகிருர்கள்.]

# காட்சி : 23

## வேங்கி நாட்டு எல்லேப் புறத்தில் ஓர் இடம்; வைகறைப் பொழுது

[ஓர் எல்லேக் கல் அருகில் புலிக்கொடியும், இன்னெரு எல்லேக் கல் அருகில் பன்றிக் கொடியும் நடப்பட்டுள்ளன. பன்றிக்கொடி அருகில் விமலாதித்தன் உருவிய வாளுடன் நிற்கிருன். இராஜேந்திரன் பரபரப்புடன் உருவிய வாளுடன் ஓடி வந்து புலிக்கொடி அருகில் நிற்கிருன்.]

[போர் முரசங்கள் ஒலிக்கின்றன. விமலாதித்தனும் இராஜேந்திரனும் வாட்போர் புரிகிறார்கள்.]

***விமலாதித்தன் :*** இராஜேந்திரா... பார்த்தாயா, உன் தந்தையின் மண்ணாசை மகிமையை......? மரண தேவதை இந்தப் போர்க்களத்திலே எவ்வளவு அழகாகக் காட்சியளிக்க விரும்புகிறாள்?

***இராஜேந்திரன் :*** விமலாதித்தா! வெற்றி மகள் நம்மிருவரில் யாரைத் தன் காதலனாக ஏற்கப் போகிறாளோ......?

***விமலாதித்தன் :*** (வாட் சண்டையில் சோர்ந்து போகும் குரலில்) இராஜேந்திரா! புவி மகளுக்கு என் உடலத்தின் மீது ஆறாக் காதல் பிறந்து விட்டது. என் மார்பைத் தழுவ விரும்புகிறாள். என் வலது கையில் காயம் பட்டு விட்டது. இனி என்னால் போரிட முடியாது... வெற்றி மகளை நீ தான் உன் நாட்டிற்கு அழைத்துச் செல்வாய் போலிருக்கிறது.

***இராஜேந்திரன் :*** இல்லை, விமலாதித்தா... உன்னையும் வெற்றி மகளோடு என் நாட்டிற்கு அழைத்துச் செல்லப் போகிறேன்...

[உடைவாளைத் தன் உறையில் சொருக முயல்கிறான்]

***விமலாதித்தன்:*** இராஜேந்திரா, எனக்கா உயிர்ப் பிச்சை அளிக்கிறாய்? தோற்றுச் சிறைப்படும் அந்த அவமானத்தைச் சுத்தவீரனாகிய நான் சகியேன்! என் உயிர் போகும்வரைப் போரிட்டு வீரசுவர்க்கம் புக வேண்டுமென்கிற என் ஆசையைக் கெடுக்கிறாய். நீ வீரத்தை மதிப்பவனாயிருந்தால், உன் கத்தியை உறையினுள் சொருகுவதற்குப் பதிலாக என் உள்ளத்தில் சொருகி விடு!

***இராஜேந்திரன்:*** உன்னை உயிரோடு கொண்டு வருவதாக என் தங்கைக்கு வாக்குறுதி கொடுத்திருக்கிறேன். உன்னை மாய்த்து வெறும்கையனாக என் தங்கையின் முகத்தில் விழிப்பதைவிட இந்த வீர பூமியிலே மாய்ந்துவிடுவேன்......விமலாதித்தா. என்னிடம் சரணடையச் சம்மதமில்லையென்றால் உன் கத்தியை உடைத்தெறிவதற்குப் பதிலாக என் உள்ளத்திலே புதைத்து விடு!

***விமலாதித்தன்:*** ஒரு மானமுள்ள வீரன் தோல்வியைக் கண்டும் உயிர் சுமப்பதை சுத்த வீரனாகிய நீ விரும்புகிறாயா?

***இராஜேந்திரன் :*** விமலாதித்தா, நீ ஒரு மகாவீரன் என்றால், ஓர் அபலைப் பெண்ணின் உயிரையும் இன்னொரு மகாவீரனின் வாக்கையும் காப்பாற்றுவது உன் கடமையல்லவா ?

***விமலாதித்தன் :*** (வாளைத் தரையில் வீசியெறிந்து விட்டு) இராஜேந்திரா! இதோ வணங்கா முடி விமலாதித்தன் உன்னிடம் சிறைப்படுகிறேன்...ஒரு பெண்ணின் உயிரைக் காப்பதற்காக அல்ல! ஒரு மகாவீரனின் வாக்குறுதியைக் காப்பாற்றுவதற்காக!

## காட்சி : 24

### தஞ்சை அரண்மனை ;

### மாலை நேரம்

["ஜெயங்கொண்டசோழஉடையார் ராஜராஜசோழ தேவர் வாழ்க! வெற்றி வீரர் வீர ராஜேந்திரர் வாழ்க!" என்னும் வாழ்த்தொலிகள் வருகின்றன. இராஜராஜனும், பாலதேவரும், மதுராந்தகரும் வருகிறார்கள்.]

***பாலதேவர் :*** இருதரப்பிலும் பெரும் படைகள் அழியுமென எதிர்பார்த்திருந்தோம். ஒருவரும் சாகவில்லை. ஆனாலும் உன்னதமான வெற்றி...! விமலாதித்தன் இந்த மகத்தான தோல்விக்குப் பிறகும் இன்னும் உயிரோடு இருக்கிறான் என்றால்...?

***இராஜராஜன் :*** அதுதான் என் குமாரன் வீர இராஜேந்திரனின் மகத்தான சாதனை, பாலதேவரே! வேங்கையைப் பூனையாக்கியிருக்கிறான்.

***பாலதேவர் :*** விமலாதித்தனை உயிரோடு பிடித்தது மட்டும் போதாது. வேங்கியின் படைபலம் பெருகுவதற்குள் அதை முழுவதும் நிர்மூலமாக்கிவிடுவதுதான் சரியான இராஜ தந்திரம்.

**இராஜராஜன் :** அதற்கென்ன செய்வது?

**பாலதேவர் :** புலிமீது பூனைகள் பாய்ந்து மோதித் தானகவே அழிந்து போக வேண்டும். வேங்கிப் படைகள் ஆத்திரம் கொண்டு வலுவில் நம்மைத் தாக்கவரும் அளவிற்குச் சிறைப்பட்ட விமலாதித்தனை இங்கே நாம் அவமானப் படுத்த வேண்டும்.

**மதுராந்தகர் :** வேங்கியின் படை பலத்தைச் சீர் குலைப்பது நம்முடைய தற்காப்பையே சீர்குலைத்துக் கொள்வதாக முடிந்துவிடலாம்.

**இராஜராஜன் :** இருவர் கூறுவதும் ஆலோசனைக் குரியதுதான்!

[போகிறார்கள்.]

## காட்சி : 25

### தஞ்சை அரண்மனையில் அரசவை ;

### பகல் நேரம்

[இராஜராஜன் அரியணை மீது அமர்ந்திருக்கிறன். இராஜதந்திரி பாலதேவப் பட்டரையர் வெற்றிக் களிப்புடன் வருகிறார். அவர் பின்புறம், நாலைந்து சோழ வீரர்கள் சங்கிலியால் விமலாதித்தனைப் பிணித்து இழுத்து வருகிறார்கள். விமலாதித்தனே, முகத்தில் மாருத புன்சிரிப்புடனும் குனியாத தலை யுடனும் மகாவீரனைப்போலத் தலை நிமிர்ந்து வரு கிறன்.]

**இராஜராஜன் :** என் முன்னே தலை குனிந்து சிறைப் பட்டு நிற்பவன் யார்? வணங்காமுடி விமலாதித்தன?

**விமலாதித்தன் :** இராஜராஜ சோழரே, இன்றே உம் புகழ் நிலை நின்ற நாள்! எமனும் தொட நடுங்கும் விமலாதித்தனை வென்ற இன்றே உம் வீரத் திருநாள்!

**இராஜராஜன் :** பார்த்தீரா, பால தேவரே...என்ன இறுமாப்பு...தோற்றுச் சிறைப்பட்டுக் கைச் சங்கிலியால் கட்டப்பட்டும் சிரித்துக்கொண்டேயிருக்கிறன்.

**விமலாதித்தன் :** வீரன் எங்கிருந்தாலென்ன? சாவின் முனையில்கூட அவன் சாந்தமாய்ச் சிரிப்பான்!

**இராஜராஜன் :** நீ தோற்றவன் என்பது நினைவிருக்கட்டும்!

**விமலாதித்தன் :** வெற்றியும் தோல்வியும் ஒருவர் பங்கல்ல, ஜெயங்கொண்ட சோழரே! தற்காலிகமாய் நீர் ஜெயித்தீர்; அவ்வளவுதான்!

**இராஜராஜன் :** வேங்கி நாடு அடிமைப்பட்டது. அடிமைக்கு வாய் வீரம் வேறு?

**விமலாதித்தன் :** அடிமை...அ டி மை...அ டி மை என்ற இந்தப் பதம் அகம்பாவம் பிடித்த அரசர்களால் உண்டாக்கப்படுகிறதேயன்றி அடிமை என்று யாரும் பிறப்பதில்லை...இராஜராஜசோழ தேவரே...வேங்கி நாடு அடிமைப்பட்டது என்று எண்ணி மகிழாதீர். தாய் நாட்டின் சுதந்திரத்திற்காக வேங்கி மண்ணில் மற்றொரு விமலாதித்தன் தோன்றுவான். அவன் தலைமையில் வீரர்கள் வீறுகொண்டெழுவார்கள், வீரர்கள் மடிந்தால், பெண்கள் பொங்கி எழுவார்கள். பெண்களும் அழிந்தால் குழந்தைகள் குமுறி எழும். அவையும் அழிந்தால், வேங்கி மண்ணில் மனிதஜாதியே அழிந்துபோனாலும், அவ் வீரரத்தத்தில் தோய்ந்த வேங்கி நாட்டின் கல்லும் மண்ணுமே வீரங்கொண்டெழுந்து சண்டை செய்யும்... சுதந்திரத்தின் இனிமை கண்ட எவனும் அதைக் கை நழுவ விடமாட்டான்,

**இராஜராஜன் :** விமலாதித்தா, வாய் வீரா, உன்னைச் சிறையிலிடுகிறேன்!

**விமலாதித்தன் :** நாடு அடிமையாய்ச் சென்றபின் தோல்வியுண்ட அரசன் உத்தமனாயின், அவன் இருக்க வேண்டிய இடம் சிறைதான்...சிறை...சிறை...இராஜராஜ சோழ மகாராஜரே! என் உடலைத்தான் சிறை செய்யலாமே தவிர என் உள்ளத்தைச் சிறை செய்ய முடியாது.

**பாலதேவர் :** சக்கிரவர்த்திகளே...எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது, இவனைப் புலிக் கூண்டிற்குள் போட்டு அடைத்து வைக்கலாம்!

**இராஜராஜன் :** புலிக் கூண்டா?

**பாலதேவர் :** ஆமாம். இரட்டபாடி தேசத்தில் இத்தகைய முரடர்களைத் தண்டிக்கப் புத்திமான்கள் கண்டுபிடித்த புதிய கூண்டு! கங்கை மன்னர்கள் உபயோகிக்கும் நவீனத் தண்டனை! விமலாதித்தனைப் புலிக் கூண்டுக்குள் அடைத்துக் கோட்டை வாயிலில் வைத்துவிட்டால், வீதியில் போவோர் வருவோரெல்லாம் இவனைக் கண்டு சிரித்துச் சிரித்து இகழ்வார்கள். இளவரசி குந்தவி நாச்சியாரை இவன் பரிகசித்ததற்கு இவன் மீது பழி தீர்த்துக்கொள்ளலாம். உங்கள் ஏகாதிபத்தியத்தை எதிர்ப்பவர்களுக்கு அது ஓர் எச்சரிக்கையாகவும் இருக்கும். நம்மை இகழ்ந்த இவன் கர்வமும் அடங்கும். ஒரே கல்லில் மூன்று குருவிகளை வீழ்த்துவது தான் சரியான இராஜ தந்திரம்...ஹி...ஹி...

**மதுராந்தகர் :** மன்னா! இது நமது தமிழ் நாட்டில் இல்லாத வழக்கமாயிற்றே!...

**இராஜேந்திரன் :** ஆம்! சக்கரவர்த்திகளே! வீரத்திற்காக வாளேந்துபவர்கள் விதிவழியே தோல்வியுறுவதும் உண்டு. விமலாதித்தனைப் போன்ற மகாவீரன் ஒருவனை விலங்கிட்டுச் சபைமுன் நிறுத்துவதும் கூண்டிலிட்டுத் தெருவில் நிறுத்துவதும் இராஜ தந்திரத்திற்கு ஏற்றதாக இருக்கலாம். ஆனால், அதனால் விளையும் அவமானம் விமலாதித்தனுக்கல்ல!

**இராஜராஜன் :** முதிர்ந்த இராஜ தந்திரியான பாலதேவர் சொல்வதே சரி. கொண்டு போங்கள் இவனைப் புலிக் கூண்டிற்கு!

**விமலாதித்தன் :** (இழுத்துச் செல்லப்படும்போது) சோழமண்டலேஸ்வரா! உம் கண்ணை மாயைத் திரை மறைத்திருக்கிறது. அது உம் மாபெரும் புகழையும் மறைத்துவிடக்கூடாது.

# காட்சி : 26

## தஞ்சையில் ஒரு தெரு ; மாலை நேரம்.

[அவசரமாகச் செல்லும் முத்துப்பல் கவிராயரை மேதினிராயர் வழி மறித்து நிறுத்துகிறார்.]

**மேதினிராயர் :** ஓய்! கவிராயரே! நீர் புலியைப் பார்த்திருக்கிறீரா?

**முத்துப்பல்லர் :** ஓ! பார்த்திருக்கிறேன், பல இடங்களிலே!

**மேதினிராயர் :** எங்கே ஐயா?

**முத்துப்பல்லர் :** பறக்கும் பட்டுக் கொடிகளிலெல்லாம் பார்த்திருக்கிறேன் பல பல புலிகளை!

**மேதினிராயர் :** புலிக் கொடிகளைக் கேட்கவில்லை ஐயா, உயிர்ப் புலியைப் பார்த்திருக்கிறீரா?

**முத்துப்பல்லர் :** உயிர்ப் புலியையா? யான் காணும் வரை என் எதிரே எந்தப் புலியாவது காத்திருக்குமா, ஐயா?

**மேதினிராயர் :** இப்போது கோட்டை வாசலில் போய்ப்பாரும்! ஒரு புலி இருக்கிறது!

**முத்துப்பல்லர் :** (பயத்துடன்) என்னது...?

**மேதினிராயர் :** பயப்படாதீர்! கூண்டுக்குள்தான் இருக்கிறதய்யா! மேலும் பேசுகிறதய்யா!

**முத்துப்பல்லர் :** மெய்தானா?

**மேதினிராயர் :** வேங்கி விமலாதித்தரைப் புலிக் கூண்டில் அடைத்துவைத்து வேடிக்கை காட்டுகிறார்களாம்!

**முத்துப்பல்லர் :** அடாடா! மணக்கோலத்துடன் கண்டு வாழ்த்த வேண்டிய மன்னவனைப் புலிக்கூண்டில் பார்த்தா புன்னகை புரிவது?...உம்...போரில் தோற்றவருக்குப் புலிக்கூண்டு! அவ்வாறானால்...காதலில் தோற்ற

உம்மை எந்தக் கூண்டில் அடைப்பது? புலிக்கூண்டு உமக்குப் பொருந்தாதே? யானைக் கூண்டன்றோ வேண்டும்!

**மேதினிராயர்:** ஓய்! உம் வெற்றியைப்பற்றி நீரே முடிவுகட்டிவிட்டீரோ?

**முத்துப்பல்லர்:** (சிரிப்புடன்) காத்திருந்து பாரும்!

[போகிறார்கள்.]

## காட்சி : 27

### கோட்டை வாசல்;

### மாலை நேரம்

[புலிக்கூண்டு ஒன்றில் விமலாதித்தன் வீரப்புலிபோல் நிற்கிறான். புலிக்கூண்டைச் சுற்றிச் சோழ மக்கள் சூழ்ந்து நின்று அவனை வெறித்து நோக்கிச் சிரிக்கிறார்கள்.]

**விமலாதித்தன்:** சோழப் பெருமக்களே, என்னைத் தரிசித்துவிட்டுப் போக வந்தீர்களா? நீங்கள் சிங்கத்தையே பார்த்திருக்க மாட்டீர்கள்! இதோ பாருங்கள் பேசும் சிங்கத்தை!

[மக்கள் சிரிக்கிறார்கள். விமலாதித்தனைப் பரிகசிக்கிறார்கள்.]

**விமலாதித்தன்:** நான் தனியாக நின்று சிரிக்கிறேன்! கூண்டுக்கு வெளியே நின்று மாபெரும் மக்கள் கூட்டம் சிரிக்கிறது! யாருடைய சிரிப்பு மகத்தானது என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்!

**பாலதேவர்:** (அங்குவந்து) சிரியுங்கள்! உங்கள் சோழ சாம்ராஜ்யத்தை எதிர்த்தவனைக் கண்டு நன்றாகச் சிரியுங்கள்! ஹா... ஹா...

**விமலாதித்தன்:** போதும்! தரணியையெல்லாம் ஆண்ட தமிழ்ப்பெருமக்களே, போதும் உங்கள் அறியாமை! வாள்கள் இல்லாவிடினும் வீரத்தோள்கள்

உண்டு என்று பூரிக்கும் தமிழகக் காளைகளே, நீங்கள் வீரத்திற்கு அளிக்கும் வரவேற்பு இந்தப் பரிகாசச் சிரிப்பு தானு? நம்மை நடுவே நின்று பிரிக்கும் அந்நியன் ஒருவனின் நயவஞ்சகத்திற்கு ஆளாகி அரைப் பைத்தியங்களானது போதும்! மாபெரும் தமிழ்ப் பெருமக்கள் திருக்கூட்டமே, என்ருவது உங்கள் நாட்டையும் உங்கள் முன்னேரையும் பற்றிச் சிந்தித்ததுண்டா? உங்களிடம் இன்னும் தமிழுணர்ச்சி மாய்ந்துவிட வில்லையே...?

**கூட்டத்தில் ஒரு கிழவன் :** நாங்களும் மனுசங்க தான். பெத்த தாயை மறந்துடுவோமா?

**விமலாதித்தன் :** சோழ மக்களே, நீங்கள் பிறந்த தமிழ் நாடு பெரும் நாடு. நீங்கள் பேசும் தமிழ்மொழி பழம் பெரும்மொழி. நீங்கள் வாழும் நாகரிகம் பழம் பெரும் நாகரிகம். கற்பரசி கண்ணகி வாழ்ந்ததும், கங்கையில் புனிதமான காவிரி பாய்வதும், கன்னிக்குமரி நின்று நித்தம் தவம் புரிவதும், உங்கள் தமிழ் நாடு. மனிதஜாதியே முதன் முதலில் தோன்றிய ஆதி நிலம் தமிழ் நாடு. மக்களின் மானத்தை மறைக்க முதன் முதலில் பஞ்சாலும் பட்டாலும் ஆடை நெய்து காட்டியது தமிழ்நாடு!

**கூட்டத்தினர்:** ஆமாம், ஆமாம்,

**கூட்டத்தில் ஒரு கிழவன் :** மானத்தை மதிப்பதே தமிழ் நாடுதான்.

**விமலாதித்தன் :** 'நாடா கொன்ருே, காடா கொன்ருே, எங்கு மக்கள் நல்லவர்களாக வாழ்கிருர்களோ, அதுவே நல்ல நாடு' என்று கூறிய ஒளவை பிறந்தது தமிழ்நாடு. 'வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்' என்று கூறிய வள்ளுவன் பிறந்தது தமிழ்நாடு. 'காதலிருவர் கருத்தொருமித்து ஆதரவு பட்டதே இன்பம்' என்று கண்டது தமிழ்நாடு. பெண்ணுக்குச் சமநிகர் உரிமையையும், 'அன்பே சிவம்' என்ற அருஞ்சமயத்தையும், 'நாமார்க்கும் குடியல்லேம் நமனையும் அஞ்சோம்' என்ற அஞ்சாமையையும், 'யாதும் ஊரே யாவரும் உறவினர்' என்ற பரந்த மனப்பான்மையையும், 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்'

என்ற மனிதத் தன்மையையும் உலகிற்குக் காட்டியவர் தமிழர். இத்தகைய நற்றமிழர், தவருன வழியில் செல்லலாமா? பிரிவு மனப்பான்மைகளில் சிக்கிச் சீரழியலாமா? கடல் பிரளயத்தாலும் மதுரையில் மூண்ட தீயாலும் அழிக்கமுடியாத தமிழ்ப்பண்பை இன்று உங்கள் அறியாமையால் அழியவிட்டு விடுவீர்களா?

**மக்கள் கூட்டத்தினர் :** மாட்டோம்...மாட்டோம்...

**கூட்டத்தில் ஒரு வாலிபன் :** தமிழ் மொழிக்கு இழுக்கு என்ருல் தாய் தடுத்தாலும் விடமாட்டோம்!

**விமலாதித்தன் :** சோழப் பெருமக்களே, அந்நியன் ஒருவன் இராஜதந்திரத்திற்கு ஆளாகி, ஏகாதிபத்தியப் பாதையில் செல்ல முயலும் உங்கள் இராஜராஜ சோழச் சக்கிரவர்த்திகளிடம் சொல்லுங்கள்.. தனி மனிதனின் சுதந்திரத்தையும், பிறநாட்டவர் சுதந்திரத்தையும் மதிப்பவன்தான் தன் தேசத்தின் சுதந்திரத்தைக் காப்பாற்ற முடியுமென்று! 'வீரம் என்பது மண்ணுசையன்று, மனிதத்தன்மையை மதிப்பதுதான் வீரம்' என்று சொல்லுங்கள். உங்கள் தமிழ் நாகரிகத்தோடு கலந்து உறவாடி, மனித நாகரிகத்தை வளர்க்க முயலும் வேங்கி நாட்டை விரோதித்துக்கொள்ள வேண்டாமெனச் சொல்லுங்கள். இரட்டப்பாடி சத்தியாசிரயனும் கங்கை மன்னர்களும் உங்கள் தமிழ் நாட்டை விழுங்கச் சமயம் பார்த்திருக்கிருர்கள். இந்தச் சமயம் சோழ நாட்டிற்கும் வேங்கி நாட்டிற்கும் ஒற்றுமையில்லாமல் உங்களுக்கும் எனக்கும் பகைமை இருப்பது தமிழகத்திற்கு நல்லதல்ல என்று எச்சரியுங்கள். ஏகாதிபத்திய வெறியர்களும் சூழ்ச்சிக்காரர்களும் எப்போதும் பிரித்தாளவே முயல்வார்கள் என்பதைத் தமிழ் மக்களே, புரிந்துகொள்ளுங்கள்...

**கூட்டத்தினர் :** வேங்கி நாட்டவர் எங்கள் உறவினர். வேங்கி மன்னர் விமலாதித்தர் வாழ்க!

**பாலதேவர் :** (தனிமொழி) ஆகா, கெட்டது காரியம். பகைமைக்கு மாருக ஒற்றுமையல்லவா உருவாகிறது? சோழத்திற்கும் வேங்கிக்கும் உறவு உண்டாக்கி

இரு நாடுகளையும் பலப்படுத்த முயல்கிறான் விமலாதித்தன். இவன் அழிந்தால்தான் என் மனோரதம் வெற்றிபெறும்...

[பாலதேவர் இரு போர்வீரர்களுக்குச் சமிக்ஞை செய்து மக்களை விரட்டும்படி செய்துவிட்டுப் போகிறார்.]

[இரவின் ஒலிகள். காற் சிலம்புகள் குலுங்கக் குந்தவி மெல்ல வருகிறாள். அவள் பின்னால் நிப்பந் தத்துடன் வீரமாதேவி வருகிறாள்.]

**வீரமாதேவி :** குந்தவி நாச்சியாரே! அதோ பாருங் கள், புலிக்கூண்டுக்குள் உங்கள் விமலாதித்தரை...

**குந்தவி :** வீரமாதேவி, புலிக்கூண்டிற்குள் அடை பட்டிருக்கும் இந்நிலையிலும் அவர் முகத்தில் புன்னகை தவழுகிறதடி! இத்தகைய மகாவீரனையா மகாபாதகன் என்றார் என் தந்தை? என் மனதை என்னவோ செய் கிறதடி...

**வீரமாதேவி :** என்ன குந்தவி நாச்சியாரே இது? தலை குனிந்து நிற்கிறீர்கள்?

**குந்தவி :** வேறொன்றுமில்லை ... குற்றம் செய்த நெஞ்சு குறுகுறுக்கிறதடி.

**வீரமாதேவி:** உம்...அருகில்போய்க் கூப்பிடுங்கள்... உம்...நீங்கள் தலை நிமிர்ந்து பார்க்காவிட்டாலும் அவர் தலை நிமிர்ந்து பார்ப்பார்.

[காற்சிலம்போசைகளுடன் குந்தவி மெல்லப் புலிக் கூண்டருகில் வந்து விமலாதித்தன் முன் நிற்கிறாள்.]

**விமலாதித்தன் :** யாரது?

**குந்தவி :** (துயருடன்) குந்தவியை மறந்துவிட்டீர் களா...?

**விமலாதித்தன் :** (பரிகாசச் சிரிப்புடன்) ஓ! இராஜ கேசரி இராஜவித்யாதர இராஜராஜசோழ தேவரின் அருந்தவப் புதல்வி இளவரசி குந்தவி நாச்சியாரே...

**குந்தவி :** (விம்மலுடன்) போதும், பரிகாசம்! நீங்கள் இப்படிச் சிறைப்பட்டு...

**விமலாதித்தன் :** குந்தவி! காவலன் என்னைச் சிறைப்படுத்தவில்லை. உன் காதல்தான் என்னைச் சிறை செய்தது.

**குந்தவி :** (தேம்பி) ஆசையாக ஆட நடன அரங்கிற்கு வந்தேனே, அன்று ஏன் என்னை அவமதித்தீர்கள்?

**விமலாதித்தன் :** அழையாத இடத்திற்கு உன் ஆடலைக் காணத்தானே ஆவலாய் வந்தேன்? என்னை நீ அலட்சியமும் செய்தாய்; பேசவுமில்லை. மமதையில் பிறப்பது கலையுமல்ல, காதலுமல்ல என்று உணர்த்தினேன்.

**குந்தவி :** உங்களுக்கு என் மீது ஆசை இல்லை, எங்கள் நாட்டின் மீதுதான் ஆசை என்று இராஜதந்திரி சொன்னார்!

**விமலாதித்தன் :** நடுவே நின்று நம்மிருவரையும், நம்மிருவர் நாட்டையும் பிரிக்க' அந்த நாடோடிப் பாலதேவப் பட்டரையன் செய்த சூழ்ச்சி அது; அதை உன் தந்தைகூட நம்பி மதியிழந்தார் குந்தவி...

**குந்தவி :** விமலாதித்தரே, இனி ஒரு சிறு தென்றல் கூட நம்மைப் பிரிப்பதைப் பொறுக்கமாட்டேன்...(விம்மி விம்மி அழுகிறாள்.)

**விமலாதித்தன் :** குந்தவி! ஏன் அழுகிறாய்? உன் நீலோற்பல விழிகளில் கண்ணீரின் பனித்திவலைகள் திரள்வது ஏன்? வைகறையின் உதயத்தை எதிர் நோக்கியா?

**குந்தவி :** உங்கள் தேகத்தில் எவ்வளவு இரத்த காயங்கள்? என்னால்தானே...

**விமலாதித்தன் :** இவை இரத்த காயங்களல்ல, குந்தவி! வீரனுக்கு வாள் என்னும் கன்னிகை உவந்தளித்த குங்கும முத்தங்கள்! அல்ல, அல்ல, உன் வீரத் தமையன் இராஜேந்திரன் என் வீரத்தை மெச்சிப் பகிர்ந்தளித்த பரிசுகள்!

தாழ்த்தி, உதட்டில் குறும்புப் புன்னகையுடன் வணங்குகிறாள். இராஜராஜன் சிரிக்கிறான்.]

**இராஜராஜன் :** *என்ன குழந்தாய்... இராஜமரியாதை சம்பிரதாயங்களை நீ கூட அனுசரிக்க ஆரம்பித்து விட்டாய் ?*

[இராஜராஜன் அருகில் இராஜதந்திரி பாலதேவர் நிற்பது பிடிக்காதது போல வெறுப்பைக் காட்டிக் கொண்டு குந்தவி அவனருகில் வருகிறாள். கொஞ்சு சுதலாய் தந்தையின் அருகில் வந்து, குறும்புச் சிரிப்புடன் பேசுகிறாள்.]

**குந்தவி :** *அப்பா, நீங்கள் எவ்வளவு பெரிய சக்கிரவர்த்திகள்.........கீர்த்தி பராக்கிரம இரவிகுல மாணிக்க, சோழ மார்த்தாண்ட, சிவபாத சேகர, நித்த விநோத......*

[இராஜராஜன் புன்னகையுடன் தன் உதடுகளில் விரலை வைத்து, 'போதும்' என்று அவள் வாயை மூடச் சொல்கிறான்.]

**இராஜராஜன் :** *குந்தவி நாச்சியாரே.........ஏதாவது என்னிடம் காரியம் ஆகவேண்டுமென்றால் என்னை முகஸ்துதிசெய்ய ஆரம்பித்து விடுவீர்கள்..மற்றவர்களின் முகஸ்துதியை நம்புவேன்; பெற்ற மகளின் முகஸ்துதியை நம்புவேனா......? குந்தவி, எதற்கு இந்தப் பீடிகை...!*

[இராஜராஜன் சமிக்ஞை காட்டத் திருவாய்க் கேள்வியைத் தவிர மற்ற உடன் கூட்டத்து அதிகாரிகள் அனைவரும் வெளியேறுகிறார்கள். பாலதேவரும் போகப் புறப்பட அவரைத் தன்னோடு இருக்கும்படி இராஜராஜன் சமிக்ஞை காட்டுகிறான்.]

**குந்தவி :** *சக்கிரவர்த்திகளே, தங்களிடம் ஒன்று கேட்கப் போகிறேன்.*

**இராஜராஜன் :** *நீ என்ன கேட்க வருவாய் என்பது எனக்குத் தெரியும் !*

**குந்தவி :** *இல்லை, அப்பா ! நிச்சயம் உங்கள் இராஜதந்திரியால் கூட அதை யூகிக்க முடியாது ! நான் கேட்டதும் நீங்கள் திடுக்கிட்டுப் போவீர்கள் !*

**இராஜராஜன் :** நிச்சயம் மாட்டேன்! என்ன அது?

**குந்தவி :** அப்பா...அப்பா...வந்து...அம்மா எப்போ ாவது...அதாவது, உங்களைத்தான் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று என் அம்மா ஆசைப் பட்டிருப் பார்களா, இல்லையா?

**இராஜராஜன் :** (திடுக்கிட்டு) இதை உன் அம்மா விடமே கேட்பதுதானே!

**குந்தவி :** கேட்டேன்!

**இராஜராஜன் :** (ஆவலுடன்) அவள் என்ன சொன் னாள்...?

**குந்தவி :** (வெட்கத்துடன்) உங்களைத்தான் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென ஆசைப் பட்டார்களாம் ...ஆனால்...

**இராஜராஜன் :** (பரபரப்புடன்) ஆனால்...ஆனால் என்ன?

**குந்தவி :** ஆனால் உங்களைத் திருமணம் செய்து கொள்ளக் கூடாது என்று அம்மாவுடைய தந்தை கட்டா யப்படுத்தியிருந்தால், அம்மாவின் மனசு கஷ்டப்பட்டிருக் குமா, இல்லையா?

**இராஜராஜன் :** ஆமாம், அவளுடைய மனது மிக மிகக் கஷ்டப்பட்டிருக்கும்! ஏனென்றால் அவள் தந்தி யானதற்குத்தான் ஆசைப்பட்டாள்! நாடிழந்து சிறையில் வாடும் ஒருவனுக்காக ஆசைப்படவில்லை!

**குந்தவி :** உங்களைச் சிங்கள வேந்தரோ, வேங்கி நாட்டு விமலாதித்தரோ போரில் வென்று சிறையில் வைத்து வாட்டுவதாக...

**இராஜராஜன் :** என்னது, என்னையா...?

**குந்தவி :** அப்படி வைத்துக்கொள்ளுங்களேன். உடனே அம்மா, நாம் ராஜ்ய பதவியைத்தானே காதலித் தோம், ராஜ்யம் இழந்து சிறையில் வாடுபவருக்காக இனி யும் ஆசைப் படலாமா என்று தன் மனதை மாற்றிக் கொண்டிருப்பாளா—?

தாழ்த்தி, உதட்டில் குறும்புப் புன்னகையுடன் வணங்குகிருள். இராஜராஜன் சிரிக்கிருன்.]

**இராஜராஜன் :** *என்ன குழந்தாய்...இராஜமரியாதை சம்பிரதாயங்களை நீ கூட அனுசரிக்க ஆரம்பித்து விட்டாய் ?*

[இராஜராஜன் அருகில் இராஜதந்திரி பாலதேவர் நிற்பது பிடிக்காதது போல வெறுப்பைக் காட்டிக் கொண்டு குந்தவி அவனருகில் வருகிருள். கொஞ்சுதலாய் தந்தையின் அருகில் வந்து, குறும்புச் சிரிப்புடன் பேசுகிருள்.]

**குந்தவி :** *அப்பா, நீங்கள் எவ்வளவு பெரிய சக்கிரவர்த்திகள்.........கீர்த்தி பராக்கிரம இரவிகுல மாணிக்க, சோழ மார்த்தாண்ட, சிவபாத சேகர, நித்த விநோத......*

[இராஜராஜன் புன்னகையுடன் தன் உதடுகளில் விரலை வைத்து, 'போதும்' என்று அவள் வாயை மூடச் சொல்கிருன்.]

**இராஜராஜன் :** *குந்தவி நாச்சியாரே.........ஏதாவது என்னிடம் காரியம் ஆகவேண்டுமென்ருல் என்னை முகஸ்துதிசெய்ய ஆரம்பித்து விடுவீர்கள்..மற்றவர்களின் முகஸ்துதியை நம்புவேன்; பெற்ற மகளின் முகஸ்துதியை நம்புவேனு......? குந்தவி, எதற்கு இந்தப் பீடிகை...!*

[இராஜராஜன் சமிக்ஞை காட்டத் திருவாய்க் கேள்வியைத் தவிர மற்ற உடன் கூட்டத்து அதிகாரிகள் அனைவரும் வெளியேறுகிருர்கள். பாலதேவரும் போகப் புறப்பட அவரைத் தன்னோடு இருக்கும்படி இராஜராஜன் சமிக்ஞை காட்டுகிருன்.]

**குந்தவி :** *சக்கிரவர்த்திகளே, தங்களிடம் ஒன்று கேட்கப் போகிறேன்.*

**இராஜராஜன் :** *நீ என்ன கேட்க வருவாய் என்பது எனக்குத் தெரியும் !*

**குந்தவி :** *இல்லை, அப்பா ! நிச்சயம் உங்கள் இராஜதந்திரியால் கூட அதை யூகிக்க முடியாது ! நான் கேட்டதும் நீங்கள் திடுக்கிட்டுப் போவீர்கள் !*

**இராஜராஜன் :** நிச்சயம் மாட்டேன்! என்ன அது?

**குந்தவி :** அப்பா...அப்பா...வந்து...அம்மா எப்போதாவது...அதாவது, உங்களைத்தான் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று என் அம்மா ஆசைப்பட்டிருப்பார்களா, இல்லையா?

**இராஜராஜன் :** (திடுக்கிட்டு) இதை உன் அம்மாவிடமே கேட்பதுதானே!

**குந்தவி :** கேட்டேன்!

**இராஜராஜன் :** (ஆவலுடன்) அவள் என்ன சொன்னாள்...?

**குந்தவி :** (வெட்கத்துடன்) உங்களைத்தான் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென ஆசைப்பட்டார்களாம் ...ஆனால்...

**இராஜராஜன் :** (பரபரப்புடன்) ஆனால்...ஆனால் என்ன?

**குந்தவி :** ஆனால் உங்களைத் திருமணம் செய்து கொள்ளக் கூடாது என்று அம்மாவுடைய தந்தை கட்டாயப்படுத்தியிருந்தால், அம்மாவின் மனசு கஷ்டப்பட்டிருக்குமா, இல்லையா?

**இராஜராஜன் :** ஆமாம், அவளுடைய மனது மிக மிகக் கஷ்டப்பட்டிருக்கும்! ஏனென்றால் அவள் தகுதியானதற்குத்தான் ஆசைப்பட்டாள்! நாடிழந்து சிறையில் வாடும் ஒருவனுக்காக ஆசைப்படவில்லை!

**குந்தவி :** உங்களைச் சிங்கள வேந்தரோ, வேங்கி நாட்டு விமலாதித்தரோ போரில் வென்று சிறையில் வைத்து வாட்டுவதாக...

**இராஜராஜன் :** என்னது, என்னையா...?

**குந்தவி :** அப்படி வைத்துக்கொள்ளுங்களேன். உடனே அம்மா, நாம் ராஜ்ய பதவியைத்தானே காதலித்தோம், ராஜ்யம் இழந்து சிறையில் வாடுபவருக்காக இனியும் ஆசைப் படலாமா என்று தன் மனதை மாற்றிக் கொண்டிருப்பாளா—?

**இராஜராஜன்** : (ஒன்றும் பதில் சொல்லாமல் சிரிக்கிறான்.)

**குந்தவி** : பார்த்தீர்களா. நியாயத்தை எடுத்துச் சொன்னதும் ஒப்புக்கொண்டு விட்டீர்கள்...

[குந்தவி துறு துறுவென்று ஓடி வந்து அங்கு நின்ற திருவாய்க் கேள்வி எனும் அதிகாரி முன் நின்று கம்பீரமாகக் கட்டளையிட முயல்கிறாள். அப்போது இராஜராஜனும் அவள் பின்புறம் வந்து நின்று கவனிக்கிறான்.]

**குந்தவி** : திருவாய்க் கேள்வி! உடனே இந்தக் கட்டளையைத் திருமந்திர ஓலை நாயகத்திற்கு அனுப்பி நிறைவேற்றச் செய்யும்...

**திருவாய்க் கேள்வி** : சக்கிரவர்த்திகளின் கட்டளை என்றா? இளவரசியார் குந்தவி நாச்சியாரின் கட்டளை என்றா?

**குந்தவி** : சக்கிரவர்த்திகளின் கட்டளை என்றுதான்! தென்ன பராக்கிரம நிகரிலி சோழ பாண்டிய குலாசனி இராஜராஜ சோழ சக்கிரவர்த்திகளின் கட்டளை...உடனே சிறையிலிருக்கும் விமலாதித்தரை...

**இராஜராஜன்** : (குறுக்கிட்டு)...எந்த விதக் காரணத்தைக் கொண்டும் விட்டு விட மாட்டோம். விமலாதித்தன் இருக்கும் சிறைக்கு இரட்டைப் பூட்டுப் போடுக என்று...

[குந்தவி திடுக்கிடுகிறாள். இராஜராஜன் சிரிக்கிறான்.]

**குந்தவி** : (கோபத்துடன்) அதோடு இந்தச் செய்தியையும் அனுப்பும்! சக்கிரவர்த்திகளின் ஆணையாட்கள், விமலாதித்தர் சிறைக்கு இரட்டைப் பூட்டு போட்டால், இளவரசியார் குந்தவி நாச்சியாரின் வேளைக்காரப் படையினர் சிறையையே உடைத்து விடுவார்கள் என்று!

**இராஜராஜன்** : குந்தவி! நீ பெரியவளாகியும் இன்னும் குழந்தையாகவே இருக்கிறாய்!

**குந்தவி :** எல்லோருமே குழந்தைகளாய் இருந்து விட்டால் இந்நாட்டில், ஏற்றத் தாழ்வு, ஏமாற்றம், வஞ்சனை, இராஜதந்திரம் எதற்குமே இடம் இராது!

**இராஜராஜன் :** குந்தவி, நீ மிக மிக அதிகமாகப் பேசுகிறாய். இராஜராஜன் முன் எதிர் நின்று பேச எவருமே, ஏன் உன் வீரத் தமையனே வாய்திறக்கக் கூடத் தயங்குவான். நீயோ வாய்க்கு வந்ததையெல்லாம் பேசிவிடுகிறாய்!

**குந்தவி :** உங்கள் மகள் ஊமையல்ல. உரிமையைப் பற்றிப் பேச அவளுக்கும் வாய் உண்டு!

**இராஜராஜன் :** எது உரிமை?... குந்தவி...தமிழ் நாட்டுக்கு உரிமையான வட வேங்கடமும் திருக்காளத்தியும் வடுகர்களிடம் கைநழுவிப் போய்விடக் கூடாதென்றால், அந்த எல்லைக்கு அப்பாலுள்ள வேங்கிநாட்டையும் நம் சோழப் பேரரசோடு இணைத்துவிட வேண்டும்...பகைவனை விமலாதித்தனைச் சிறை விடுவது நம் தமிழ் நாட்டின் வடஎல்லைகளைக் கைவிடுவதற்குச் சமானம்!

**குந்தவி :** அப்பா! உங்கள் அரசியலின் எல்லைகளை விட, எங்கள் காதலின் எல்லை ஒன்றும் குறுகியதல்ல. அது வடவேங்கடத்தையும் தாண்டி வீரசுவர்க்கம் வரை பரந்துகிடப்பது!

[இராஜேந்திரன் அங்கு வந்து சக்கிரவர்த்திகளை வணங்கி நிற்கிறான் தந்தை மகள் உரையாடலைக் கவனிக்கிறான்.]

**இராஜராஜன் :** குந்தவி! நீ விமலாதித்தனின் சிறை விடுதலையை விரும்பினால், அவன் நமக்குத் திறை செலுத்தும் சிற்றரசனாகி, அவனுடைய வேங்கி நாட்டில் நம்முடைய நிலப்படையை நிறுத்தச் சம்மதிப்பானா என்று கேள்.

**குந்தவி :** (கம்பிரமாக. இராஜராஜன் முகத்தை ஒரு கணம் ஏறிட்டுப் பார்த்துவிட்டு) கீர்த்தி பராக்கிரம இராஜராஜ சோழ சக்கிரவர்த்திகளின் மகள் ஓர் அடி

மையை விரும்பமாட்டாள்... (இதைச் சொல்லிவிட்டு இராஜேந்திரனை பக்கம் திரும்பி) அண்ணு! நான் இவ்வாறு சொல்வது தவரு, அண்ணு?

**இராஜேந்திரன் :** (அவள் அருகில் வந்து) ஆமாம், குந்தவி! மாபெரும் தவறு!... இராஜராஜ சோழ சக்ரகவர்த்திகளின் மகள் ஓர் அடிமையை விரும்பமாட்டாள் என்று சொல்லியிருக்கக் கூடாது! மகாவீரன் இராஜேந்திரனின் தங்கை ஓர் அடிமையை மணக்கமாட்டாள் என்று சொல்லியிருக்க வேண்டும்!

**இராஜராஜன் :** (இராஜேந்திரனை நோக்கிக் கோபமாக) இராஜேந்திரா! குந்தவி பெண் குழந்தை. நம் நாட்டை விட்டு என்ருே ஒரு நாள் தன் கணவன் வீட்டிற்குப் போகக்கூடியவள். ஆனுல் நீ இளவரசன். இந் நாட்டின் வருங்கால ஆட்சிக்குப் பொறுப்புடையவன். இனி நீ இவ்வாறு சக்கிரவர்த்திகள் முன் பேசுவதை நான் அனுமதிக்க மாட்டேன்.

[இராஜேந்திரன் தலைகுனிந்தவாறு வெளியேறுகிருன். திருவாய்க் கேள்வியும் வணங்கி வெளியேறுகிருன். குந்தவி, பாலதேவர்—இருவர் மட்டும் இராஜராஜனோடு தனித்திருக்கிருர்கள்.]

**பாலதேவர் :** (கள்ளப் புன்னகையுடன்) நம் இளவரசியார், கீழைச்சளுக்கிய விமலாதித்தன் மீது மனம் வைப்பதை விட, மேலைச்சளுக்கியரான இரட்டபாடி மன்னர் மகன் மீது மனம் வைப்பாராஞல்...

[குந்தவி சிறிதும் கலங்காமல் கலகலவென்று சிரிக்கிருள்.]

**இராஜராஜன் :** (திடுக்கிட்டு) என்ன...? விமலாதித்தனோடு மண சம்பந்தம் செய்துகொள்ளவே தயங்குகிருேம்!...தமிழர் குலத்திற்குப் பரமவைரி என்று பகிரங்கமாகவே பட்டயம் தீட்டிக்கொள்ளும் மேலைச்சளுக்கிய சத்தியாசிரயனோடு நாம் மண சம்பந்தம் செய்துகொள்வதா?...விமலாதித்தனின் கீழைச்சளுக்கிய வம்சமாவது ஏறக்குறைய நம் தமிழ் நாகரிகத்தைப் பின்பற்றுகிறது. 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்ற நம் சைவத்

தைப்போல 'சகல ஜீவராசிகளும் சமம்' என்று கூறும் சமணமதத்தின் சமதர்மத்தை விமலாதித்தன் பின்பற்று கிறான். நம் சோழ அரசியலில் உள்ள ஊர்க் குடியாட்சி முறைபோல அவனது வேங்கி நாட்டிலும் ஒருவித மகா சபை ஆட்சிமுறை இருக்கிறது...ஆனால் மேலைச்சளுக்கிய சத்தியாசிரய மன்னர்களோ சர்வாதிகாரியின் மூலம் நாட்டை ஆளுபவர்கள். மக்களிடையே ஏற்றத்தாழ்வுகளை உண்டாக்கும்கடுமையான ஜாதியாசாரங்களைப் பின்பற்று பவர்கள்...

*பாலதேவர் :* (கள்ளப் புன்னகையுடனும் பணிவுட னும்) சாம்ராஜ்யத்தின் அளவு பெருகப் பெருக, பலவித மான குடிகளின் பலவிதமான குறைகள் பெருகப் பெருக, குடியாட்சி முறைக்குப் பதில் சர்வ சக்திவாய்ந்த ஒரு சர்வாதிகாரியே தேவைப்படலாம்! சர்வாதிகார ஆட்சி நிலைத்திருக்க வேண்டுமானால், மக்களைப் பிரித்தாளக் கூடிய ஜாதியாசாரங்களும் தேவைப்படும்...ஆனால் மேலைச் சளுக்கியர்களை நாம் பின்பற்ற வேண்டும் என்று நான் சொல்லவில்லை! அவர்களின் யுவராஜனுக்கு நம் குந்தவியை மணம் புரிவிப்பதால் நம் சோழ சாம்ராஜ் யத்திற்குப் பல நன்மைகள் கிடைக்கலாம் என்றுதான் சொன்னேன்!... உதாரணமாக, இரட்டபாடியிலுள்ள மேலைச்சளுக்கிய மன்னர் உங்கள் சோழ சாம்ராஜ் யத்தை விழுங்கிவிடுவார்களோ என்ற பயமும்தற்காப்புத் தேவையும் நீங்கி, அவர்களின் உதவியோடு கங்கையும் கடாரமும் தாண்டி உங்கள் புலிக்கொடி திக்விஜயம் புறப்பட முடியுமல்லவா?

[குந்தவி சிரிப்பை அடக்கமுடியாமல் பொங்கிப் பொங்கிச் சிரிக்கிறாள். பாலதேவர் முகம் சுளிக்கிறார்.]

*இராஜராஜன் :* குந்தவி! ஏன் சிரிக்கிறாய்?

*குந்தவி :* பின்னே என்ன செய்வது? (அதிகமாகச் சிரித்தவண்ணம் பாலதேவரை ஏளனப் பார்வையுடன் சுட்டிக்காட்டி) அப்பா...பெண் விதவிதமான புடைவை களை மாற்றிக் கட்டுவதுபோல் மனதிலும் விதவிதமான புருஷர்களை வரிப்பாள் என்று உங்கள் இராஜதந்திரி

நினைக்கிறாரப்பா...பாவம், பெண்ணைப் பேதை என்றே மாயை என்றே நினைப்பவருக்குப் பெண்ணின் இதயத்தைப் பற்றி என்ன தெரியும் ?

**இராஜராஜன் :** (முகத்தைக் கடுமையாக்கிக் கொண்டு) குந்தவி! அரசியல் நெருக்கடிக்குத் தேவைப் பட்டால், உன் திருமணத்தையும் ஓர் அற்ப விஷயமாய் மதிக்கத் தயங்கமாட்டான் இராஜராஜன் !

**பாலதேவர் :** (கள்ளப் புன்னகையுடன்) அரசியல் என்பது அம்ச தூளிகா மஞ்சமல்ல, இளவரசியாரே !

**குந்தவி :** (வெடுக்கென்று அவர் புறம் திரும்பி ஏளனமாக) அரசியல் என்பது அறிவாளிகளின் சூதாட்டப் பலகையுமல்ல, பாலதேவரே !

[பிறகு கலகலவெனக் குந்தவி சிரிக்கிறாள்.]

[குந்தவி சிரிப்பை அடக்க முடியாமல், சாகசத்துடன் தந்தையின் அருகில் சென்று, அவரது மார்பில் உள்ள பதக்கத்தைப் பிடித்து விளையாடிக்கொண்டே சிரிக்கிறாள்.]

**குந்தவி :** அப்பா...உங்கள் மகள் குந்தவி கோயிலில் நடனமாடுவாளே தவிர, உங்கள் இராஜதந்திரி சொல்கிறபடியெல்லாம் ஆடமாட்டாள்!

[இராஜராஜன் சிரிக்கிறான்.]

**குந்தவி :** அப்பா, தயவு செய்து நீங்கள் சிரிக்காதீர்கள். உங்கள் கோபத்தை விட உங்கள் சிரிப்பைத்தான் என்னால் நம்ப முடியவில்லை !

**இராஜராஜன் :** குந்தவி! உன் சிரிப்பை விட உன் மௌனத்தைத்தான் எந்த இராஜதந்திரியாலும் நிதானிக்க முடியாது !

[குந்தவி வெடுக்கென மௌனமாகப் போகிறாள். இராஜராஜன் சிரிப்புடன் வேறொருபுறம் போகிறான். பாலதேவர் சிந்தனையில் ஆழ்ந்தவராகி அவளைப் பின்பற்றிப் போகிறார்.]

# காட்சி: 29

## அரண்மனையில் இளவரசன் மாளிகை;
## அந்திமயங்கும் நேரம்

[வீரமாதேவியும் இராஜேந்திரனும் உரையாடிய வண்ணம் வருகிறார்கள்.]

**இராஜேந்திரன் :** *வீரமாதேவி! நம் சக்கரவர்த்திகளை விடச் சக்தி வாய்ந்தவர் இந்த அகில புவியில் யாரும் இல்லை என்று நினைத்திருந்தேன். ஆனால் எவரும் நெருங்கவே அஞ்சும் அவரையுங்கூட நம் குந்தவி எதிர்த்துப் பேசுகிறாள்!*

**வீரமாதேவி :** *சக்கிரவர்த்திகளின் தமக்கையார் பெரிய குந்தவ்வையார் கூட சின்ன வயதில் அப்படித்தான் இருந்தார்களாம். தமக்கையாரின் பெயரைத் தம் தவச் செல்விக்கு வைக்கிறபோதே சக்கிரவர்த்திகள் யோசித்திருக்கவேண்டும். இல்லையா, இளவரசே...?*

**இராஜேந்திரன் :** *இளவரசே! இளவரசே!! இதைத் தவிர என்னை வேறுவிதமாக உனக்குக் கூப்பிடத் தெரியாதா ?*

**வீரமாதேவி :** *பின்னே எப்படிக் கூப்பிட வேண்டுமாம் ?*

**இராஜேந்திரன் :** *என்னைக் கேட்டால்...... உன் இதயத்தைக் கேள்! அது சொல்லும்!*

**வீரமாதேவி :** *ஒன்றும் சொல்லவில்லையே!...*

**இராஜேந்திரன் :** *உனக்கா தெரியாது?......*

**வீரமாதேவி :** *போதும், விளையாட்டு!... அருமை நண்பர் சிறையில் அவதிப்படுகிறார். அன்புத் தங்கை அவரை எண்ணி எண்ணி ஏங்கித் தவிக்கிறாள். கொஞ்சமாவது கவலையிருக்கிறதா?...... விளையாடும் நேரத்தைப் பாருங்கள்! முதலில் சிறையில் கஷ்டப்படும் விமலாதித்தருக்கு...*

**இராஜேந்திரன் :** ஏன், விமலாதித்தனுக்கு என்ன கஷ்டம்? ஒரு தொந்தரவுமில்லாமல் ஆனந்தமாகப் பொழுது போக்கிக் கொண்டு இருக்கிறான். தினமும் குந்தவியின் நேர் பார்வையில் அவனுக்கு அறுசுவை உணவு அற்புதமாய்க் கிடைக்கிறது. போரில்பெற்ற காயங்களெல்லாம் ஆறியும் கூட அவள் தன் கையாலேயே இன்னும் அவற்றிற்கு மருந்து போடுகிறாள்......என்ன குறைவாம்?...... இப்படியொரு பொன்னான சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்து நான் சிறையிருக்கவும், என் ஆருயிர்க் காதலி வீரமாதேவி தனது மலர்க் கைகளால், மதுர விரல்களால் எனக்கு......

**வீரமாதேவி :** ஹூக்கும்...பேச்சைப் பாருங்கள்பேச்சை...... இளவரசே!

**இராஜேந்திரன் :** மறுபடியும் பார்!... இளவரசே வேண்டாமே!......

**வீரமாதேவி :** பின் எப்படிக் கூப்பிடுவது? நீங்கள் தான் சொல்லுங்களேன்!

**இராஜேந்திரன் :** ஒருமுறை சிறையில் விமலாதித்தனை நம் குந்தவி எப்படிக் கூப்பிட்டாள், தெரியுமா? கண்ணை மூடிக்கொண்டு, ஆசைபொங்க 'விமலாதித்தரே' என்று கூப்பிட்டாள்...ஆகா......

**வீரமாதேவி :** (குறும்புச் சிரிப்புடன் கண்ணை மூடிக் கொண்டு, அவன் சொன்ன குரல் போலவே கூப்பிடுகிறாள்)... ஆ, ராஜேந்திரரே...!

**இராஜேந்திரன் :** வீரமாதேவி! இப்போதுதான் உணர்ச்சியின் முனையில் நீ மிக அழகாய் இருக்கிறாய்!

[சிரிக்கிறான்.]

**வீரமாதேவி :** (யோசனையுடன்) இளவரசியார் அடிக்கடி விமலாதித்தரின் சிறைக்குச் செல்கிறாரா?

**இராஜேந்திரன் :** தனக்கும் தண்டனை விதித்து விமாதித்தனோடு சிறைக்குள் தள்ளிவிட்டால் கூடத் தேவலை என்று நினைப்பாள்!

**வீரமாதேவி :** *இளவரசர் என்ற முறையில் நீங்கள் அவளைத் தடுக்க வேண்டாமா ?*

**இராஜேந்திரன் :** *அவளை யார் தடுக்க முடியும் ? நான் தடுக்கச் சென்றால் 'நீ யார் ?' என்று கேட்பாள். 'இளவரசன் !' என்றால், தான் 'இளவரசி !' என்பாள். அவளுடைய காதலுக்குக் குறுக்கே நின்றால், நம்முடைய காதலுக்குக் குறுக்கே நிற்பேன் என்பாள். அவளுடைய குணம் உனக்குத் தெரியாது, வீரமாதேவி...*

**வீரமாதேவி :** *அவர்களுடைய காதலுக்கு நீங்களே அனுசரணை ! ஏன், இல்லையா...?*

**இராஜேந்திரன் :** *ஆமாம்! என் வாக்குறுதிக்காகத் தானே விமலாதித்தன் என் கையில் சிறைப்பட்டான் ! அதற்குப் பரிசு இந்த அவனிமுழுதும் தேடிப் பார்த்தேன். குந்தவியைத் தவிர வேறு சிறந்த பரிசு இந்த அகில புவிக்கு அப்பாலும் இல்லை !*

[போகிறார்கள்.]

# காட்சி : 30

## குந்தவ்வையாரின் வேளம் ;

### சந்தியா காலம்

[ஈட்டி ஏந்திய யவனப்பெண் ஒருத்தி கற்சிலைபோல் அசைவற்று ஒருபுறம் நிற்கிறாள். குந்தவ்வையார் கையில் உருத்திராக்ஷ மாலையை உருட்டியவண்ணம், தம் முன் பொற்பீடத்தில் கிடக்கும் ஓலைச் சுவடிகளைப் பார்வையிட்டவண்ணம் இருக்கிறார். குந்தவி, " அத்தை !...அத்தை !" என்று கூப்பிட்டுக்கொண்டு, பரபரப்புடன் ஓடி வருகிறாள். அத்தையைக் குறுகுறுவென்று பார்க்கிறாள். அத்தையின் கழுத்தைக் கட்டிக்கொண்டு கொஞ்சுகிறாள்.]

**குந்தவ்வையார் :** *(தாளத்தோடு தேவாரப் பண் ஒன்றைப் பாடுகிறார்.)*

சிறையாரும் மடக்கிளியே! இங்கே வா! தேனொடுபால்
முறையாலே உணத்தருவேன்! மொய்பவளத் தொடுதரளம்,
துறையாரும் கடல்தோணி புரத்தீசன் துளங்கும் இளம்
பிறையாளன் திருநாமம் எனக்கொருகால் பேசாயே!

**குந்தவி :** *அத்தை...அத்தை...*

**குந்தவ்வையார் :** *(புன்னகையுடன்) குந்தவி! ஆசையாக உனக்கு என் பெயரை வைத்ததும் போதும், ஓயாமல் நீ என்னை வம்புக்கிழுப்பதும் போதும்!*

**குந்தவி :** *அத்தை, நீங்கள இல்லாமல் இந்த இராச்சியத்தில் எதுதான் ஒழுங்காக நடைபெறும்?... அத்தை, ஒரு சந்தேகம்?*

**குந்தவ்வையார் :** *என்ன, குந்தவி?*

**குந்தவி :** *அத்தை, ஒரு பெண்ணுக்கு...*

**குந்தவ்வையார் :** *என்ன வந்துவிட்டது?*

**குந்தவி :** *சங்கடம் வந்துவிட்டது, அத்தை!*

**குந்தவ்வையார் :** *சக்கிரவர்த்திகளோடு நீ ஊர் சுற்றுப் போயிருந்தபோது, எவளாவது ஒருத்தியின் வழக்கு உங்கள் முன் ஊர்ச்சபையில் விசாரணைக்கு வந்ததா?*

**குந்தவி :** *ஒரு பெண்ணுக்குத் தன் தந்தை சொல்வதைக் கேட்பதா, தன் கணவன் சொல்வதைக் கேட்பதா என்ற தர்மசங்கடமான நிலைமை வந்துவிட்டால் என்ன செய்வது, அத்தை?*

**குந்தவ்வையார் :** *இதிலென்ன சந்தேகம் வந்துவிட்டது? பெற்றுத் திருமணம் செய்யும் வரை தானே தந்தைக்குத் தன் பெண் மீது அதிகாரம்? அதற்கு மேல் அவளுக்குக் கணவன்தான் சகலமும்...*

**குந்தவி :** *கணவன்தான் சகலமும்...சரியத்தை...*

**குந்தவ்வையார் :** *கொஞ்சம் இரு...கோயிலிலிருந்து அக்காரவடிசிலும் பருப்பமுதும் நெய்யமுதும் வரும்...*

**குந்தவி :** அத்தை! நம் கோயில் நம் அரண்மனை என்றால் எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. அத்தை...வடநாட்டில் அரண்மனைகள் என்றால் நிறைய சுரங்கங்கள் இருக்குமாம். அரசகுலப் பெண்கள் அந்தப் புரத்திலிருந்தவாறே சுரங்கவழியாக ஆலயங் களுக்குப் போய் வர முடியுமாம்...

**குந்தவ்வையார் :** நம் நாட்டிலுந்தான் இருந்தன! நம் சக்கிரவர்த்திகள் பெண்களுக்குச் சமவுரிமை கொடுத்திருப்பதால் அந்தச் சுரங்க வழிகளை மூடிவிட்டார்! ஆனால் அரசியல் காரணமாக சிறைப்பட்டவர்களை நேரே சிறையிலிருந்து கோயில்களுக்கு அழைத்துப் போய்வரச் சுரங்க வழிகள் அமைத்திருக்கிறார்.

[குந்தவ்வையாரின் அந்த மொழிகளைக் குந்தவி கருத்தோடு கவனிக்கிறாள்.]

**குந்தவி :** அப்படியா ? சரியத்தை !

[குந்தவ்வையார் உள்ளே போகிறார்.]

[ஒரு மண் வெட்டியைத் தோளில் சுமந்தவண்ணம் குடியானவரான முதியவர் ஒருவர் பின் தொடர, அமைச்சர் மதுராந்தக மூவேந்த வேளார் வருகிறார். இளவரசி குந்தவியை வணங்குகிறார்.]

**மதுராந்தகர் :** உடையார் ஸ்ரீ ராஜராஜ தேவர் திருமகளார் குந்தவி நாச்சியாரை வாழ்த்துகிறேன்!

**குந்தவி :** குந்தவி நாச்சியாரின் விஷயத்தைச் சுலபமாய் முடித்துவிட மதியமைச்சரை அனுப்பியது போதாதென்று, சக்கிரவர்த்திகள் கூடவே ஒரு மண் வெட்டியையும் அனுப்பியிருக்கிறாரா ?

**மதுராந்தகர் :** நித்தவினோத வளநாட்டு ஆவூர் கூற்றத்தில் நம் குந்தவி நாச்சியாருக்கு மாபெரும் வெளி நிலம் ஒன்று உண்டு! இந்தக் குடியானவர் அந் நிலத்தில் சாவகத்திலிருந்து புதிதாக வந்த பயிரொன்றை விளைவிக்க விரும்புகிறார். அதோடு அந் நிலத்து விளைச்சலிலிருந்து கிடைக்கும் வருவாயின் பெரும் பகுதியைப் பௌத்த சமயிகளின் மருத்துவப் பணிக்கும் கல்வித்

தொண்டுக்கும் கொடுக்க விரும்புகிறார். அந் நிலம் தங்களுக்குரிய நிலமாகையாலே அதற்குரிய குத்தகையைத் தங்களிடமே நிர்ணயித்துக் கொள்ளும்படி சக்ரவர்த்திகள் அனுப்பிவிட்டார்.

**குந்தவி :** ஓ! பெண்களுக்குச் சொத்துரிமை உண்டு என்பது வாயளவில் இல்லாமல் செயலளவுக்கும் வருகிறதா?...உம்...எனக்கு அங்கே எவ்வளவு வேலி நிலம் இருக்கிறது?

**மதுராந்தகர் :** (ஓர் ஓலையைப் படிக்கிறார்) சேனாபதி குரவன் உலகளந்தான் இராசராச மாராயன் அளந்தபடி வேலி நூற்றுக் கலமாக வந்த நிலமாவது இறையிலி நீங்கு நிலம் முக்காலே இரண்டுமாக்காணி அரைக்காணி கீழ் அரையே மூன்றுமாவின்...

**குந்தவி :** (அலுப்புடன் காதுகளை இரு கைகளாலும் மூடிக்கொண்டு) அங்குள்ள என்னுடைய மொத்த நிலம் எவ்வளவு பொருமதி என்பதை மட்டும் சொன்னால் போதும்.

**மதுராந்தகர் :** இராஜராஜக் காசு துளைப் பொன்னாகவே இருபத்தாயிரம் பொருமதியாகும்!

**குந்தவி :** (கிழவனின் மண்வெட்டி மீதே கண் வைத்தவளாய்) என்னுடைய அந்த நிலத்தை இந்தக் கிழவனுக்கே விற்றுச் சிலாசாசனம் செய்து கொடுத்து விடுகிறேன்!

**மதுராந்தகர் :** அவ்வளவு பொன் கொடுத்து நிலம் வாங்க இந்தக் குடியானவரால் முடியுமா?

**குந்தவி :** எனக்குப் பொன் வேண்டாம். அவருடைய மண் வெட்டியைக் கொடுத்தாலே போதும். (கிழவரின் மண் வெட்டியை வாங்கித் தன்னருகில் வைத்துக்கொண்டு) முறைப்படி இந்த நில விற்பனையை ஆவணக்களரியில் காட்டிப் பதிவு செய்து காப்பிட்டுச் சிலாலேகை செய்து கொடுத்துவிடுவோம்!

[வியப்புடன் மதுராந்தகரும் கிழவரும் வெளியேறுகிறார்கள்.]

[இராஜராஜன் வருகிறான். அவனைப் பின் தொடர்ந்து பாலதேவரும், கவிராயர்களும் வருகிறார்கள். அவர்கள் கோயிலிலிருந்து வருகிறார்கள் என்பதற்கு அறிகுறியாக, பாலதேவர் கையில் ஒரு பிரசாதத் தட்டும் கவிராயர்கள் கைகளில் தாளங்களும் இருக்கின்றன.]

**இராஜராஜன் :** *நம் பிராட்டியார் திருபுவனதேவி இங்கிருக்கிறாளா ?*

**குந்தவி :** *தெரியாது !*

**இராஜராஜன் :** *உன் அத்தையார் எங்கே ?*

**குந்தவி :** *தெரியாது !*

**இராஜராஜன் :** *உனக்கு என்னதான் தெரியும் ?*

**குந்தவி :** *எனககு ஒன்றுமே தெரியாது !*

**இராஜராஜன் :** *தேவாரமாவது பாடத்தெரியுமா ?*

[தாளத்தை எடுத்து வந்து குந்தவி மெல்ல இராஜ தந்திரி பாலதேவர் அருகில் சென்று அவரை நையாண்டி செய்வதுபோல் தேவாரத்தில் இரண்டு அடிகளைப் பாடுகிறாள்.]

**குந்தவி :** *[தாளத்துடன் பாடும் தேவார அடிகள்]*

மாட்டைத் தேடி, மகிழ்ந்து, நீர் நும்முளே,
நாட்டுப் பொய்யெலாம் பேசிடும் நாணிலீர்.

**இராஜராஜன் :** *[இடையிட்டு] குந்தவி வேறொன்றைப் பாடு, அல்லது கவிராயர்கள் பாடட்டும்.*

**குந்தவி :** *[மற்றொரு தேவாரப் பாடலில் இரண்டு அடிகளைக் கம்பீரத்துடன் பாடுகிறாள்:]*

மண் எலாம் திகழ மன்னனாய் மன்னும்
மணிமுடிச் சோழன்தன் மகளாம்...

**முத்துப்பல் கவிராயர் :** *[இடைமறித்துப் பாடுகிறார் தாளத்தோடு]*

பஞ்சின் மெல் அடிப் பாவைஓர் பங்கனைத்
தஞ்சம் என்றுஇறு மாந்துஇவள் ஆரையும்
அஞ்சு வாள்அல்லள் ஆவடுதண் துறை
மஞ்சனேடு இவள் ஆடிய மையலே.

குந்தவி : [தோளில் மண் வெட்டியை எடுத்துச் சாய்த்துக்கொண்டு மற்ெருரு தேவாரப் பாடலில் சில அடிகளைப் பாடுகிருள்:]

> தந்தை, யார்? தாய், யார்? உடன்பிறந்தார்,
> தாரம், ஆர்? புத்திரர், ஆர்? தாம்தாம், ஆரே?
> வந்தவாறு எங்ஙனே? போமாறு ஏதோ?
> மாயம் ஆம்! இதற்கு எதும் மகிழவேண்டாம்...!

[பாடிக்கொண்டே குந்தவி போகிருள். அவள் போகும் திசையை வியப்புடனும் சிரிப்புடனும் இராஜராஜன் நோக்கிவிட்டு, தன் தமக்கையாரைத் தேடி, வேறுபுறம் உள்ளே போகிருன்.]

## காட்சி : 31

### தஞ்சை அரண்மனையில் பாதாளச் சிறை: இரவு நேரம்

[தனிமையில் இருக்கும் விமலாதித்தன், குந்தவியை நினைத்து மெல்லிய குரலில் பாடுகிருன். அவனுக்குப் பின்னல் சிறைக் கதவும் கம்பிகளும், அவற்றிற்குப் பின்னல் சிறிது நடைபாதை விட்டுக் கருங்கற் சுவரும் தென்படுகின்றன.]

விமலாதித்தன் : [தனிமையில் குந்தவியை நினைந்து மெல்லிய குரலில் சிலப்பதிகாரத்திலிருந்து ஒரு கவிதை பாடுகிருன்:]

> மாசறு பொன்னே வலம்புரி முத்தே
> காசறு விரையே கரும்பே தேனே
> அரும்பெறற் பாவாய் ஆருயிர் மருந்தே
> பெருங்குடி வாணிகன் பெருமட மகளே
> மலையிடைப் பிறவா மணியே என்கோ
> அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ
> யாழிடைப் பிறவா இசையே என்கோ
> தாழிருங் கூந்தல் தையால் நின்னை......

[குந்தவி தன் தோளில் ஒரு மண்வெட்டியைச் சுமந்தவளாய், கையொன்றில் தீப்பந்தத்தைப் பிடித்துக் கொண்டு பாதாளச் சிறையினுள் இறங்கி வருகிருள்.]

**குந்தவி :** *[மெல்லிய குரலில் உணர்ச்சியுடன்]விமலா தித்தரே......!*

**விமலாதித்தன் :** *குந்தவி நீயா......?*

**குந்தவி :** *[சிரிப்புடன்] பின்னே வேறு எந்தப் வைத்தியக்காரி இந்த நேரத்தில் உங்களைத் தேடி சிறைக்கு வருவாள் ?*

**விமலாதித்தன் :** *[எழுந்து அவளைத் தன்னருகில் அழைத்து வந்து] குந்தவி......*

**குந்தவி:** *நான் வந்து வெகுநேரமாகிவிட்டது. எவளோ மடமகளைப் பற்றியும் என்னவோ ஆருயிர் மருந்தைப் பற்றியும் பாடிக்கொண்டிருந்தீர்களே தவிர, என்னைக் கூடக் கவனிக்க வில்லையே......?*

**விமலாதித்தன்** : *உன் கண்களையே கற்பனையில் எழுதி எழுதிக் களித்துக் கொண்டிருந்தேன். காலம் போனதே தெரியவில்லை!*

**குந்தவி :** *ஆரம்பித்து விட்டீர்களே, எல்லோரையும் போல...*

(மண்வெட்டியை ஒரு புறம் வைக்கிறாள்.)

**விமலாதித்தன்**: *குந்தவி! உன் கண்கள் சிவந்திருக்கின்றனவே. நீ பல இரவுகளாகக் கண் விழித்தாயா ?*

**குந்தவி** : *(மெல்லிய சிரிப்புடன், வெடுக்கென) இல்லை. நானொன்றும் கண்விழிக்கவில்லை. நன்றாகத் தான் உறங்கினேன்!*

**விமலாதித்தன் :** *இல்லை! நிசி பவனி வரும் நிலா முற்றத்தில் என்னை நினைத்து நினைத்து ஏங்கியிருப்பாய். என்னை எண்ணி எண்ணி உருகியிருப்பாய் !*

**குந்தவி** : *(குறும்பாக) நான் எதற்காக உருக வேண்டுமாம் ?*

**விமலாதித்தன் :** *எதற்கா?... குந்தவி...இங்கே, வா...*

[குந்தவியைத் தன்னருகில் இழுத்து, அவளது முகத்தைப்பார்க்கிறான்.]

**குந்தவி :** உங்களுக்கு வர வரத் துணிச்சல் அதிக மாகிவிட்டது!

**விமலாதித்தன் :** குந்தவி... இது இரவா, பகலா... இந்த இருண்ட பாதாளச் சிறையில் எது இரவு பக லென்றே தெரியவில்லை!

**குந்தவி :** இது இரவுதான். வெளியே முழு நிலவு காய்கிறது! விமலாதித்தரே, வெள்ளிப் பூக்களை அள்ளிச் சொரியும் நீலவானத்தில் நிலவென்னும் அரசி மெல்லப் பவனி வரும் கோலத்தைப் பார்க்க வேண்டாமா...?

**விமலாதித்தன் :** வேண்டாம், குந்தவி! வானத்துப் பட்டாடையிலிருந்து வையம் செழிக்கப் பூமியில் உதிர்ந்து விழுந்த நட்சத்திரப் பூ தான் நீ! இல்லை, பாற்கடலில் தவழ்ந்து பொன்மலை ஏறும் பைந்தமிழ் நிலா நீ! உன்னைப் பார்ப்பதே போதும், குந்தவி!...

**குந்தவி :** (உணர்ச்சி மிகுந்த குரலில்) விமலா தித்தரே...

**விமலாதித்தன் :** குந்தவி! குந்தவி! உன் முகத் திற்கும் என் முகத்திற்கும் என்ன சம்பந்தம்? என் கண் ணைச் சந்திக்கும்போது உன் முகம் மலர்கிறதே...,

**குந்தவி :** எங்கோ ஆகாயத்தில் சூரியன் கிளம்பும் போது தடாகத்தில் தாமரை மலர்வது ஏன்? சந்திரன் உதயமாகும்போது சந்திரகாந்தக் கல் உருகுவதேன்?

**விமலாதித்தன் :** குந்தவி, ஒருவரையொருவர் நம் முள் நினைக்கும்போதெல்லாம் உன் உள்ளம் பூரித்து நிற் கிறது. என் நெஞ்சம் பொங்கி வழிகிறது... இது அதிசய மில்லையா?

**குந்தவி :** இதில் அதிசயமென்ன? கார்மேகத் தைக் கண்டு களி மயில் ஆடுகிறது! குளிர் நிலவில் குமு தம் மலர்கிறது!

**விமலாதித்தன் :** குந்தவி! இன்று கருத்து என்ற நிலத்தில் வளர்ந்து கலை என்ற ஒரு திசை நோக்கியே நம்

இருவர் உள்ளங்களும் ஒட்டியுறவாடுகின்றன. ஆனல் குந்தவி, ... நீ யார், நான் யார்? என் தந்தைக்கும் உன் தந்தைக்கும் என்ன உறவு? எங்கிருந்தோ வந்தோம். எப்படியோ சந்தித்தோம், விதி யென்ற வெள்ளம் நம்மிருவரையும் ஒரே கரையில் ஒதுக்கியது. நாமிருவரும் ஒன்ருனேம்!

**குந்தவி :** அறியாப் பிராயத்தில் என் நெஞ்சின் ஒரு மூலையில் சிறு பொறியாயிருந்த இந்த அன்பு இப்போது எவ்விதம் இப்படிக் காதல் என்ற பெரிய ஜோதியாய் கொழுந்து விட்டெரிந்தது?

**விமலாதித்தன் :** அதுதான் அன்பின் வளர்ச்சி! காதலின் விசுவரூபம்!

**குந்தவி :** இக்காதலின் பெருமை...

**விமலாதித்தன் :** அளவிட முடியாதது, குந்தவி! உயிரை அள்ளும் ஓவியம் காதல்! உணர்ச்சியின் கோபுரம் காதல்! கவிஞர் கவிதைக்கும் கலைஞர் கற்பனைக்கும் உரமளித்தது காதல்! இக் காதலின் பெருமையைக் கனிந்து பாட எழுந்தவையே பஞ்ச காவியங்கள். நம் அகத்தில் ஊறும் இக் காதலின் இலக்கணத்தைக் காட்ட வரைந்தவையே உங்கள் அகத்திணை நூல்கள்...

**குந்தவி :** விமலாதித்தரே...

**விமலாதித்தன் :** குந்தவி, உஷையின் காதலும் உமையவளின் காதல் தியானமும் கொள்ளை கொள்ளாத கவிஞர் உள்ளமே கிடையாது. முல்லை நிலத் தலைவனை கண்ணன் நப்பின்னையை நாடியதும் இக் காதலினலே! இக்காதலை வேண்டியே பர்வதராஜன் குமாரியான பார்வதியும் கைலாசநாதனை நோக்கிக் கடுந்தவமிருந்தாள். யமுனை நதி தீரத்தில் யசோதரை பெற்றெடுத்த செல்வனின் காதலுக்கு ஏங்கியே இராதையும் காத்திருந்தாள். கற்ற கலைகள் யாவும் கரைந்தோடக் கடைசியில் கச்சன் நெஞ்சில் எஞ்சி நின்றதும் இக் காதல் ஒன்றே. பிக்ஷுணியாகவே மனங்கொண்ட மணிமேகலையின் துறவு உள்ளத்

தையும் துடிக்கச் செய்தது இக் காதல்! குந்தவி! உள்ளத்தில் ஊறும் உண்மையான காதலுக்கு நிகரானது இந்தப் பூமியில் ஒன்றுமே இல்லை. அந்தக் காதல் மண் நிலத்தை விட விசாலமானது, வானை விட உயர்ந்தது, கடலை விட ஆழ்ந்தது!

**குந்தவி** : விமலாதித்தரே......!

**விமலாதித்தன்** : குந்தவி! என் எண்ணத்தில் எழுதிய எழுத்தோவியமே! உளிகொண்டு வெட்டாமல் என் உள்ளத்தில் செதுக்கிய என் பேசும் சிலையே··· கவிதை சொல்லும் இந்தக் கண்கள், கருத்தையள்ளும் கருங்கூந்தல், சிந்தையை அள்ளும் சிரிப்பு, குந்தவி! வானத்தில் மிதக்கும் மின்னல்களையும், வையகத்தில் காணாத வர்ண ஜாலங்களையும், அமுதத்தில் தோய்த்து அற்புதமாய் வடித்த அழகுத் தெய்வமே நீ!

**குந்தவி** : விமலாதித்தரே......

**விமலாதித்தன்** : குந்தவி, எனக்கு நோயும் நீ, நோய்க்கு மருந்தும் நீ!

**குந்தவி** : வாழ்விலும் தாழ்விலும் உங்களைப் பிரியேன்!

**விமலாதித்தன்** : குந்தவி, நம் ஒப்பற்ற காதலை உன் தந்தை தன் இராஜதந்திரத்திற்காகப் பலியிட விரும்புகிறார். நமக்காக இல்லாவிடினும், சோழ நாடும் வேங்கி நாடும் ஒன்றுபடுவதற்காகவாவது நாம் மணம் புரிவது அவசியமென உங்கள் மதியமைச்சர் மதுராந்தகர் விரும்புகிறார். ஆனால் நாம் நமக்காகவே மணம் புரிய விரும்புவோம்... குந்தவி, அரசகுலத்தினர் காந்தருவ வழக்கினர்...

**குந்தவி** : மணந்தால் உங்களையே மணப்பேன்; இல்லையெனில் மரிப்பேன்!

**விமலாதித்தன்** : நானும் அவ்வாறே ஆணையிடுகிறேன்!

**குந்தவி :** பந்தமற்ற நம் பெருவுடைப் பெருமானின் கோவிலில் நம் திருமணம் பற்றி உறுதி செய்துகொள்வோம். அதோ அந்தப் பாறாங்கல்லைப் புரட்டினால் ஒரு சுரங்கவழி உண்டாம். அதன் வழியாக நாம் தஞ்சைப் பெரிய கோயிலை அடையலாம்...

[விமலாதித்தன் மண்வெட்டியை எடுத்துத் தோளில் சுமந்து கொண்டு புறப்படுகிறான். குந்தவி நிப்பந்தத்தைப் பிடித்துக்கொண்டு கிளம்புகிறாள்.]

# காட்சி : 32

## பாலதேவரின் மாளிகைப் பூங்கா ;

## இரவு நேரம்

[முத்துப்பல் கவிராயரும் மேதினிராயரும் உருக்கமாக உரையாடிய வண்ணம் தென்படுகிறார்கள்.]

**முத்துப்பல் கவிராயர் :** ஆகா! அழகான நிலவு அடிக்கிறது! ஆனால் அனுபவிப்பதற்கில்லையே...

**மேதினிராயர் :** ஏனையா, முத்துப்பல்லரே! நம் இளவரசி குந்தவி நாச்சியார் இரகசியமாக விமலாதித்தரின் சிறைக்குச் சென்று வருகிறாராமே! உமக்குத் தெரியுமா ...?

**முத்துப் பல்லர் :** அதை நினைக்கும்போதுதான் என் நெஞ்செல்லாம் எரிகிறதய்யா!

**மேதினிராயர் :** ஏனையா ?

**முத்துப்பல்லர் :** அவர்களின அரும்பெரும் காதல் அந்தப் புலிக்கூண்டிலும், அதளபாதாளச் சிறையிலுங் கூட வளர்கிறது. நம் காதலோ வெட்ட வெளியிலும் கிட்ட வரமாட்டேன் என்கிறதே!

**மேதினிராயர் :** எல்லாம் உம் தலைச்சுழி ஐயா, தலைச்சுழி!

[பூந்தோட்டத்தினுள் யாரோ ஓடிவரும் அரவம் கேட்கிறது.]

***மேதினிராயர் :*** *யாரோ வருகிறார்களய்யா! இந்த நேரத்தில் நாம் இங்கிருப்பதைப்பற்றி ஏதாவது நினைத்துக் கொண்டால்...*

***முத்துப்பல்லர் :*** *ஒழுங்காக ஒளிந்துகொள்வோம்!*

[இருவரும் மறைய, இரட்டபாடி ஒற்றன் ஒருவன் முக்காடிட்டவண்ணம் அவர்களைத் தாண்டிச் செல்கிறான். பூங்கோதை அவனைப் பின்பற்றிவந்து நான்கு புறமும் பார்த்துவிட்டுச் செல்கிறாள். முத்துப்பல்லரும் மேதினிராயரும் திகைப்புடன் வெளிப்படுகிறார்கள்.]

***முத்துப்பல்லர் :*** *ஐயா! மேற்கோளாரே! போனவள் பூங்கோதையன்றோ ?*

***மேதினிராயர் :*** *ஆம்; புதியவன் ஒருவன் பின்னால்...*

***முத்துப்பல்லர் :*** *ஐயா! அவன் மூன்றாவது ஆள்!...*

***மேதினிராயர் :*** *முளையிலேயே கிள்ளிவிட வேண்டும்.*

***முத்துப்பல்லர் :*** *பூரண நிலவு! பூத்துக் குலுங்கும் பூங்கா!...காத்திருந்தவர் காதலியை...*

***மேதினிராயர் :*** *இன்று வந்தவன் கொண்டு போவதா? ஐயா, இந்த இடத்திலேதான் நம் ஒற்றுமை உருவாகவேண்டும்.*

***முத்துப்பல்லர் :*** *உயிர் போனாலும் விடோம்.*

[இருவரும் ஒற்றன் போன திசையில் பின்பற்றிப் போகிறார்கள்.]

# *காட்சி : 33*

**தஞ்சைப் பெருவுடைப் பெருமான் ஆலயத்தில் இறைவன் சந்நிதி முன்;**

**இரவு நேரம்**

[குந்தவியும் விமலாதித்தனும் இறைவனை வணங்குகிறார்கள்.]

*விமலாதித்தன் :* குந்தவி! அதோ பார்! உள்ளும் புறமும் இணைந்து வாழ்தல் என்ற கொள்கைக்கு ஓர் இலக்கணமாய் தமிழர் கண்ட தெய்வத்தை!

*குந்தவி :* இந்தச் சந்நிதியிலே...

*விமலாதித்தன் :* நம்மிருவர் மனமுமே சாட்சியாக, நாம் பேசும் தமிழே வேள்வித் தீயாக, திருமண உறுதி செய்துகொள்வோம்.

[அவர்கள் நினைவின் எதிரொலிகளாக திருமண வாழ்த் தொலிகள் திருக்குறளிலிருந்து கேட்கின்றன.]

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மை உண்டாகப் பெறின்.

மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு.

[இராஜராஜன், பாலதேவர், மதுராந்தகர், இம்மூவரும் விரைந்து வருகிறார்கள்.]

*இராஜராஜன் :* (ஆத்திரம் கலந்த குரலில்) குந்தவி!

[குந்தவி திடுக்கிட்டு விமலாதித்தனை விட்டு விலகி நிற்கிறாள்.]

*இராஜராஜன் :* குந்தவி, உன் அத்தையிடம் சுரங்க வழி கேட்டாய் என்று தெரிந்தபோதே சந்தேகப்பட்டேன்! தேசத் துரோகம்! இராஜத் துரோகம்!

*குந்தவி :* ஆ!

*விமலாதித்தன் :* குந்தவி! கலங்காதே! இன்று காதலென்ற உச்சிமலையேறி அதன் உன்னத சிகரத்தில் நிற்கிறோம். அதிலிருந்து வீழ்வதோ, அல்லது விண்ணேறி வாழ்வதோ, அரசனின் ஆக்ஞையையும், தந்தையின் அறிவையும் பொறுத்தது!

*இராஜராஜன் :* (குனிந்து நிற்கும் குந்தவியை நோக்கி) தவச்செல்வி யென்று தனிப்பெருமை கொண்ட

நீ தகாத செய்கைக்கு உடன்பட்டுத் தலை குனிந்து நிற்கிறாய் !

**விமலாதித்தன் :** குந்தவி, தவறு செய்தவளல்லவோ தலைகுனிய வேண்டும் ? குந்தவி ! இது உன் உரிமைப் போராட்டம் ! உன் தூய காதலை நிலைநிறுத்த வேண்டிய உன்னதப் போராட்டம் ! பயப்படாதே !

**இராஜராஜன் :** பயப்படாதே ! பால் போலப் பேசி இந்தப் பாதகன் பாழ் நரகத்திற்கு இழுத்துப்போவான் !

**குந்தவி :** பாழ் நரகமா ? பசும் நெஞ்சங்களைப் பிரிக்கும் அந்தப் பாழ்மதி படைத்த இராஜதந்திரி பாலதேவர் போய் ஆளவேண்டிய பட்டினமல்லவா அது ?

**பாலதேவர் :** பெண்ணுக்குச் சுதந்திரம் கொடுப்பதால் வரும் கேடு. பழைய சரித்திரங்களை எடுத்துக் கொண்டால்...

**குந்தவி :** என்னைப்போன்ற அபலைகளின் வாழ்க்கையை அவலமாக்கிய சரித்திரங்களுக்கு அளவேயில்லை ! பண்புள்ள பெண்ணான பாஞ்சாலியைக் கேவலம் ஓர் பந்தயப் பொருளாக வைத்துச் சூதாடினார்கள் பாண்டவப் புருஷோத்தமர்கள் ! கஷ்டத்திலும் தன்னை விட்டகலாத காதல் மனைவியான சீதையைக் கருப்பவதியென்றும் கருதாமல் காட்டிற்கு ஓட்டினான் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தி ! முன் யோசனையின்றி முனிவரொருவருக்குக் கொடுத்த வாக்கைக் காக்கத் தாலி கட்டிய தர்மபத்தினியையும் ஊர் முன் விலைகூறி விற்றான் அரிச்சந்திரமகாராஜன். வாழ்விலும் தாழ்விலும் பிரியேன் என்று வந்த தமயந்தியை நள்ளிரவில் நடுக்காட்டில் தவிக்க விட்டு நழுவினான் நளமகாராஜன்...ஆண்குலம் எங்கள் பெண்குலத்திற்கு வழிவழி இழைத்து வரும் அநீதிகளுக்கு இவை சான்றுகள் !

**இராஜராஜன் :** குந்தவி, உன் சொல் சாதுரியத்தால் உன் செய்கைக்குச் சத்திய மெருகு கொடுக்கப் பார்க்கிறாய். இந்தக் கயவனோடு சேர்ந்து அந்த வித்தையை நீயும் கற்றுக்கொண்டு விட்டாய் !

**குந்தவி :** நதி கடலோடு கலக்கும்போது கடலின் இயல்பையே அடைகிறது! மழைநீர் மண்ணில் சேர்ந்தால் மண்ணின் இயல்பையே அடைகிறது!

**இராஜராஜன் :** நாடிழந்த ஒரு சிற்றரசனையா விரும்புவது நீ! மாபெரும் மன்னன் மகள் நீ!

**குந்தவி :** நம் முன்னோரான கரிகாற்சோழர் மாபெரும் மன்னர்தானே? அவர் தம் மகளான ஆதிமந்தியை அவளுக்கிணையான கலைச்செல்வன் அத்தி என்னும் ஒரு சிற்றரசனுக்குத்தானே மணம்புரிந்து தந்தார்!

**இராஜராஜன் :** சிறைப்பட்டவன் மீதா சிந்தை வைப்பது?

**குந்தவி :** சிறைப்பட்ட உதயணனைத்தானே வாசவதத்தை காதலித்து மணந்தாள்?

**இராஜராஜன் :** குந்தவி! என் கனவுகளை நிர்மூலமாக்கும் இவனை ஏன் விரும்பினாய்?

**குந்தவி :** அப்பா! நதியில் வெள்ளம் பெருகுவதையும், கடல் நீர் பொங்குவதையும் ஏனென்று கேட்க முடியுமா? வசந்தம் வர மலர்கள் மலர்வதையும், மழை பொழிய மண் குளிர்வதையும் ஏனென்று கேட்கமுடியுமா?. அப்பா, சின்னஞ் சிறு வயதில் நாங்களிருவரும் சேர்ந்து விளையாடியதைக் கண்டு மனம் பூரித்தீர்கள்! பிறகு பருவமடைந்ததும் எங்கள் முன்னிலையிலே பலமுறை மணத்தைப்பற்றிப் பேசி எங்கள் அன்பை வளர்த்தீர்கள். இப்போது மனதையும் மனச்சாட்சியையும் மாற்றிக்கொள்ளும் இராஜதந்திரம் எனக்குத் தெரியாது, அப்பா...!

**இராஜராஜன் :** நீ சொல்வதும் ஒரு வழியில் சரிதான்! (விமலாதித்தனை நோக்கி) விமலாதித்தா! உனக்கு என் குந்தவியை மணந்து தருகிறேன். ஆனால், நீ எனக்குப் பணிந்து திறை செலுத்துவதாய் ஒப்புக்கொள்ள வேண்டும்!

**விமலாதித்தன் :** என் குந்தவிக்காக, அவள் தந்தையிடம் பணியவும் சித்தமாகவிருக்கிறேன். ஆனால் என்

நாட்டின் சுதந்திரத்தைப் பலியிட்டு எந்தப் பெண்ணையும் பெறச் சித்தமாயில்லை !

**இராஜராஜன் :** ஆனால் நானும் என் பெருமையைப் பலியிட்டு, சிறைப்பட்ட ஒருவனுக்கு என் கன்னியைக் கொடுக்கச் சித்தமாயில்லை !

**பாலதேவர் :** (கள்ளப் புன்னகையுடன்) இன்று உங்கள் மகளை வேங்கிநாட்டவனுக்கு மணம்புரிந்து கொடுத்தீர்களோ, நாளை உங்கள் சோழ நாட்டின் அரசுரிமைக்கே சொந்தம் கொண்டாட வந்துவிடுவான் !

**விமலாதித்தன் :** அத்தகைய பேராசைக்காரன் நானல்ல !

**பாலதேவர் :** இவன் இல்லாவிட்டால் இவன் சந்ததி! இந்த விமலாதித்தனால் உங்கள் சோழநாட்டின் அரியணைக்கு என்றுமே அபாயந்தான் !

**இராஜராஜன் :** அவ்வாறனால் குந்தவிக்கு வழி...?

**பாலதேவர் :** மனம் மாறினால் இரட்டபாடி அரசகுமாரனை மணக்கலாம் ! இல்லையெனில், மணமில்லாமல் என்றுமே நித்திய கன்னியாகவே இருந்துவிடட்டும் !

**குந்தவி :** என்னது...?

**பாலதேவர் :** (ஏளனப் புன்னகையுடன்) உதயகுமாரனின் காதலை உதறியெறிந்து, மணமில்லாமலே துறவு பூண்ட மணிமேகலை போல ...சக்கிரவர்த்திகளே, இராஜதர்மத்திற்காக மகள் பாசத்தை மறப்பது அவசியம் !

**குந்தவி :** பிறந்த நாளாக என் உணர்வுகளுக்கு உயிரளிக்கும் உள்ளத்தை ஊமையாக்குவதா தர்மம்? மனதை வஞ்சிப்பதுதான் மகா அதர்மம், அப்பா !

**பாலதேவர் :** சிந்தித்துப் பார்த்தால் காதல் என்பது ஒரு மனப் பிரமைதானே ? வெறும் மாயைதானே ?

**விமலாதித்தன் :** இராஜராஜ சோழரே, மாயை என்று கூறி உம் மகளின் வாழ்க்கையை மயானகாண்டமாக்க முயல்கிறான் அந்த மகாப் புத்திசாலி !

**பாலதேவர் :** சிவபாதரே, நெருப்பு நம்முடைய தானாலும் அதை அணைக்காமல் மடியில் வைத்திருக்க லாமா ?

**மதுராந்தகர் :** சக்கிரவர்த்திகளே ! நம் விரலே நம் கண்ணைக் குத்திவிட்டால், அதை வெட்டியெறிந்து விட லாமா? மணல் சுடுகிறதேயென்று யாராவது தம் மகளை நெருப்பில் தள்ளுவார்களா ?

**குந்தவி :** அப்பா, அப்பா...இளமை தொட்டு என் உள்ளத்தில் மீட்டி வந்த என் காதல் வீணையைப் பிடுங்கி யெறிந்தால் என் வாழ்க்கையே சோக கீதமாகிவிடும் !

**இராஜராஜன் :** என் தேச நலத்தில் அபஸ்வரம் ஏற்படுவதை விட உன் வாழ்க்கை சோக கீதமாகவே இருக்கட்டும் !

**குந்தவி :** இவரை மணக்க முடியாவிட்டால் மரிப் பேன். நம் காவிரி நதி பெண்ணுருவமாதலின், என் பெண் ணுள்ளத்தை உணர்ந்து, என்னைத் தன் மடியில் ஆழப் புதைத்து, தன் அலைக்கரங்களால் தாலாட்டி, அழியா நித்திரைகொள்ளச் செய்வாள். எனக்கும் அமைதி கிடைக்கும்.

**இராஜராஜன் :** (ஆத்திரத்துடன்) விமலாதித்தா ! கள்ளமேயறியாத என் கன்னிப் பெண்ணின் உள்ளத் தில் நன்முக நஞ்சிட்டுவிட்டாய் ! ஒருவேளை, நீ சிறையிலி ருந்து தப்பிச் செல்ல என் மகளை உபயோகிக்கலாம் என்று நினைத்தாயோ ?

**விமலாதித்தன் :** (பன்மடங்கு ஆத்திரத்துடன்) ஆ! கோழைபோல் ஒரு பெண்ணின் உதவியால் தப்பிச் செல்லவா? இவ் விமலாதித்தனு ? குந்தவி, கேட்டாயா, உன் தந்தை சொல்வதை ? பார்த்தாயா, என் வீரத்தில் களங்கம் சுமத்துவதை ! கண்டாயா, என் வேங்கி நாட் டின் வீர பரம்பரையையே இழிவுபடுத்துவதை...? குந்தவி, உண்மையில் நீ என்னைக் காதலிப்பதானல் என் சிறைப் பக்கமே வராதே ! உரிமைப் போராட்டத்தை மறந்து உயிர் விடவும் நினையாதே!

**குந்தவி :** (பாலதேவரை வெறுப்புடன் நோக்கி) இராஜராஜ சோழ சக்கிரவர்த்திகளின் மகள் கண்ணகி யாக விளங்குவாளே தவிர, ஒருபோதும் மணிமேகலை யாக மாறமாட்டாள்.

[குந்தவி போகிருள். காவலர் வந்து விமலாதித்தனைச் சிறைக்கு இழுத்துச் செல்கிருர்கள்.]

# காட்சி : 34

## குந்தவியின் அந்தப்புரம் ;

## உதய நேரம்

[குந்தவி கண் கலங்கியவளாய் வருகிருள். அவளை அணைத்துத் தேற்றியவளாய் வீரமாதேவி வருகிருள்.]

**வீரமாதேவி :** இளவரசி, இப்படி ஏனம்மா இராப் பகலாய் அழுகிறீர்கள் ?

**குந்தவி :** பெண்ணிடம் இன்னும் பறிமுதலாகாமல் எஞ்சியிருக்கும் உரிமை இந்த அழுகை ஒன்றுதானேயடி?

**வீரமாதேவி :** அழுது அழுது கண்கள்கூட வற்றி விட்டனவே ?

**குந்தவி :** என் கண்கள் செய்துவிட்ட பாபத்தை அனுபவிக்கிறேன். முன்னே அவரது கண்களைக் கண்டு காதலித்தது இந்தக் கண்கள்தாமே! அழுது அழுது வற்றி விடுவதே அவற்றிற்குரிய தண்டனை !

**வீரமாதேவி :** குந்தவி நாச்சியாரே, இதென்ன இது? நீங்கள் இராஜகுலப் பெண். சக்கிரவர்த்திகளின் கடமையையும் கவனிக்கவேண்டாமா ?

**குந்தவி :** கடமைக்கும் ஓர் அர்த்தம் வேண்டும் ! அதற்கும் கருணை என்ற இருதயம் வேண்டும், வீரமா தேவி !

**வீரமாதேவி :** இராச்சியத்தின் பாதுகாப்பை உத்தே சித்துத்தான் சக்கிரவர்த்திகள் கருணையற்றவராயும் இதய

மற்றவராயும் இருக்கவேண்டிய அவசியம் ஏற்படுகிறது... இதன் முடிவு...?

**குந்தவி :** என் உயிரை எமனுக்குத் தானம் செய்து விடுகிறேன்! தானம் செய்வதுதான் நம் நாட்டு வழக்க மாயிற்றே?

**வீரமாதேவி :** அரசியலுக்காக...

**குந்தவி :** நீ அமைச்சர் மகள். அரசியல் உனக்கு ஓர் இலட்சியமாகத் தோன்றுகிறது. நான் அரசியலிலே பிறந்து அரசியலுக்காகவே அரண்மனையில் வளர்ந்தவள். எனக்கு அரசியல் என்பது ஒரு சூதாட்டப் பலகையாகவே தோன்றுகிறது!

**வீரமாதேவி :** இராசகாரியத்தை முன்னிட்டாவது நீங்கள் விமலாதித்தரை மறக்கத்தான் வேண்டும், குந்தவி தேவி!

**குந்தவி :** வீரமாதேவி! என் வீரத் தமையன் இராஜேந்திரனை மறக்கும் இருதயம் உனக்கு இருக்கலாம். ஆனால் நான் விமலாதித்தரை மறக்க முடியாது! இப் பூமண்டலமும் நிலை கலங்கலாம். நீரும் நெருப்பும் தன்னியல்பு குன்றலாம். வையையும் காவிரியும் வற்றி விடலாம். ஆனால் நான் கொண்ட காதல் மாறாது, வற்றாது, தன்னியல்பும் குன்றாது.

[குந்தவி வேகமாகப் போகிறாள்.]

**வீரமாதேவி :** குந்தவி நாச்சியாரே...எங்கே வேகமாகப் போகிறீர்கள்?

**குந்தவி :** என் காதலரின் சிறைக்கூடத்திற்குப் போகிறேன். வாழ வழியொன்று சொல்லுங்கள் என்று அவரைக் கேட்கிறேன். ஏன் வந்தாய் என்றால் சாகவாவது விடை பெற்றுக்கொண்டு வருகிறேன்.

**வீரமாதேவி :** பெண்ணைக்கொண்டு விமலாதித்தர் சிறை தப்ப முயல்கிறார் என்று நிரூபிக்கக்கூடத் தயங்க மாட்டார் பாலதேவர்! உங்கள் காதலரோ அதைப் பொறுக்கமாட்டார்!

[குந்தவி ஓவென அழுது வீரமாதேவியைக் கட்டிக் கொண்டு விம்மி விம்மி அழுகிருள்.]

**வீரமாதேவி :** மறுபடியும் அழுகிறீர்களா...?

**குந்தவி :** (வெடுக்கென்று தலைநிமிர்ந்து அவளை விட்டு விலகி நின்று) நான் ஒன்றும் அழவில்லை!...நான் ஏன் அழவேண்டும்?...சக்கிரவர்த்திகளையே ஆட்டிவைக் கக்கூடிய பெரிய குந்தவ்வையார் இந்த இராச்சியத்தில் இருக்கும்வரை நான் ஏன் அழவேண்டும்...?...என் அழுகையைக்கூட நிறுத்த ஓத்தாசை இல்லையென்ருல் என் அத்தையின் பெயரை நான் ஏன் வைத்துக்கொள்ள வேண்டும்...?

[வில்லிலிருந்து புறப்பட்ட அம்புபோல் குந்தவி பாய்ந்து செல்கிருள். வீரமாதேவி அவளைப் பின்பற்றிச் சிந்தனையில் ஆழ்ந்தவளாகச் செல்கிருள்.]

# காட்சி : 35

## குந்தவ்வையாரின் வேளம் ;

### பகல் நேரம்

[ஈட்டி ஏந்திய யவனப்பெண் ஒருத்தி கற்சிலைபோல் அசைவற்று நிற்கிருள். பெரிய குந்தவ்வையார் தம்முன் பொற்பீடத்தில் பிரித்துக்கிடக்கும் கவிதைச் சுவடிகளில் ஒன்றைப் புரட்டிக்கொண்டிருக்கிருள். குந்தவி, "அத்தை...அத்தை !" என்று கூப்பிட்டுக் கொண்டே ஓடி வருகிருள்.]

**குந்தவி :** அத்தை......அத்தை...உங்களிடம் ஒரு கேள்வி...

**குந்தவ்வையார் :** எதைப்பற்றி? அரசியலா, இலக் கியமா, மதமா...

**குந்தவி :** உங்களைப் பற்றித்தான், அத்தை...

**குந்தவ்வையார் :** என்னைப் பற்றி என்ன ?

**குந்தவி :** அத்தை...அத்தை...நீங்கள் என்னைப் போல் சின்னப்பெண்ணுக இருக்கிறபோது, காதலித்தீர்

களா அத்தை ...?அதாவது, நம் நாட்டதிகாரிகளில் ஒருவரான வல்லவரையர் வந்தியத்தேவரை நீங்கள் காதலித்துத்தானே கலியாணம் செய்துகொண்டீர்கள்?

**குந்தவ்வையார் :** என்னடி குந்தவி, எதைப் பேசுவது, எதைப் பேசக்கூடாது என்று உனக்கு ஒரு வரம்பு இல்லையா?

**குந்தவி :** உங்களைப்போல எனக்கும் வயசாகிற போது நானும் பெரிய பெரிய விஷயங்களைப் பற்றிப் பேசலாம். இப்போது என் வயசுக்குரிய பேச்சைத்தானே பேச முடியும்?...

**குந்தவ்வையார் :** சிறையிலிருக்கும் விமலாதித்தன் சம்பந்தமாகத்தானே நான் உனக்காக இராசராசனிடம் பேசவேண்டும் என்கிறாய்...கவலைப்படாதே!

**குந்தவி :** (தன் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு) உங்கள் பெயரை நான் வைத்துக்கொண்டிருக்கும்போது நான் ஏன் கவலைப்பட வேண்டும், அத்தை?

**குந்தவ்வையார் :** (குந்தவியை வாஞ்சையோடு அணைத்து அவளுடைய கூந்தலைக் கோதியவண்ணம்) அதோ பார்...

[இராஜராஜன், இராஜேந்திரன், பாலதேவர்—இம் மூவரும் வருகிறார்கள். குந்தவி தன் தந்தையைக் கண்டதும், தான் நினைத்தது கைகூடப்போகிறது என்னும் பெருமிதத்துடன் தன் அத்தையின் பின்புறம் மறைந்து நின்று குந்தவ்வையாரைத் தூண்டிவிடுகிறாள். இராஜராஜன் அதைக் கவனிக்கிறான்.]

**இராஜராஜன் :** (குந்தவ்வையாரை நோக்கி) அக்கையார் என்னை இங்கே வரவழைத்த காரணம்?

**குந்தவ்வையார் :** உன் மகள் குந்தவிக்கு வயதாகி விட்டது! அவளைப்பற்றி நீயும் யோசிப்பதில்லை. உன் மனைவிகளில் ஒருத்தியும் யோசிப்பதில்லையாம். நானாவது அவளைப்பற்றி யோசிக்க வேண்டாமா? அவளுக்கு இன்னும் மணம் செய்யாமல் வைத்திருந்தால் ஊரில் என்ன பேசுவார்கள்?

**இராஜராஜன் :** (சிரித்துக்கொண்டே) எதுவும் தன் தமக்கையார் சொன்ன பிறகு தான் இராஜராஜ சோழச் சக்கிரவர்த்திகளுக்குத் தெரிகிறது என்றுகூடத்தான் ஊரில் பேசிக்கொள்கிருர்கள் !

**குந்தவ்வையார் :** அப்படியா பேசுகிருர்கள் ?

**இராஜராஜன் :** ஆமாம் ! தாய் இல்லாத இராஜ ராஜன் தன் தமக்கையாரையே தாய்போலப் பாவித்தான், சோழநாட்டின் முடியை ஏற்றுக்கொள்ளும்படி தமக்கை யார் சொன்ஞர். ஏற்றுக்கொண்டான் ! சேர சோழ பாண்டிய மும்மண்டலத்திலும் புலிக்கொடியைப் பறக்க விடச் சொன்ஞர். அவ்வாறே பறக்கவிட்டான். மும்முடிச் சோழஞ்ஞன். இராஜாக்களே யெல்லாம் வென்று இராஜாக்களுக்கெல்லாம் இராஜன் ஆகச்சொன்ஞர். அவ்வாறே இராஜராஜன் ஆஞன் ! அந்தப் பெயருக்கு அழியாச் சின்னமாகத் தஞ்சையில் ஒரு பெரிய கோயிலைக் கட்டச்சொன்ஞர். அவ்வாறே இராஜராஜேஸ்வர ஆலயத் தைக் கட்டிஞன். பிறகு கங்கையும் கடாரமும் தாண்டிக் கடல் கடந்தும் தமிழர் நாகரிகத்தைப் பரப்பச் சொன்ஞர். அவ்வாறே ஒரு கனவு காண்கிருன். இப்போது தன் கையாலே அவ்வளவையும் அழித்து விடச் சொல்லப்போகிருர். அவ்வாறே அவ்வளவையும் அழித்துவிடுவான் !

**குந்தவ்வையார் :** நாஞ அப்படிச் சொல்வேன் ?

**இராஜராஜன் :** ஆமாம். உங்கள் கருத்துப்படி சிறை யிலிருக்கும் விமலாதித்தனுக்கு நம் குந்தவியை மண முடித்தால், இரட்டபாடி சத்தியாசிரயனும் அவனுக்குத் துணையாக வடவேந்தர்களும் நம் தமிழகத்தின் மீது படை யெடுப்பார்கள். அதற்கு மாருக சத்தியாசிரய மன்னன் மகனுக்கு நம் குந்தவியை மணம் புரிந்து கொடுத்தால் அவன் துணையுடன் நம் புலிக்கொடி கங்கையும் கடாரமும் தாண்டி அடிவானத்திற்கு அப்பாலும் திக்விஜயம் புறப்பட முடியும்...இன்று சத்தியாசிரய மன்னனிடமிருந்து தூதன் ஒருவன் வந்திருக்கிருன்.

**குந்தவ்வையார் :** அந்தத் தூதன் கொண்டு வந்த தகவல்...?

**இராஜராஜன் :** நம் சிறையில் இருக்கும் விமலாதித்னுக்கு மரணம்! அதோடு சத்தியாசிரயன் குமாரனுக்கும் நம் குந்தவிக்கும் மணப்பிணைப்பு. இவ்விரண்டும் இல்லையென்றால் சோழநாட்டின் மீது வடவேந்தர்களின் படையெடுப்பு ...!

**குந்தவ்வையார் :** நீ என்ன பதில் திருமுகம் அனுப்பப் போகிறாய் ?

**குந்தவி :** (தன் அத்தையாரை விலக்கிக்கொண்டு வெடுக்கென முன்னால் துள்ளிவந்து ஏளனச் சிரிப்புடன்) தென்ன பராக்கிரம கீர்த்தி பராக்கிரம நிகரிலி சோழ இராஜராஜ சோழ சக்கிரவர்த்திகள், தம் சிறையிலுள்ள நிராயுதபாணியான ஒருவரைக் கொல்வார்; தாம் பெற்ற பஞ்சினும் மெல்லிய பாவையைப் பகைவனின் பாசறைக்குப் பஞ்சணைப் பதுமையாக அனுப்புவார்; பிறகு இரு காதலர்களின் பிணங்கள் மீது ஏறி, கங்கையும் கடாரமும் தாண்டி, சோழர்களின் புலிக்கொடியைத் தமிழர்களின் புது நாகரிகமாய் அடிவானத்திற்கு அப்பாலும் பறக்கவிடுவார்! சக்கிரவர்த்திகள் தம் மெய்க் கீர்த்திகளோடு இந்த அருஞ் செயலையும் தம் கல்வெட்டுகளில் பொறித்துக் கொள்ளுவார்.

**பாலதேவர் :** சக்கிரவர்த்திகள் பொறுக்க வேண்டும்! என்ன இருந்தாலும் பெற்ற மகளல்லவா ?

**குந்தவி :** (வெடுக்கென) பெற்ற மகள் என்பதை நினைவூட்டுவதற்குக் கூடச் சக்கிரவர்த்திகளுக்கு ஒரு இராஜதந்திரி தேவையாயிருக்கிறது!

**இராஜேந்திரன் :** குந்தவி! சக்கிரவர்த்திகளின் நெஞ்சைப் புண்ணாக்குவதையே உன் தொழிலாகக் கொண்டுவிட்டாய்! என் தங்கை அவ்வாறு பேசுவதை நான் அனுமதியேன்!

**குந்தவி :** (வெடுக்கென அவன் பக்கம் திரும்பி) அண்ணா! அவர் உனக்குச் சக்கிரவர்த்திகளாய் இருக்

கலாம். ஆனால் எனக்கு வெறும் தந்தைதான்! மகளுக்கும் தந்தைக்கும் இடையே குறுக்கிட ராஜதந்திரிக்கு மட்டு மல்ல, சொந்த அண்ணனுக்குக்கூட உரிமை இல்லை!... அண்ணா, மாற்றானுக்கு மனைவியாகலாம் என்றால் மங்கையின் நெஞ்சு எவ்வளவு புண்ணாகும் என்பதையும் மன்னர் யோசித்திருக்க வேண்டும்.

**குந்தவ்வையார் :** குழந்தை, இதென்ன...? சக்கிர வர்த்திகள் நிலையையும் நீ யோசிக்கவேண்டாமா...?

**குந்தவி :** அத்தை...நீங்கள் கலியாணம் செய்து கொடுக்கப்பட்டவர்கள்! இனி புகுந்தவீட்டு வியவகாரங் களில் தலையிட உங்களுக்கு உரிமை உண்டே தவிர, பிறந்த வீட்டு வியவகாரங்களில் தலையிட உங்களுக்குப் பங்கு இல்லை...

**குந்தவ்வையார் :** என்னையுமா...?

**குந்தவி :** அத்தை...என்னைப்போல் இளம் வயசில் நீங்கள் வந்தியத்தேவரைக் காதலித்தீர்கள்...காதலித்த வரையே கலியாணமும் செய்துகொண்டீர்கள்...ஆனால் நான் அந்த உரிமை பெற முடியாமல் வஞ்சிக்கப்படு பவள்!...

**குந்தவ்வையார் :** குந்தவி, உனக்கென்ன பைத்தி யமா?

**குந்தவி :** ஆமாம்! நான் பைத்தியக்காரியாகவே ஆகிவிட்டேன்...சிறையிலுள்ள விமலாதித்தரையே என் கணவராகக் கடவுள் சந்நிதியில் வரித்துக்கொண்டு விட்டேன்! நிராயுதபாணியான அவர் உடலில் ஒரு துளி இரத்தம் சிந்தினாலும், இந்தச் சோழ நாட்டையே பழி தீர்த்துக்கொள்ளாமல் விடமாட்டேன்!

**இராஜராஜன் :** (கடுமையான குரலில்) குந்தவி! இங்கே வா!

[குந்தவியைச் சக்கிரவர்த்திகள் என்ன செய்வாரோ என்னும் திகைப்பில் அனைவரும் கற்சிலைகளாகச் சமைந்து நிற்கிறார்கள்.]

**இராஜராஜன் :** குந்தவி! உன்னைத்தான். இங்கே வா!

[குந்தவி சிறிது தயங்கியபிறகு, தலை சிலிர்த்து, சரேலென இராஜேந்திரன் அருகில் சென்று, அவனது உடைவாளை உறையிலிருந்து உருவுகிருள்.]

**குந்தவி :** அண்ணு! பின்னுல் சாகப் போகிறவளைச் சக்கிரவர்த்திகள் முன்னதாகவே தம் கையாலே முடித்து விடட்டும்! தமிழ் நாட்டின் வட எல்லைகளையும் சோழ சாம்ராஜ்யத்தையும் காப்பாற்ற உபயோகப்படாத உன் கத்தி துஷ்டையான உன் தங்கையின் உயிரைக் கொல்லவாவது உபயோகப்படட்டும்!

[குந்தவி தன் இரு கைகளாலும் கத்தியை ஏந்திய வண்ணம் பதுமைபோல் நடந்து, இராஜராஜன் அருகில் சென்று, அவனது பாதங்களில் உடைவாளை வைக்கிருள். தலை வெட்டப்படுவதற்குத் தயாரானவள்போல, முழங்காலிட்டுக் குனிகிருள். இராஜராஜன் அவளைத் தூக்கி நிறுத்தி, அவளது கூந்தலை வாஞ்சையுடன் தடவிக்கொடுக்கிருன்.]

**இராஜராஜன் :** குந்தவி! குழந்தை கோபிப்பதற்காகக் குமுறிவிட உன் தந்தை குருடனல்ல! ஆனுல் சோழப் பேரரசின் சக்கிரவர்த்திகளிடம் பேசவேண்டிய மரியாதை சம்பிரதாயங்களைச் சாதாரணப் பிரஜைகள் மட்டுமல்ல, இளவரசிகூடக் காட்டியே தீரவேண்டும்!

**குந்தவி :** என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்! தந்தை, மகள் என்ற முறையில் என்னென்னவோ பேசிவிட்டேன்! இனி, சக்கிரவர்த்திகள், இளவரசி என்ற முறையில்தான் பேசவேண்டும் என்ருல் அவ்வாறே செய்கிறேன்...ஆனுல்...

**இராஜராஜன் :** ஆனுலென்ன? மறுபடியும் ஆரம்பித்துவிட்டாயே...

**குந்தவி :** சக்கிரவர்த்திகள் கூட அனுமதி பெற்ற பிறகே பெண்டுகளின் வேளத்திற்குள் பிரவேசிப்பதுதான் அரசகுலச் சம்பிரதாயம்! இராஜதந்திரி பாலதேவர்

எங்கள் உத்திரவு இல்லாமல் இந்த வேளாத்திற்குள் பிரவேசித்தபோதே தலையடித்திருப்பேன்...ஆனல் தந்தையின் மதிப்புக்குரியவர் என்பதனுல் விட்டுவிட்டேன்...!

**இராஜராஜன் :** *(பாலதேவ பட்டரையரை நோக்கி)* இங்கே நிற்க சக்கிரவர்த்திகளுக்கு மட்டுமே இளவரசி அனுமதி தருவாள்! ஆனல் இராஜதந்திரிக்கு அனுமதி தரமாட்டாள்!...நீர் போகலாம்!...

[பாலதேவர் வெளியேறுகிருர்.]

**இராஜராஜன் :** *(இராஜேந்திரன் பக்கம் திரும்பி)* இராஜேந்திரா! திருமண சம்பந்தமாக இளவரசி குந்தவி நாச்சியார் என்ன முடிவு சொல்லுகிருள் என்று கேள்.

**குந்தவி :** *(கம்பீரமாக இராஜேந்திரன் பக்கம் திரும்பி)* அண்ணு! உன் தங்கை என்ன முடிவு சொல்லுவாள் என்பதை நீயே சொல்!...ஏன் தயங்குகிருய்...? தமிழ்நாட்டின் மானத்தைக் காக்கத் தன் உயிரைத் தியாகம் செய்வாளே தவிர, தன்மானத்தையும் காதலனையும் பலிகொடுக்கமாட்டாள் என்று சொல்...!

**இராஜராஜன் :** குந்தவி. மறுபடி நீ இளவரசி என்பதை மறந்து பேசுகிருய்!

**குந்தவி :** ஆமாம், நான் மறந்துவிட்டேன். மன்னித்துக்கொள்ளுங்கள்! *(சரேலென உள்ளே போகிருள்.)*

**இராஜராஜன் :** இராஜேந்திரா! எண்ணூறு வருஷங்களுக்குப் பிறகு வரக்கூடிய அரசியல் சிக்கல்களையுங்கூட என்னல் யூகிக்க முடிகிறது. ஆனல் உன் தங்கையின் வாயிலிருந்து அடுத்து என்ன வார்த்தை வரப்போகிறது என்பதை எந்த இராஜதந்திரியாலும் யூகிக்க முடியாது!

[குந்தவி உள்ளிருந்து, உடைவாள், சிறுமுடி, ஆபரணங்கள் முதலான இளவரசிக்குரிய சின்னங்களைக் கொண்டுவந்து இராஜராஜன் பாதங்களில் வைக்கிருள். எல்லோரும் அவளது செய்கையை வியப்புடன் நோக்குகிருர்கள்.]

**குந்தவி :** *(இராஜேந்திரனிடம்)* அண்ணு! அவை இளவரசிக்குரிய சின்னங்கள்! காதலனின் இரத்த

ஜுளங்களிலே நடந்து, மாற்ருனுக்கு மனைவியாகி மன்சாட்சியை மாளடித்துக்கொள் என்று சொல்லும் இளவரசிச் சின்னங்கள்! அவை உன் தங்கைக்கு வேண்டாம்! இராஜதந்திரத்திற்காகச் சக்கிரவர்த்திகள் இன்னும் எத்தனையோ இராஜகுலமாதர்களை மணம் புரிவார்! அவர்களுக்கு எத்தனையோ பெண்கள் பிறக்கும்! அவர்களில் எவளாவது ஒரு துர்ப்பாக்கியவதிக்கு அந்தச் சின்னங்களைக் கொடுக்கச்சொல்!

**இராஜராஜன் :** இராஜேந்திரா! இனி உன் தங்கையின் நிலை என்ன ?

**குந்தவி :** சாம்ராஜ்யத்திலுள்ள எத்தனையோ ஏழைப் பிரஜைகளில் ஒருத்தியைப்பற்றி சக்கிரவர்த்திகள் வீணுகக் கவலைப்படவேண்டாம் என்று சொல், அண்ணு!

**இராஜராஜன் :** இராஜேந்திரா! உன் தங்கை அரண்மனையிலே இருப்பாளா?

**குந்தவி :** உரிமை இல்லாத இடத்தில் உன் தங்கை இருக்கமாட்டாள் என்று சொல் அண்ணு! காதலின் உரிமையை நிலைநாட்டுவதற்குத்தான் வெளியேறுகிருள் என்றும் சொல்!

**இராஜராஜன் :** இராஜேந்திரா! உலகம் தெரியாத உன் தங்கை வெளியே சென்ருல் எப்படி வாழ முடியும் என்று தெரிந்துகொள்!

**குந்தவி :** இராஜராஜசோழ சக்கிரவர்த்திகளின் சாம்ராஜ்யத்தில் நொண்டி முடவர்கள் கூட வாழ முடிகிற போது, உன் தங்கை உழைத்துப் பிழைப்பதுதான் கஷ்டமா என்று கேளண்ணு!...எனக்கு உழைத்துப் பழக்கமில்லாமலிருக்கலாம்! ஆனல் உழைத்துப் பிழைக்க உன் தங்கைக்குக் கைகள் இருக்கின்றன! அதற்குத் தேவையான உள்ளமும் இருக்கிறது...அண்ணு...எத்தனையோ ஏழைக் குடியானவப் பெண்களோடு பெண்ணுக நானும் வயல்வரப்புகளில் வேலை செய்வேன், ஆனந்தமாகத் தெம்மாங்கு பாடுவேன். வாழ முடிகிற வரையில் வாழ்வேன். எங்காவது குப்பை மேட்டில் பசியால் சாக நேர்ந்

தால் அப்போதும் என் சாவு சுவர்க்கமாக இருக்குமே தவிர, நரகமாய் இருக்காது என்று சொல்!

**இராஜராஜன் :** சக்கிரவர்த்திகளின் மகள் அவ்வாறு அனாதைப் பெண்போல் நாடெங்கும் அலைந்து திரிந்தால், அதனால் யாருக்கு இழிவென்று கேள்,

**குந்தவி:** பெற்ற மகளால் சக்கிரவர்த்திகளுக்கு எந்தப் பேரிழிவும் ஏற்படவிடமாட்டாள் உன் தங்கை என்று சொல் அண்ணா! உங்கள் அரண்மனையில் எத்தனையோ வைத்தியர்கள் இருப்பார்கள். எல்லோரும் ஏகமனதாக இளவரசி மாரடைப்பினால் இறந்துபோனாள் என்று அறிவித்துவிடட்டும்! யுத்தக்களத்தில் கிடக்கும் ஏதாவது அனாதைப் பிணத்தை இதுதான் இளவரசி என்று சொல்லி அதற்கு மிக ஆடம்பரமாக அரச மரியாதைகளோடு தகனக் கிரியையும் செய்து விடட்டும்!

**இராஜேந்திரன் :** (கண்ணீர் வடித்த வண்ணம்) குந்தவி! கடைசியில் இந்த முடிவிற்கா வந்து விட்டாய்?... (அவளது கண்ணீரைத் துடைக்கிறான்.)

**குந்தவி :** அண்ணா! இத்தனை நாளும் நான் வடித்த துன்பக் கண்ணீரைத் துடைக்காதவன், இப்போது ஏன் என் ஆனந்தக் கண்ணீரைத் துடைக்கிறாய்?...ஆனால் அண்ணா...நான் உன் கண்ணீரைத் துடைக்க மாட்டேன். நீ நன்றாக அழு! இந்த உலகில் குந்தவி அனாதைப் பெண் அல்ல, அவளுக்கும் ஓர் அண்ணன் இருக்கிறான் என்று என் ஆயுள் முழுதும் நினைவிருக்கும்படியாக நன்றாக அழு! ஆனால் நான் உன்னிடமிருந்து பிரிந்து போகும்போது அழ மாட்டேன்! மகாவீரனான நீ உன் தங்கையின் முகத்தில் சிரிப்பைத்தான் காண வேண்டும்!

[முகத்தில் கண்ணீருடன் வலியச்சிரிப்பை வரவழைத்துக்கொள்கிறாள் குந்தவி. பிறகு அவள் மெல்லக் குந்தவ்வையாரிடம் சென்று, குழந்தைபோல் அணைத்துக் கொள்கிறாள்.]

**குந்தவி :** அத்தை......உங்கள் பெயரை எனக்கு வைத்த பெருமையில் என்னையறியாமல் உங்களிடமே

பலமுறை துடுக்காய்ப் பேசியிருப்பேன்...என் குணங்களை மறந்து என் குற்றங்களை நீங்கள் மன்னிக்காவிட்டாலும், என் வாழ்நாள் முழுதும் உங்கள் பிரியத்தை மறக்கமாட்டேன், அத்தை......(தன் இடுப்பிலிருந்த ஒரு குங்குமச் சிமிழை எடுத்துக் காட்டி) அத்தை, இதோ நீங்கள் கொடுத்த குங்குமச் சிமிழ்! (வெடுக்கென இராஜராஜனை நோக்கித் திரும்பி) இது இந்த அரண்மனையைச் சேர்ந்ததல்ல! (பிறகு குந்தவ்வையாரை நோக்கித் திரும்பி) உங்கள் கணவர் வீட்டிலிருந்து கொண்டு வந்தது...அத்தை, உங்கள் குந்தவி என்றும் விதவையாகாமல் சுமங்கலியாகவே இருக்கவேண்டும் என்று மனமார வாழ்த்தி என்னைப் பரிவுடன் வளர்த்த உங்கள் திருக்கையாலே குங்குமத் திலகம் இடுங்கள்,

[குந்தவ்வையார் திலகமிடுகிருள்.]

**குந்தவி :** இதை உங்கள் திருமணப் பரிசாக நானே வைத்துக் கொள்கிறேன், அத்தை...

[இராஜேந்திரன் அருகில் குந்தவி செல்கிருள்.]

**குந்தவி :** அண்ணு! உன்னிடம் ஒன்று கேட்டால் தருவாயா? மகாவீரனின் தங்கை சாமானியமான பொருளைக் கேட்கமாட்டாள்! உன் உயிரையும் விட மேலான பொருளைத்தான் கேட்பாள்!...அண்ணு, உன் உடைவாளைக் கொடு. சேர பாண்டியர்களை வென்று எந்தவாள் மூவேந்தர் நாட்டை ஒரே தமிழ் நாடாக்கியதோ, எந்த வாள் அருண்மொழித் தேவரை இராஜராஜசோழச் சக்கிரவர்த்திகளாக ஆக்கியதோ, அந்த உன்னதமான வாளை எனக்குக் கொடு.

[இராஜேந்திரன் எடுத்துத் தந்த உடைவாளை குந்தவி வாங்கித் தன் கண்களில் ஒற்றிக்கொள்கிருள்.]

**குந்தவி :** அண்ணு!...இந்த ஒப்புயர்வற்ற வாளை உன் தங்கை தற்கொலை செய்துகொள்வதற்காக வாங்கவில்லை! தன் காதலனைச் சிறை மீட்கச் சக்கிரவர்த்திகளோடு போரிடுவதற்காகவும் வாங்கவில்லை!...அண்ணு! எவரும் வெல்ல முடியாத என் காதலர் விமலாதித்தரை வென்ற வாள் இது!......ஒருவனும் ஒருத்தியும் காதலித்து

வாழ்தல் என்ற வாழையடி வாழையாக வந்த தமிழரின் பண்பாட்டைத் தாயகத்திலே ஆழப் புதைத்து விட்டு, சோழர் புலிக்கொடி எந்தப் புது நாகரிகத்தை அயல் நாடுகளில் பரப்பப்போகிறதோ, அதற்கு இந்த வாள் உபயோகப்பட வேண்டாம். காதலும் வீரமுந்தான் தமிழ் நாகரிகத்தின் இரட்டை நாடிகள் என்றால், காதல் இல்லாத இடத்தில் இந்த வீரவாளும் இருக்க வேண்டாம்!......அகநானூறு இல்லாத இடத்தில் புறநானூறும் இருக்கவேண்டாம்!

[வீரமாதேவியின் விம்மல் ஒலி கேட்கிறது. குந்தவி, வீரமாதேவி அருகில் சென்று, அவளது கண்ணீரைத் துடைக்கிறாள்.]

**குந்தவி :** வீரமாதேவி! கண்ணீரை மறைக்கப் பழகிக் கொள்!...என் அண்ணன் உன் காதலுக்குத் தகுதியானவர்தான்!...ஆனால் கொஞ்சம் மூர்க்கர்; பிடிவாதக்காரர்; ஆனாலும் நல்லவர்! அவரும் ஒரு சக்கிரவர்த்திகள் ஆகும்போது, இராஜீய உறவுகளுக்காக எத்தனையோ இராஜகுலப் பெண்களை மணக்க நேரிடலாம். அப்போதும் அவர் மீது கொண்ட காதலைக் குறைத்து விடாதே!...இது ஒன்றுதான் நான் உன்னிடம் கேட்பதெல்லாம்!

**இராஜராஜன் :** பெற்ற தந்தையிடம் குந்தவி என்ன கேட்கிறாள்? தன் கையாலேயே சுட்டெரிக்கப்படும் சோழ சாம்ராஜ்யத்தின் சுடு சாம்பலைக் கேட்கிறாளா...?

**குந்தவி :** தந்தையிடம் ஒரு மகள் கேட்பதெல்லாம் தனக்குத் தகுதியான கணவனைத் தரவேண்டும் என்பது தான்! தந்தையிடம் அதைப் பெற முடியாத போது அவரிடம் ஓர் அற்பப் பொருளைக்கூடக் கேட்க விரும்ப மாட்டாள் உன் தங்கை என்று சொல், அண்ணா!

[பிறகு, குந்தவி சுற்றிலும் ஒரு முறை எல்லோரையும் பார்க்கிறாள். எல்லோரையும் வணங்கி விட்டு, கலகல வென்று சிரித்துக் கொண்டே' வெளியேறக் கிளம்புகிறாள். இராஜராஜன் அவள் முன் வந்து வழி மறித்துக் கொள்கிறான்.]

**இராஜராஜன் :** குந்தவி ஒரு குடியானவப் பெண்ணைப் போல் உழைத்துப் பிழைக்க முடியும் என்றால் இராஜராஜசோழச் சக்கிரவர்த்திகளும் முடி துறந்து வயல் வரப்புகளில் வேலை செய்து குடியானவனைப் போல ஆனந்தமாக வாழ முடியும்! அது சோழகுலச் சரித்திரத்திற்குப் புதிதுமல்ல!...ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் ஆதிக் கரிகாற்சோழன் உழவனாயிருந்தே அரசன் ஆனான். இந்த இராஜராஜனே அரசனாய்ப் பிறந்து உழவன் ஆவான். அவ்வளவுதான் வித்தியாசம்! இராஜராஜன் அருண்மொழித் தேவனாயிருந்தபோது இந்த அரச பதவியைப் பெரிதென மதித்திருந்தால் உத்தமச் சோழர் சோழமன்ராக முடிசூடியிருக்க முடியாது......

**குந்தவி :** (இராஜேந்திரன் பக்கம் திரும்பி) சக்கிரவர்த்திகள் தம் இராஜதந்திரப் பேச்சை இனியும் பெற்ற மகளிடமே பிரயோகிக்க வேண்டாம் என்று சொல், அண்ணா!......குந்தவி பெண்ணாய்ப் பிறந்து விட்டாளே தவிர, எந்த இராஜதந்திரியையும் விடப் புத்தியில் குறைந்தவளல்ல!...

**இராஜேந்திரன் :** (குந்தவ்வையாரை நோக்கி வந்து) இனியும் என்னால் இதைச் சகிக்க முடியாது. அத்தை... உங்கள் இராஜேந்திரன், சோழநாட்டின் குடியுரிமையை இழப்பதா, விலை மதிப்பற்ற இரத்தினமான தன் தங்கையை இழப்பதா.........என்று சக்கிரவர்த்திகளிடம் கேளுங்கள் அத்தை....!

**குந்தவ்வையார் :** (இராஜராஜனை நோக்கி) இராசராசா......! இன்னுமா உன் மகளின் நிலையை நீ புரிந்து கொள்ளவில்லை?

**இராஜராஜன் :** (பெரும் ஆத்திரத்துடன்) இவள்? இவள் இராஜராஜசோழனின் இரத்தத்தில் பிறந்தவளல்ல......

[அதைக் கேட்ட இராஜேந்திரன் ஆத்திரத்துடன் தன் தங்கையின் கையிலிருந்த உடைவாளைப் பறித்துக் கொண்டு தன் தந்தையின் முன் வருகிறான்.]

**இராஜேந்திரன் :** என் தங்கைக்கும் என் தாயின் இரத்த பரம்பரைக்கும் ஏற்படும் இழிவை நான் துடைக்காமல் விடப் போவதில்லை !

**இராஜராஜன் :** மறுபடியும் சொல்லுகிறேன்...குந்தவியின் உடலில் ஓடுவது இராஜராஜ சோழனின் இரத்தம் அல்ல! உண்மையில் அந்த இரத்தத்தில் பிறந்தவளாயிருந்தால், தன் உரிமைக்காக இந்த அரண்மனையில் இருந்துகொண்டே எவரையும் தன் புத்திசாதுரியத்தால் எதிர்த்துப் போராடுவாளே தவிர, கோழை போல் உரிமையை மறந்து வயல் வரப்புகளுக்கு ஓடமாட்டாள்...

[குந்தவி தன் தந்தையின் முகத்தை நிமிர்ந்து பார்க்கிருள் பிறகு இராஜராஜன் பாதங்களுக்கு அருகே கிடக்கும் இளவரசிக்குரிய முடியை எடுத்துத் தன் தலையில் தரித்துக்கொண்டு இராஜராஜன் முன் எதிர் கட்சிக்காரி போல் கம்பீரமாக நிற்கிருள்.]

**இராஜராஜன் :** (இராஜேந்திரனை நோக்கி) இராஜேந்திரா...சக்கிரவர்த்திகளின் முன்னிலையில் நீ உன் உடைவாளை உயர்த்தியதற்காக உனக்குத் தண்டனை விதித்திருக்க வேண்டும். முதல் முறையாதலால் மன்னித்திருக்கிறேன் !

**இராஜேந்திரன் :** குந்தவியின் மண சம்பந்தம் அல்லது போராட்டம் என்று தூது அனுப்பியிருக்கும் இரட்டபாடி சத்தியாசிரய மன்னனுக்குச் சக்கிரவர்த்திகள் என்ன பதில் அனுப்புவார் என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன் !

**இராஜராஜன் :** குந்தவி யுத்தப்பொருளல்ல! நிபந்தனை விதித்துவரும் எந்த அயல்நாட்டு உடன்படிக்கைக்கும் இராஜராஜன் தலை வணங்கமாட்டான் !

**குந்தவி :** (ஆத்திரத்துடன்) சிறையில் இருக்கும் நிராயுதபாணியான விமலாதித்தரைக் கொன்ருெழிக்கும் விஷயம் ?

**இராஜராஜன் :** அரசியல் காரணமாகச் சிறைப்பட்டவனைச் சிறைக்குள்ளேயே கொன்ருெழிப்பவன், தமிழ் நாட்டுக்குத் தலைமை வகிக்கக் கூடத் தகுதியற்றவன்.

*குந்தவ்வையார் :* அப்படியானால் குந்தவி விமலாதித்தன் திருமண விஷயம் ?

*இராஜராஜன் :* காதலர்களுக்குத் திருமணம் செய்வதா, அல்லது கட்டிய சோழப் பேரரசை இடிப்பதா என்று என் தமக்கையாரே யோசித்து முடிவு சொல்லட்டும்.

[இராஜராஜன் போகிறான்.]

## காட்சி : 36

### பாதாளச் சிறை ;

### அந்தி நேரம்

[விமலாதித்தன் சிந்தனையுடன் உலாவிக்கொண்டிருக்கிறான். குந்தவி வருகிறாள்.]

*விமலாதித்தன் :* குந்தவி ! இங்கே ஏன் வந்தாய் ?

*குந்தவி :* (பரிகாசமாகப் பாடுகிறாள்.)

அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள் தன் நாமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன்தாளே !

*விமலாதித்தன் :* என்ன?

*குந்தவி :* (அவனைச் சுட்டிக் காட்டி) தலைவன் தாளே ...தலைப்பட்டாள் நங்கை...

*விமலாதித்தன் :* குந்தவி ! ஏன் வந்தாய் ?

*குந்தவி :* இன்னும் சிறிது நேரம் போனால் நீ யாரென்று கூடக் கேட்பீர்கள் போலிருக்கிறதே ! நீங்கள் சிறையை விட்டு வெளிப்படவும், நான் முறைப்படி உங்களை மணம் புரியவும் உங்களுக்கு ஓர் உபாயம் சொல்ல வந்தால்...

*விமலாதித்தன் :* உபாயமா?......விதி செல்கிறபடி செல்வதைத் தவிர வேறு வழியென்ன ?

**குந்தவி :** விதியின் கையிலே என் வாழ்க்கையை ஒப்படைக்க நான் விரும்பவில்லை ! நம் மதியால் ஒரு விதியையும் படைப்போம் !

**விமலாதித்தன் :** குந்தவி...?

[குந்தவி மெல்ல விமலாதித்தன் காதினுள் ஏதோ கூறுகிருள். விமலாதித்தன் வியப்புடன் அவளைப் பார்க்கிருன். குந்தவி சிரிக்கிருள்.]

**விமலாதித்தன் :** நீ சொல்வது உண்மைதானு, குந்தவி ?

**குந்தவி :** ஆமாம், அதுதான் வழக்கம்...

**விமலாதித்தன் :** இருந்தாலும், குந்தவி, என்னுல் இதைச் செய்ய முடியாது !

**குந்தவி :** இல்லை ; உங்களால் முடியும் !

**விமலாதித்தன் :** ஆனுல்...

**குந்தவி :** இதைத் தவிர வேறு வழியில்லை ! இதனுல் உங்களுக்கு ஓர் இழுக்கும் ஏற்படப் போவதில்லை. எனக்காக, உங்கள் குந்தவிக்காக நீங்கள் இதைச் செய்யத்தான் வேண்டும் ! இல்லையென்ருல் என்னையே காவேரி அன்னைக்குப் பரிசாகக் கொடுத்து விடுகிறேன்...

**விமலாதித்தன் :** குந்தவி ! என் உயிரே ! நீ சொன்னபடியே செய்வேன். உனக்காக, உன்னையடைவதற்காக, இந்த விலை மதிக்க முடியாத ரத்தினத்தைப் பெறுவதற்காக...

[பாலதேவர் பின்புறமாக வந்து நின்று கள்ளமாகச் சிரிக்கிருர். குந்தவியும் விமலாதித்தனும் திரும்பிப் பார்க்கிருர்கள்.]

**குந்தவி :** (பாலதேவரை நோக்கி) சிரியும் ! நன்ருகச் சிரியும் ! ஏனென்ருல் இனி நீர் சிரிக்கவே முடியாது !

**பாலதேவர் :** ஏன், சிறையிலிருந்து எதிரி சுலபமாகத் தப்பியோட முடியுமென இளவரசியார் நம்புகிருரா?

**விமலாதித்தன் :** (ஆத்திரத்துடன்) குந்தவி...!

**குந்தவி :** (விமலாதித்தனை நோக்கி) நீங்கள் ஏன் ஆத்திரப் படுகிறீர்கள்? கள்ளத் தனமாக வந்த குள்ளநரி ஏதோ ஊளையிடுகிறது! அதற்காகச் சிங்கம் சீறுவதா...? இந்த அரசியல் ஞானி பெண்மையைப் புரிந்து கொண்டிருக்கும் விதம் அப்படி! பாவம்! காதலன் வீரத்தில் களங்கத்தைப் புகுத்தும் பெண்களைத்தான் அவர் பார்த்திருப்பார்!

**பாலதேவர் :** இளவரசி! இளமையின் உணர்ச்சியால் தாங்கள் ஏதேதோ பேசுகிறீர்கள்! உங்கள் நாட்டிற்கே அபாயகரமானவன் விமலாதித்தன். அவன் மீதுள்ள எண்ணத்தைத் தாங்கள் கைவிடுவீர்களானல் சக்கிரவர்த்திகளுக்கு எவ்வளவோ சௌகரியமாயிருக்கும்...

**குந்தவி :** ஐயா, அரசியல் பேரறிஞரே! இளவரசி குந்தவியை இன்னும் நீர் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை, எவர் குறுக்கே நின்றாலும் இவள் எண்ணியதை முடித்தே தீருவாள்!

**பாலதேவர் :** சக்கிரவர்த்திகளின் மனதைக் கண்ணீரால் கரைத்து விட முடியுமென இளவரசியார் எண்ணுகிறார் போலிருக்கிறது!

**குந்தவி :** இல்லை! குந்தவி அழுகையை ஆயுதமாக உபயோகப்படுத்தப் போவதில்லை. அறிவை அறிவால் தான் வெல்லப்போகிறாள். உம்மைப்போல ஆயிரம் இராஜ தந்திரிகளையும் வெகு எளிதாகத்தூக்கி எறிந்து விடும் ஆற்றலும் அறிவும் குந்தவிக்கு உண்டு!

**பாலதேவர் :** இளவரசியார் இந்தப் பாலதேவப் பட்டரையனை அவ்வளவு எளிதாக எண்ணிவிடக் கூடாது,

**குந்தவி :** முதிர்ந்த அறிவாளியே! இங்கே பாரும்! என் உரிமைப்போரில் நான்தான் வெற்றி பெறப் போகிறேன்! அதுவும் எல்லோர் கண் முன்பாக! எவரும் மறுக்க முடியாத முறையில்!

**பாலதேவர் :** இளவரசி!...

குந்தவி; (பாலதேவரை நோக்கி) எப்படி யென்று யோசிக்கிறீரா? அது உமது மூளைக்கு எட்டாது! பின்னால் புரிந்து கொள்ளும்! (விமலாதித்தனை நோக்கி) நான் வரு கிறேன்! நாளை அரச சபையில் மணமாலையோடு உங் களைச் சந்திப்பேன்......

[குந்தவி விரைந்து செல்கிறாள். விமலாதித்தன் சிரிக் கிறான் பாலதேவர் குழம்பி நிற்கிறார்.]

# காட்சி : 37

## தஞ்சையில் பெரிய தெரு;

## பகல் நேரம்

[புலிக்கொடி ஏந்தி ஒருவன் முன் வர, ஒருவன் பறை கொட்டி வருகிறான். தெருவில் செல்லும் மக்கள் பறை அறிவிப்பைக் கவனிக்கிறார்கள். கூட்டத்தில் முத்துப்பல் கவிராயரும் மேதினிராயரும் காணப்படு கிறார்கள்]

**பறைக் கொட்டு :** தென்ன பராக்கிரம ஜெயங் கொண்ட சோழ உடையார் இராசராச தேவர் பிறந்த ஐப்பசித் திங்கள் திருச்சதயத் திருவிழாவை முன்னிட்டு, சிறையிலுள்ள அரசியல் குற்றவாளிகள் விடுதலை செய் யப்படுவார்கள். நாளை அரசவையில் பாவலரும் பாண ரும் வாணரும் வந்து அரசர் புகழ் பாடி, வேண்டும் பரிசுக ளெல்லாம் பெறுவார்களாக...எழுதினான் திருமந்திர ஓலை.

[பறைக் கொட்டு மறைந்ததும், முத்துப்பல் கவிராயரும் மேதினிராயரும் மட்டும் தங்கி நின்று உரையாடுகிறார் கள்.]

**மேதினிராயர் :** எது கேட்டாலும் அரசர் அள்ளி அள்ளிக் கொடுப்பாராமே!

**முத்துப்பல்லர் :** ஆமாம்! அரசர் புகழ்பாடி அரும் பரிசுபெற நீர் ஆலோசனை செய்து வீட்டீரா......?என்ன பரிசு கேட்கலாமென எண்ணுகின்றீர்?

**மேதினிராயர் :** ஓர் எருமை மாடு கேட்கலாம்!

**முத்துப்பல்லர் :** எருமைமாடு எதற்கய்யா? துணைக்கா ? துணைவி கிடைக்கவில்லையென்ற துயரமோ!

**மேதினிராயர் :** இல்லை, ஐயா! பால் தேவைக்குத் தான்! பசுவின் பாலைவிட எருமைப்பால் வலிமை யுடைய தல்லவா...?

**முத்துப்பல்லர் :** ஆமாம்! உமக்கு வலிமை தேவை தான்!

**மேதினிராயர் :** நீர் ஏதாவது வாழ்த்துக் கவிதை கற்பனை செய்து விட்டீரா?

**முத்துப்பல்லர் :** காரிகையின் காதல் கிடைக்காத போது கற்பனை எப்படி ஐயா காலூன்றும்? இங்கே பிதற்று வது வெறும் பிணமையா பிணம்...உயிர் பூங்கோதை யுடன் கலந்து விட்டது!

**மேதினிராயர் :** என்னையா செய்வது? உம்மைக் காதலித்திருந்தால் நான் தியாகமாவது செய்திருப்பேன்! நம்மிருவருக்கு மில்லாமல் யாரோ ஒருவன்...

**முத்துப்பல்லர் :** அவன் எண்ணத்தில் ஆற்று மண்ணை அள்ளிப்போட வேண்டுமையா! இன்று பௌர் ணமி யன்றோ...?

**மேதினிராயர் :** ஆமாம்!

**முத்துப்பல்லர் :** போன பௌர்ணமியன்று தானே அந்தப் புன்மகன் வந்தான்?

**மேதினிராயர் :** ஆமாம்! கவலையுறாதீர். பூங்கோதை யைக் காண இந்தப் பௌர்ணமி யன்றும் பாலதேவர் மாளிகைக்கு அந்தப் பாதகன் வரக்கூடும்!

**முத்துப்பல்லர்:** ஆமையா! நாம் மறைந்திருந்து அந்த மகாபாவியைப் பிடித்துவிடலாம், நல்ல தருணம் பார்த்து நீர் நந்திபோல் வழி மறையும்.

**மேதினிராயர் :** நீர் மந்திபோல் அவன்மேல் தாவி விழுந்து பிடியும்......

**முத்துப்பல்லர் :** ஆகா! சுத்தமான சூழ்ச்சி!

**மேதினிராயர் :** ஆனால் அவனைப் பிடித்து என்னய்யா செய்வது?

**முத்துப்பல்லர் :** அந்த அற்பனுக்கு அறிவு புகட்டுவோம், ஆரணங்குகளைச் சுற்றாதேயென. நள்ளிரவில் நங்கையரை நாடி வராதேயென நையப் புடைப்போம்!

**மேதினிராயர் :** ஒருவேளை பூங்கோதை அந்தப் பயலைக் காதலித்து முடிந்திருந்தால்?

**முத்துப்பல்லர் :** அப்படி இருக்காதையா! அவனும் நம்மைப்போல் நங்கையைச் சுற்றிவரும் சோம்பேறியாகத் தானிருப்பான்! இன்று ஒரு கை கவனித்து விடுவோம். எமக்காக உமது காதலைச் சிறிது விட்டுக் கொடுமையா...

**மேதினிராயர் :** அதனைப் பின்னர் முடிவு செய்வோம். முதலில் பொது எதிரியை ஒழிப்போம்! வாரும்!

[போகிறார்கள்.]

## காட்சி: 38

### தஞ்சை அரண்மனை ;

### உதய நேரம்

['தென்ன பராக்கிரம இராஜசோழ தேவர் வாழ்க!' என்னும் பாணர்களின் வாழ்த்தொலிகள் கேட்கின்றன. இராஜராஜனைப் பின் தொடர்ந்து மதுராந்தகர் வருகிறார்.]

**இராஜராஜன் :** மதுராந்தகரே, என்னவோ சொல்லத் தயங்குகிறீரே. என்ன?

**மதுராந்தகர் :** பெரும் போரொன்று நம் தலைவாசலில் காத்திருக்கிறது! இரட்டபாடி சத்தியாசிரயனும் கங்கை மன்னர்களும் நம் சோழப் பேரரசை விழுங்க எந்த நேரமும் படையெடுத்து வரலாம். இந்த நிலையில் வேங்கி நாட்டில் விமலாதித்தனை வேந்தனாக்கும்படி மக்கள் புரட்சி செய்கிறார்கள். அவ் வட எல்லையில் மூளும் புரட்சித் தீ, வைக்கோற் போரில் பற்றிய நெருப்புப்போல்

நம் நாட்டை நோக்கி வருகிறது. இந்தச் சமயத்தில் விமலா தித்தனுக்கும் குந்தவி நாச்சியாருக்கும் திருமணம் முடித்து வேங்கியை நம் நேச நாடாக ஆக்கிக்கொள்வதுதான் சரியான அரசியல் தந்திரமாகும்...

***இராஜராஜன் :*** *நல்ல சமயம் பார்த்தீர். இதைச் சொல்ல! நாடே என் பிறந்த தினச் சதய விழாவைக் கொண்டாடும் உற்சாகத்தில் மூழ்கியிருக்கிறது! பாவலர்கள் என் புகழ்மாலை பாடிப் பரிசில்கள் பெறக் காத்திருக்கும் இந்தச் சமயத்தில் நீர் இந்தச் செய்தியைத்தான் சொல்லவேண்டுமா ?*

[இராஜராஜன் அலட்சியமாய்ச் சிரித்துக்கொண்டே செல்கிறான்.]

# காட்சி : 39

## தஞ்சை அரண்மனையில் ஓலோக்க மண்டபம்; காலை நேரம்

[அரசவை முழுவதும் வெள்ளணி விழாவிற்காக நன்கு அலங்கரிக்கப்பட்டுள்ளது உடன் கூட்டத்து அதிகாரிகளும், குறுநில மன்னர்களும் அரசவையில் நிறைந்திருக்கிறார்கள். இராஜராஜன் அரியணையில் செங்கோல் ஏந்தியவண்ணம் அமர்ந்திருக்கிறான். பாலதேவர், மதுராந்தகர், இராஜேந்திரன் ஆகியவர்களும் அரசவையில் உள்ளனர். 'இராஜராஜ சோழர் வாழ்க! தமிழ் வாழ்க!' என்னும் வாழ்த்தொலிகள் அரசவை முழுவதும் எதிரொலிக்கின்றன.]

***விடை அதிகாரி :*** *பாவலரும், நாவலரும் மன்னர் மன்னர் புகழ்பாடிப் பரிசு பெறலாம்...*

[ஒருவர் பின் ஒருவராகச் சில புலவர்கள் வந்து இராஜராஜன் புகழ்பாடிப் பரிசுபெற்றுச் செல்லுகிறார்கள் கடைசியில் விமலாதித்தன் வருகிறான். அவையினர் வியப்புடன் அவனை நோக்குகின்றனர்.]

***அவையில் பலர் :*** *(திகைப்புடன்) விமலாதித்தர்! வேங்கி மன்னரா...?*

**இராஜராஜன் :** யார் விமலாதித்தனா?

**இராஜேந்திரன் :** (எழுந்து வணங்கி) சக்கிரவர்த்திகள் கட்டளைப்படி விமலாதித்தனும் சிறைவிடப்பட்டிருக்கிறான்.

**இராஜராஜன் :** விமலாதித்தனையா? என் கட்டளையா?

**இராஜேந்திரன் :** சக்கிரவர்த்திகளின் பிறந்தநாளான சதயவெள்ளணி விழாவை முன்னிட்டுச் சிறையில் உள்ள அரசியல் குற்றவாளிகள் அனைவரும் விடுதலை செய்யப்பட வேண்டும் என்பது சக்கிரவர்த்திகளின் கட்டளை!

**இராஜராஜன் :** ஓகோ!...பாராளவேண்டிய விமலாதித்தன் பாடிப்பிழைக்கும் கவிஞனாகிவிட்டானா?

**விமலாதித்தன் :** பாராளும் வேந்தர்களையும் தன் பாடல்களிலே வாழவைப்பவன் கவிஞன்! நிகழ்காலத்தை ஆளும் நெடுநில மன்னர்களைவிட, எதிர்காலத்தின் எண்ணங்களையும் ஆளும் கவிஞனே உயர்ந்தவன்!

[விமலாதித்தன் அற்புதமான கவிதையொன்று பாடுகிறான்.]

[விமலாதித்தன் பாடல் முடிகிறது.]

**இராஜராஜன் :** ஆகா! உயிர் ததும்பும் ஒப்புயர்வற்ற கவிதை! விமலாதித்தா! பாவலனுக்குப் பரிசு கொடுக்கும் பார்த்திபன் என்ற முறையில் கேட்கிறேன், உனக்கு என்ன பரிசு வேண்டும்?

**விமலாதித்தன் :** என்ன பரிசா? என் நாட்டின்... சுதந்திரத்தைப் பரிசு கேட்பேன் என்று நினைக்காதீர்! அது என் பிறப்புரிமை. இப்போது எனக்குரிய பரிசு...

[அரசவை நெடுகிலும் ஓர் அதிர்ச்சி]

**இராஜராஜன் :** (ஆத்திரமாக) என்ன பரிசு...?

**விமலாதித்தன் :** உண்மையில் மாறாது பரிசளிக்கும் மன்னர் மன்னவன் என்றால், உம் மகளையே என் பாடலுக்குப் பரிசாகக் கொடும்!

[அரசவையினர் திடுக்கிடுகின்றனர்.]

**பாலதேவர் :** (ஏளனமாக) நல்ல பரிசு !

**இராஜராஜன் :** அரசியல் காரணமாக அருமை மகளை உனக்குப் பரிசு தர இசையேன் !

**இராஜேந்திரன் :** சக்கிரவர்த்திகளே, தம் புகழ் பாடிவரும் பரிசலருக்கும் பாவலருக்கும் அவர்கள் விரும்பும் பரிசைக் கொடுப்பதுதான் நம் குலத்தில் பரம்பரை வழியாக வந்த வழக்கம்.

**மதுராந்தகர் :** ஆம்! மன்னர் பெருமானே! அதுவே தமிழர் குலப் பண்பு !

**பாலதேவர் :** அரசகுமாரியைப் பரிசுப்பொருளாக்கி விட்டார், புத்திசாலி !

**இராஜராஜன் :** விமலாதித்தா ! நீ கேட்கும் பரிசும் விநோதம் ! அதை நான் பரிசு கொடுத்தால் இன்னும் விநோதம்! இராஜதந்திரிகள் எள்ளி நகையாடுவார்கள் !

**விமலாதித்தன் :** இதிலென்ன விநோதம் ? இராஜ ராஜ சோழரே ! பட்டினப்பாலை பாடிய பாவலருக்குப் பதினாயிரம் பொன் பரிசளித்தான் கரிகாலன். அவன் வம்சத்தில் வந்தவர் நீர் ! மாரி ஓயினும் பாரி உள்ளான் என்று மகிழ்ந்தது தமிழ்நாடு. அந் நாட்டில் பிறந்தவர் நீர் ! பல்காதமுள்ள முக்தியைக் கௌதமருக்குப் பரிசளித் தான் பல்யானை செல்கெழு குட்டுவன். கபிலர் என்னும் புலவருக்கு நன்றுமலையில் ஏறி நின்று கண்ணுக்கெட்டிய நாடெலாம் கொடுத்தான் செல்வக் கடுங்கோ வாழியா தான். பெரும் பரிசில் பெற வந்த அரிசில்கிழாருக்குத் தன் அரியணையையே அன்புடன் அளித்தான் பெருஞ்சேரல் இரும்பொறை. போரில் வென்ற அப்பொறையனையும் பொய்கையார் பாடிய களவழி நாற்பதிற்காகச் சிறை விட்டான் சோழன் செங்கணன் ! இன்னுங் கேளும்! ஔவைக்கு ஆயிரம் ஆண்டு ஜீவித்திருக்கும் நெல்லிக் கனியைக் கொடுத்தான் அதிகன் ! மனைவியின் மாங்கல்யம் தவிர மற்றதெல்லாம் கொடையீந்தான் ஆய்நாட்டு அண்டிரையன். ஆளும் தன் நாடு அனைத் தையும் பரிசிலருக்குப் பகிர்ந்தளித்தான் ஆதன் என்னும்

ஓரி. பாவலர் யார் வரினும் பாத்திரமறியாமலே பரிசு பயந்தான் காரி. முல்லைக்குத் தேரும் முதுபரிசிலருக்கு முந்நூறு ஊரும் கொடுத்தான் பாரி. பெருஞ்சித்திரனுருக்கு யானையும், பெருந்தலைச் சாத்தனருக்குத் தன் தலையையும் தந்தான் குமணன். தாகமெடுத்துத் தவித்த ஒருவனுக்குத் தன் இரத்தத்தையே குடிக்கக் கொடுத்தான் ஒரு தமிழ் வேந்தன்...!

**இராஜராஜன்:** பகைவனுக்குக் கொடுத்தான், தான் பெற்ற செல்வத்தை இராஜராஜ சோழன்...விமலாதித்தா, ஏற்றுக்கொள் என் தவப்புதல்வி குந்தவியை என் பரிசாக! உங்களிருவர் திருமணத்தையும் கண்டு களிக்கிறேன் என் கண்களால்.

**இராஜேந்திரன் :** பிறகு மந்திராலோசனை சபையில் மனம் மாறிவிட மாட்டீர்களே?

**இராஜராஜன் :** வானம் பொய்ப்பதுண்டு! மன்னவன் வாக்குப் பொய்ப்பதில்லை. கரிகாற்சோழனும் காகந்தனும் பிடித்த செங்கோலையே நானும் பிடித்திருக்கிறேன்!

**பாலதேவர் :** இதென்ன...? இராஜதந்திரத்தையும் மறந்து...?

**இராஜராஜன் :** இராஜதந்திரத்திற்காக என் இராஜ தர்மத்தைக் கைவிடமுடியாது! தமிழ்நாட்டுச் சரித்திரத்தில் வழி வழி வந்த வழக்கம் இது! புலவருக்குக் கொடுக்க இருப்பதே இப் புரவலர் கை...!

[புன்னகை முகத்துடன் குந்தவியும், வீரமாதேவியும், குந்தவ்வையாரும் வருகிறார்கள்.]

**இராஜராஜன் :** (விமலாதித்தனை நோக்கி) விமலாதித்தா! எங்கள் தமிழ்நாட்டுப் பழைய சரித்திரத்தின் பரிசுப் பட்டியல் உனக்கு எப்படிக் கிடைத்தது?

**விமலாதித்தன் :** உங்கள் மகள் குந்தவிதான் சொல்லிக்கொடுத்தாள்!

**இராஜராஜன் :** என் குந்தவி என் இராஜதந்திரத்தை என் இராஜதர்மத்தாலேயே வென்றுவிட்டாள்!

**பாலதேவர் :** சக்கிரவர்த்திகளே! குந்தவியையும் விமலாதித்தனையும் மணக்கோலத்தில் காண்பீர்கள்! மகிழ்ச்சிக்குரிய காட்சிதான். ஆனால் இதன் பின் விளையக் கூடிய நிகழ்ச்சி...?

**இராஜராஜன் :** தெரியும்! இரட்டபாடி சத்தியாசிரயன் குமாரனுக்கு நம் குந்தவியை மணம் புரிவிக்க மறுத்துவிட்டு வேங்கி விமலாதித்தனுக்கு மணம் முடிக்கிறோம். இரட்டபாடி மன்னன் நம் மீது படையெடுத்து வருவான். அவ்வளவுதானே?

**பாலதேவர் :** கங்கை மன்னர்களின் துணை பலத்தோடு வருவான்! வேங்கி நாட்டைச் சூறையாடிவிட்டு உங்கள் வேங்கட எல்லையைக் கைப்பற்றி உங்கள் சோழப் பேரரசைச் சிதைக்க முயல்வான்!

**இராஜராஜன் :** எங்கள் வேங்கட எல்லையை வெறும் இராஜதந்திரத்தினால் மட்டும் இப்போதைக்குக் காப்பாற்றிவிட நான் நினைக்கவில்லை!

**பாலதேவர் :** இமயத்தின் வலிமை சான்ற கங்கை. மன்னர்கள் உங்கள் தமிழ்நாட்டின் மீது பாய்வார்கள்! தாயகம் மிதிபடும்போது, இலங்கை என்றும் கடாரம் என்றும் சாவகம் என்றும் கடல் கடந்து சென்ற நாடுகளிலே உங்கள் தமிழ் வணிகர்களுக்கு என்ன மதிப்பு இருக்கும்? மறுபடியும் உங்கள் அடிப்படை இலட்சியங்களை நினைத்துப்பாருங்கள்!

**இராஜராஜன் :** (கம்பீரச் சிரிப்புடன்) உரிமையை வேங்கடம் இழக்கலாம்! உறவை இமயம் உதறலாம். தமிழர் வாணிபம் கடலுக்கு அப்பாலிருந்து உதைந்து தள்ளப்படலாம். ஆனால்......எங்கெல்லாம் எங்கள் கொள்கைகள் உதறப்படுகிறதோ, அங்கெல்லாம் சோழப் பேரரசு திக்விஜயம் புறப்படும்! அங்கெல்லாம் எங்கள் புலிக்கொடியைப் பறக்கவிடுவான் என் வெற்றித் திருமகன் வீர ராஜேந்திரன்!

**பாலதேவர் :** உங்கள் காவிரி வள நாட்டின் மீது என்றாவது கங்கை வெள்ளம் பாய்வது நிச்சயம்!

**இராஜேந்திரன் :** (உணர்ச்சி வசமாகித் தன் உடை வாளை உருவி உயர்த்திப் பிடித்து) அதற்கு முன் நானே கங்கை மீது படையெடுப்பேன்! கங்கையும் கடாரமும் தாண்டி எங்கள் சோழகுலப் புலிக்கொடியைப் பறக்க விடுவேன்! கங்கை வெள்ளம் பொங்கி வரும் முன்பே கங்கை மன்னர்களை வென்று அவர்கள் தலை மீது கங்கை நீரைக் குடம் குடமாய் கொண்டுவரச் செய்வேன். பொட்டலான ஓரிடத்தில் சோழ கங்கம் ஏரியை வெட்டி அதில் கங்கை நீரைக் கொட்டச்செய்வேன். கங்கை கொண்ட சோழபுரம் என்று அதற்குப் பெயரிட்டு அந் நகரையே என் காலத்தில் எங்கள் சோழ சாம்ராஜ்யத்தின் தலைநகராக்கிக் கொள்வேன். இது புகழ்பெற்ற இராஜ ராஜ சோழர் மகன் இராஜேந்திரன் செய்யும் சபதம்!

[உள்ளே இரைச்சல் கேட்கிறது மாறுவேடமணிந்த இரட்டபாடி ஒற்றனை முத்துப்பல் கவிராயரும் மேதினி ராயரும் பிடித்து வருகிறார்கள். எல்லோரும் அவர்களைப் பார்த்துத் திகைக்கிறார்கள். பூங்கோதையும் வந்து சக்கிரவர்த்திகளை வணங்கி நிற்கிறாள்.]

**முத்துப்பல்லர் :** மன்னர் பெருமானே, சதி ] மாபெரும் சதி!!

**மேதினிராயர் :** சோழப் பேரரசுக்கே பேரபாயம்! இவன் எதிரிநாட்டு ஒற்றன்!

**முத்துப்பல்லர் :** பயங்கரமான சதி ஓலைகள் இந்தப் பாவியிடம் இருக்கின்றன! படித்துப் பாருங்கள்!

[மதுராந்தகர் இரண்டு ஓலைகளையும் பார்த்துவிட்டுப் பதறுகிறார்.]

**மதுராந்தகர் :** மகத்தான சதி! சோழ சாம்ராஜ்யத்தையே சிதைத்தெறிய முயலும் சதி! ஆண்டவன் அருளால் இந்த ஒற்றர் மட்டும் கவிராயர் கையில் அகப்படாமலிருந்தால், நயவஞ்சகர்களின் சூழ்ச்சி கடைசிவரை நிறைவேறியிருக்கும்! நான் அப்போதே சந்தேகித்தேன்; எத்தனையோ தடவை எச்சரித்தேன்; ஆனால் நிரூபித்துக்காட்டச் சான்று கிடைக்காமல் வகையற்றுக் கிடந்தேன். இப்போது கைப்பட எழுதிய சதி ஓலைகள்!...(காவல் வீரர்களை நோக்கி) பிடியுங்கள் அந்தப் பதிதன் பாலதேவனை!

[வீரர்கள் பாலதேவனை நெருங்க, இராஜராஜன் கையமர்த்தித் தடுக்கிறான். பாலதேவர் விழிக்கிறார்.]

**மதுராந்தகர் :** (இராஜராஜனை நோக்கி) சக்கிரவர்த்திகளின் நம்பிக்கைக்குரிய இந்தப் பாலதேவப் பட்டரையர் யார் தெரியுமா ?... இந்த ஓலைகள் என்ன தெரியுமா ?

**இராஜராஜன் :** (சிரிப்புடன்) தெரியும் ! இவர் இரட்டபாடி நாட்டில் பிறந்தவர். நம் பகைவன் சத்தியாசிரயனுக்கு இவர் ஒற்றர் ! உதட்டில் நட்பும், உள்ளத்தில் பகையும் உள்ளவர் ! உறவாடியே நம்மைக் கெடுக்க முயன்றவர் ! அந்த இரண்டு ஓலைகளும் உளவு ஓலைகள் ! (பாலதேவரை நோக்கி) பாலதேவரே ! என்ன செய்வது? எதிர்பாராத விதமாக உமது வேஷம் கலைக்கப்பட்டு விட்டது ! இன்னும் சில காலம் உமது இராஜதந்திரத் திருவிளையாடல்களைக் காண எண்ணியிருந்தேன் ! அதற்குள் எதிர்பாராத விதமாக அகப்பட்டுக் கொண்டீர்...

**அனைவரும் :** (திடுக்கிட்டு) ஆ...!

**முத்துப்பல்லர், மேதினிராயர் :** (ஏககாலத்தில்) இந்த இரகசிய ஓலைகளை நாங்கள் கண்டுபிடித்த விதம்...

**இராஜராஜன் :** (புன்சிரிப்புடன்) அதுவும் எனக்குத் தெரியும். என் நம்பிக்கைக்குப் பாத்திரமான இவர் மாளிகையிலே ஒவ்வொரு பௌர்ணமியின்போதும் இரகசியமாக ஓர் அந்நிய ஒற்றன் வந்துபோய்க்கொண்டிருந்தான். துரதிர்ஷ்டவசமாக அந்த ஒற்றன் இன்று கவிராயர் கையில் சிக்கிவிட்டான்.

[இராஜேந்திரன் ஆத்திரத்துடன் தன் உடைவாளை உருவிப் பாலதேவரை நோக்கிப் பாய முயல்கிறான். ஆனால் இராஜராஜன் புன்சிரிப்புடன் கை சமிக்ஞை காட்டித் தடுக்கவே, உருவிய வாளைத் தன் உறைக்குள் ஆத்திரத்துடன் சொருகுகிறான் இராஜேந்திரன்.]

**இராஜேந்திரன் :** (பாலதேவரை நோக்கி) நம்பிக்கைத் துரோகி !

**இராஜராஜன் :** (புன் சிரிப்புடன்) ஆனால் எனக்கு நம்பிக்கைத் துரோகம் செய்தாரே தவிர, இவருடைய சொந்த நாடான இரட்டபாடிக்குத் துரோகம் செய்ய வில்லை. எவ்வளவு அபாயகரமான நிலையில் தனியொருவ ராக நம் மத்தியில் இருந்திருக்கிறார். நாம் நாட்டுப்பற்றை மதிப்பவர்களாயிருந்தால் இவருக்குத்தான் முதலாவது பரிசு கொடுத்தனுப்ப வேண்டும்!

**இராஜேந்திரன் :** நம்முடைய இந்தப் பெருந்தன்மை யினால்தான் எவரும் தமிழருக்கு வெகு சுலபமாகப் பகை வராகி விடுகிறார்கள்!

**இராஜராஜன் :** வெகு சுலபமாகப் பகைவராகிற வர்கள் வெகு சுலபமாகவே அழிந்தும் போகிறார்கள்! எத்தனையோ ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் எத்த னையோ வல்லரசுகளும் வம்சங்களும் நாகரிகங்களும் தோன்றி அழிந்துபோயுங்கூட நம் தமிழர் நாகரிகம் மட்டும் என்றென்றுமே அழியாமல் இருந்து வருவதற்குக் காரணம் என்னவென்று நினைக்கிறாய்?

**மதுராந்தகர் :** சக்கிரவர்த்திகள் இந்த இரண்டு ஓலைகளிலும் உள்ள இரகசியங்களை அறிந்தால்...? ஒன்று நம் பகைவன் இரட்டபாடி சத்தியாசிரயன் நம் மீது படை யெடுத்து வர நாட்குறித்து இவருக்கு இரகசியமாக எழுதிய ஓலை. இன்னொன்று...இவர் அவனுக்கு எழு தியது...நம்முடைய போர்வீரர்களின் எண்ணிக்கை யையும் நம் கோட்டை மதிள்களின் சுற்றளவுகளையும், நம் பொருளாதார நிலையையும், நம்முடைய உணவுச் சேமிப்பு முறைகளையும், இவர் இரகசியமாக உளவறிந்து புள்ளி களுடன் அவனுக்கு எழுதியிருக்கிறார்...

**இராஜராஜன் :** அந்த இரண்டு உளவு ஓலைகளையும் இவர் கையிலே இராஜராஜ சோழனின் பரிசுகளாகக் கொடுத்து இவரைப் பத்திரமாகப் பகைவன் நாட்டிற்கு அனுப்பிவிடும்.

**மதுராந்தகர் :** (திடுக்கிட்டு) என்ன...?

**இராஜராஜன் :** (சிறிதும் நிதானம் தவருமல் புன் சிரிப்புடன்) ஆமாம்! இவரிடமே ஓலைகளைக் கொடுத் தனுப்பும்! நம்முடைய தமிழ்நாட்டின் பாதுகாப்பு, போர் வீரர்களின் எண்ணிக்கையிலோ, கோட்டை மதில்களின் சுற்றளவுகளிலோ, பொருளாதார நிலையிலோ, உணவுச் சேமிப்பு முறையிலோ இல்லை, அது நம் தமிழ் மக்களின் நெஞ்சங்களில்தான் இருக்கிறது... நம்முடைய சக்திகளை யெல்லாம் வெளிப்படையாகக் காட்டிக்கொண்டே எதிர்ப் பதுதான் வாழையடி வாழையாக நம் தமிழர் இரத்தத்தில் ஊறி வந்திருக்கும் பண்பே தவிர, மறைந்து நின்று கொல் வதோ குயுக்தியான முறையில் வெல்வதோ நம் தமிழருக் குத் தெரியாது!

**மதுராந்தகர் :** (இராஜராஜனை நோக்கி) நம்பிக் கைத் துரோகி என்று தெரிந்துகொண்டே இத்தனை கால மும் அந்த இராஜதந்திரியின் ஆலோசனைப்படி சக்கிர வர்த்திகள் ஆடி வந்த இராஜதந்திரம் எனக்குப் பிடிபட வில்லை......

**இராஜராஜன் :** முள்ளைக் கொண்டே முள்ளை எடுக்க விரும்பினேன்! எந்தச் சூழ்ச்சியின் மூலம் இரட்ட பாடி மன்னன் நம் சோழப் பேரரசை விழுங்க முயல் வான் என்பதையும், விமலாதித்தன் குந்தவி திரு மணத்தை அவன் தடுக்க விரும்புவதின் மூலம், வேங்கிக் கும் சோழத்திற்கும் உள்ள புதிய இணைப்பு எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதையும் பரிசோதிக்க விரும்பினேன்!

**மதுராந்தகர் :** சக்கிரவர்த்திகளை நாங்கள் வேறு விதமாக......

**இராஜராஜன் :** (சிரிப்புடன்) அரசியல் சூதாட்டத் தில் அன்னியன் ஒருவனுல் ஆடிவிளையாடப்படும் ஒரு சொக்கட்டான் காய்தான் இராஜராஜன் என்று எல் லோரும் நினைத்துவிட்டீர்கள், பெற்ற மகன் அவ்வாறு என்னை நினைத்தது கூடப் பெரிதல்ல! மகாப் புத்திசாலி

யான விமலாதித்தன் கூட அவ்வாறே நினைத்துவிட்டான்! ஆனால், இவ்வளவு பெரிய சோழப் பேரரசை உண்டாக்கி, கங்கை கடாரத்திற்கு அப்பாலும் கூடத் தமிழர் நாகரிகத்தைப் பரப்பத் திட்டம் தீட்டும் மாபெரும் மன்னன், பிறன் ஒருவன் பேச்சைக் கேட்டு ஆடும் ஒரு பொம்மையாக இருப்பானு என்றுதான் மதியமைச்சர்களெல்லாம் யோசிக்கத் தவறிவிட்டார்கள்!

**குந்தவ்வையார் :** இராசராசா! உன் அரசியல் தந்திரத்தைப் பரிசோதித்ததோடு அநியாயமாய் நம் குழந்தைகளையும் சோதனைக்கு ஆளாக்கிவிட்டாய்!

**விமலாதித்தன் :** சக்கிரவர்த்திகள் என்னைச் சோதித்த காரணம்?

**இராஜராஜன் :** எங்கள் சோழப் பேரரசிற்கு வேங்கி நாடு ஒரு வாசல் போல் விளங்குகிறதென்றால், அயல் நாட்டு மன்னன் அந்நியப் படையெடுப்புகளிலிருந்து தன் வாசலைப் பாதுகாக்க மிகவும் சுதந்திரப் பற்றுள்ளவனய் இருக்கவேண்டும் என விரும்பினேன். சுதந்திரத்திற்காகக் காதலையும் பொருட்படுத்தாத வீர உள்ளம் உனக்கு இருக்கிறதா என்று சோதித்தேன். சோதனைக்காக நடைபெறும் போரில் வீண் உயிர்ச் சேதம் ஏற்படக் கூடாதென்பதற்காகத்தான் வேண்டுமென்றே ஒரு பொய்யைச் சொல்லி உன்னைத் தனியே வாட்போர் புரியச் செய்தேன்,

**விமலாதித்தன்:** அப்படியானல் பாசறையில் அன்று துறவியாக வந்து என்னைக் கண்டது...

**இராஜராஜன் :** நானேதான்!

**விமலாதித்தன் :** குந்தவியைச் சோதனைக்கு ஆளாக்கிய காரணம்?

**இராஜராஜன்** : வேங்கி குலத்திற்கும் சோழ குலத்திற்கும் நெருங்கிய மண சம்பந்தம் ஏற்பட வேண்டுமென்றால், வேங்கிநாட்டு வேந்தனை என் இஷ்டப்படியெல்லாம் என் குந்தவி ஆட்டி விளையாட வேண்டுமென்றால், உங்க

விருவருக்கும் ஆழ்ந்த காதல் இருக்கிறதா என்று சோதித்தேன்! எதையும் சாதிக்கக் கூடிய திடசித்தம் என் குந்தவிக்கு இருக்கிறதா என்றும் சோதித்தேன்.

**இராஜேந்திரன் :** (சிரிப்புடன்) பெற்ற மகனைப் பரிசோதிக்க வேண்டிய காரணம்...?

**இராஜராஜன் :** என் மாபெரும் சோழப் பேரரசிற்கு வருங்கால மன்னனாய் விளங்கக் கூடியவன், நட்பு, காதல், தங்கை பாசம் என்ற உணர்ச்சிகளில் முன்னும் தேச நலனைக் கைவிடாதவனாயிருக்க வேண்டும் எனப் பாடம் கற்பித்தேன்,

**வீரமாதேவி :** பேதைப் பெண்ணான என்னைச் சக்கிரவாத்திகள்......?

**இராஜராஜன் :** அமைச்சரின் தங்கை வீரமாதேவி அரசகுமாரனைக் காதலிப்பது வெறும் அரசபோகத்திலுள்ள மயக்கமா அல்லது வீரக்காதலா என்று சோதித்தேன். பெண்டுகளாலே ஆட்டிப் படைக்கப்பட்டு வரும் இந்தச் சோழ பரம்பரையில் நான் பெற்ற மகனும் பெண்ணொருத்தியாலே ஆட்டப்படவேண்டும் என்றால், அந்தப் பெண் தன் தேசநலனுக்காக எதையும் தியாகம் செய்யக் கூடியவளா யிருக்கவேண்டுமென்று சோதித்தேன்.

**குந்தவ்வையார் :** இராசராசா! எல்லோரையும் விட என்னையே அதிகம் சோதித்துவிட்டாய். அக்கையாரின் அறிவினால்தான் இராசராசன் அரசாள்கிறான் என்று ஊரெல்லாம் பேசும்போது குந்தவி திருமண விசயத்தின் ஒரு முக்கியமான கட்டத்தில் என்னையே முடிவு சொல்லும் படி கூறி என்னையும் சோதித்து விட்டாய்!

[அனைவரும் சிரிக்கிறார்கள்.]

**மேதினிராயர் :** எங்களுக்கும் இது ஒரு பெரிய சோதனையாகப் போயிற்று, மன்னர் மன்னவா! நாங்கள் அந்த ஒற்றனைப் பிடித்த விதம்......

**முத்துப்பல்லர் :** எதிர்பாராத விதம்!

**மேதினிராயர் :** பூங்கோதையின் காதலுக்காக அவனைப் பிடிக்கப்போனோம். காதல் ஓலைகளுக்குப் பதில் சதியோலைகளோடு சிக்கினான் கயவன்.

**முத்துப்பல்லர் :** புவிமன்னர் பூங்கோதையை மன்னிக்க வேண்டும்! அறியாமையால் அந்நியன் அழகில் மயங்கினள் போலும் ஆரணங்கு!

**இராஜராஜன் :** அல்ல; நீங்களும் ஏமாறினீர்கள்! பூங்கோதை அவனைப் பின்பற்றியது காதலுக்காக அன்று. அவன் நடவடிக்கைகளைக் கண்காணிப்பதற்குத்தான். (பூங்கோதையை நோக்கி) பூங்கோதை! வீட்டுப் பணியாற்றும் பெண்கள் நாட்டுப்பணியிலும் வெற்றி பெறுவர் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறாய்! உன்னிடம் நான் கொடுத்த பொறுப்பை இறுதி வரையில் ஒருவருக்கும் தெரியாமல் நிறைவேற்றினாய்!

**பூங்கோதை :** (வணங்கி) என் பாக்கியம்!

[பாலதேவரின் முகத்தில் தோல்விக்குறி படர்கிறது. எதையோ தேடுபவர் போல் சுற்றுமுற்றும் பார்க்கிறார் அவரை நோக்கி இராஜராஜன் சிரிக்கிறான்.]

**இராஜராஜன் :** பாலதேவப் பட்டரையரே! என்ன யோசிக்கிறீர்? இராஜராஜன் தன் அந்திய காலத்து அரசியல் வாழ்வை ஒரு நாடகமாகவே நடித்து விட்டானே என்று சிந்திக்கிறீரா...? இப்போது உமது கண்கள் எதைத் தேடுகின்றன என்பதும் எனக்கும் தெரியும்......

[இராஜராஜன் இதுவரை மறைத்து வைத்திருந்த ஒரு குத்துவாளை எடுத்து பாலதேவரின் கையில் கொடுக்கிறான்.]

**இராஜராஜன் :** இதோ,......உம் இரட்டபாடி மன்னனின் இலச்சினை பொறித்த உம்குத்துவாள்.(பாலதேவரை நோக்கிப் புன்சிரிப்புடன்)உம்முடைய குத்துவாளால் என்னைக் குத்திக் கொன்றுவிட மாட்டீர்!...உம்மைப் போன்ற அறிவாளிகளின் குணாதிசயங்கள் எனக்குத் தெரியும்...! நீர் மனித சமுதாயத்தின் இலட்சியங்களைக் கொல்வீரே

தவிர, தனி மனிதனைக் கொல்லமாட்டார்! மாபெரும் அறிவையும் மிருகபலத்தையும் துஷ்பிரயோகப் படுத்துபவர்கள் படுதோல்வி அடையும்போது தற்கொலை செய்து கொள்வதுதான் வழக்கம்...! குயுக்திக்காரர்கள் கடைசியில் என்ன முடிவை அடைவார்களோ அதையே நீரும் அடைய விரும்புகிறீர்......ஆனால், சிரிக்கப் பழகிய இந்தப் புது மணமக்கள் முன் உம்முடைய கோரமான தற்கொலை நாடகம் அரங்கேற வேண்டாம்......துரோகியின் உதட்டிலும் சிரிப்பை எதிர்பார்க்கும் இன்ப நேரம் இது...

[இராஜராஜன் சமிக்ஞை செய்யவே பாலதேவரின் கையில் இரண்டு ஓலைகளையும் மதுராந்தகர் கொடுக்கிறார். பாலதேவர் நிமிர்ந்து இராஜராஜன் முகத்தை நோக்குகிறார். புன் முறுவல் செய்கிறார்;இராஜராஜனின் காலடிகளில் இரண்டு உளவு ஓலைகளையும் போட்டு விட்டுக் குத்துவாளைத் தம் மார்புக்கு நேரே பிடித்துக் கொண்டபடி வெளியேறுகிறார். ஈட்டி வீரர்கள் பின் தொடருகின்றனர். ஒற்றனையும் இழுத்துக் கொண்டு செல்கின்றனர்.]

**இராஜராஜன் :** (புன்சிரிப்புடன் இராஜேந்திரனை நோக்கி) இராஜேந்திரா! கங்கையும் கடாரமும் தாண்டி உபயோகப்படுத்த வேண்டிய உன் வீரவாளைக் கையாலாகாத ஒருவனிடம் உன் கையாலே உபயோகப்படுத்த விரும்பினாய், அவ்வாறு உன் உணர்ச்சி தூண்டியது...! ஆனால் என் அறிவைப் பார்......கெடுமதியாளன் தன் கையாலே, தன் குத்துவாளாலேயே, தற்கொலை செய்து கொள்ளப் போகிறான்!

[இராஜராஜன் குந்தவியை நோக்குகிறான்.]

**இராஜராஜன் :** (குந்தவியை நோக்கி) குந்தவி நாச்சியார் இன்னும் ஏன் தன் திருவாயைத் திறக்கவில்லை?

**குந்தவி :** (வெடுக்கென்று) சக்கிரவர்த்திகள் என் வாயைத் திறந்தால் மறுபடி அதை மூட ஒரு கணவர் வந்துவிட்டார் என்கிற தைரியமோ?

**இராஜராஜன் :** (பரிகாசமாக) இளவரசி குந்தவி நாச்சியாரே...

**குந்தவி :** (சிரிப்புடன்) இனி நான் இளவரசி அல்ல! வேங்கிநாட்டு மகாராணியாகப் போகிறவள் என்பதைச் சோழ நாட்டு மன்னருக்கு நினைவுபடுத்து கிறேன்!...

**இராஜராஜன் :** குந்தவி, மறுபடி ஆரம்பித்துவிட் டாயா உன் வழக்கத்தை...

**குந்தவி :** பெண்களின் பேச்சுரிமையை அடக்க எந்த அரசியல் தலைவருக்கும் அதிகாரமில்லை. அது சோழ நாட்டுச் சக்கிரவர்த்திகளாயிருந்தாலும் சரி. (விமலாதித் தனைக் கடைக் கண்ணால் கவனித்துக்கொண்டே) வேங்கி நாட்டு வேந்தராயிருந்தாலும் சரி...

**இராஜராஜன் :** குந்தவி! எந்த மாபெரும் இராஜ தந்திரியின் திடசித்தத்தையும் வெல்லக்கூடிய இராஜராஜனாலும் வெல்லமுடியாத ஒரு திடசித்தம் உண்டென்றால், அது உன் ஒருத்தியிடந்தான் உண்டு! அன்றொரு நாள் இராச்சியத்தைவிட்டுக் குடியான வப் பெண்ணாய் வெளியேறிவிடுவதாகப் பயமுறுத்தி னாயே, அவ்வளவும் வெறும் நாடகம் என்பது அப்போதே எனக்குத் தெரியும்!

**குந்தவி :** (பரிகாசச் சிரிப்புடன்) இராஜராஜ சோழ ரின் இரத்தத்தில் பிறந்தவளல்லவா?

**இராஜராஜன் :** குந்தவி! இங்கே வா ... (அவள் அருகில் வந்ததும், அவளது கூந்தலை வாஞ்சையோடு தடவி) குந்தவி! உன் அண்ணனின் கத்தி முனைக்கும் உன் நாக்கு முனைக்கும் உள்ள கூர்மையைவிட உன் புத்திக்குத்தான் கூர்மை அதிகம் உண்டு!

**குந்தவி :** (வெடுக்கென்று வீரமாதேவியின் பக்கம் திரும்பி) ஏன், வீரமாதேவி! அண்ணனுக்கும் தங்கைக் கும் சண்டை மூட்டி விடும்படி நீதான் சக்கிரவர்த்தி களுக்கு யோசனை சொன்னாயோ?...மணமாகப்போகிறது என்றவுடனேயே அண்ணி வழக்கத்தை ஆரம்பித்து விட்டாயே!...

**இராஜேந்திரன் :** அப்பா! என் துணைவி விஷயத்தில் என் தங்கை அநாவசியமாகத் தலையிடுகிருள்!

**விமலாதித்தன் :** குந்தவி! நம் குடும்ப விவகாரங்களே நிறைய இருக்கும்போது அநாவசியமாக நீ ஏன் உன் பிறந்தக விவகாரங்களில் தலையிடுகிருய்?

**குந்தவி :** (விமலாதித்தனை நோக்கி) அப்படியானுல் நான் சண்டையடித்துக்கொள்ள உங்கள் குடும்பத்தில் எவளாவது பெண் இருக்கிருளா?

**விமலாதித்தன் :** என் அம்மா இருக்கிருள்!

[எல்லோரும் சிரிக்கிருர்கள்.

**இராஜராஜன் :** இராஜேந்திரா! இனி நீயே இராச்சியத்தைக் கவனித்துக்கொள்! நான் என் அருமை மகளோடு என் மருமகன் வீட்டுக்கே போய்விடுகிறேன்! குந்தவி! இங்கே வா! (குந்தவியின் முகத்தை வாஞ்சையுடன் நிமிர்த்தி) குந்தவி...

**குந்தவி :** (வாஞ்சையுடன்) அப்பா...

**இராஜராஜன் :** (கண்களில் அரும்பும் நீரைத் துடைத்துக்கொண்டே) குந்தவி! என் நிதானம், திடசித்தம், வாக்கு வன்மை, புத்திக் கூர்மை, அனைத்தின் பிரதிபிம்பத்தையும் என் குமாரனிடம் கூடக் காணவில்லை, உன்னிடம் கண்டேன்...பாதாளச் சிறையிலிருந்த விமலாதித்தனை விடுவிக்கச் செய்ததும், பாவலனுக்குப் பரிசு பெறச் செய்ததும், உன் அறிவின் திறம் என்பதை நான் அறிவேன்! ஆனுல் இவ்வளவு அறிவையும் எங்கிருந்தோ வந்த வேங்கிநாட்டான் கொண்டுபோய் விடுவான்...

**விமலாதித்தன் :** (பரிகாசச் சிரிப்புடன்) இப்படிப்பட்ட ஒரு வாயாடிப் பெண்ணை உங்களிடமிருந்து தூக்கிக் கொண்டு போய்விட வேண்டுமென்ருல் அதற்கு நீங்கள் ஏதாவது கூலி கொடுக்கவேண்டும்!

**இராஜராஜன் :** அதற்குத் தகுந்த கூலி இந்த உலகத்தில் என்ன உண்டு? வேண்டுமானால் என் சோழ சாம்ராஜ்யத்தையே உன் வேங்கி வம்சம் எடுத்துக் கொள்ளட்டும்.

**மேதினிராயர் :** மன்னர் பெருமானே! மங்களம் பாட வேண்டிய நிலையில் எல்லாம் மகிழ்ச்சியாய் முடிந்தன ; ஆனால் எங்கள் முடிவு?

**இராஜராஜன் :** பூங்கோதை! இவ்விருவரில் ஒற்றனை முதலில் பிடித்தவர் எவர்?

[பூங்கோதை கவிராயரைப் பார்க்கிருள்.]

**முத்துப்பல் கவிராயர் :** (மார்புதட்டி) நானேதான்!

**இராஜராஜன் :** வீரத்திற்குத்தான் காதல் உரியது. பூங்கோதை உம்மையே விரும்புவாள்.

[பூங்கோதை நாணத்துடன் புன்முறுவல் செய்கிருள்.]

**முத்துப்பல் கவிராயர் :** (மேதினிராயரை நோக்கி) உள்ளம் உடையாதீர், ஐயா! யான் உருவத்தைக் காதலித்து வெற்றி பெற்றேன். நீர் உள்ளத்தைக் காதலித்து உருகிக்கொண்டே இரும்!

**மேதினிராயர் :** இனி நான் உருகேன், ஐயா! உம் திருமணத்திற்கு நானே ஒரு வாழ்த்து மடல் தீட்டி உம்மை உருக வைக்கிறேன், பாரும்!

**இராஜராஜன் :** வாழ்த்து மடல் பெறுவது மட்டுமல்ல ; திருமண வரியாக அரசாங்கத்திற்குச் சேர வேண்டிய கண்ணாலக்காணத்தை ஒவ்வொருவரும் செலுத்தவும் நேரிடும்! (சுற்றிலும் பார்த்த வண்ணம்) என் நாடகத்தை எழுத விரும்பிய நாடக நூலாசிரியர் எங்கே...? (நாடக நூலாசிரியர் அருகில் வந்ததும் அவரை நோக்கி) இராஜராஜ சோழன் எவ்வளவு பெரிய நடிகன் என்பதை நேரில் நீர் பார்த்து விட்டீரல்லவா?

**நூலாசிரியர் :** எதையும் சக்கிரவர்த்திகள் ஒரு புதுக் கண்ணோட்டத்தோடு பார்ப்பதையே கண்டேன் !

**இராஜராஜன் :** புதுமைக் கண்ணோட்டம் இருந்தால் தான் நாட்டில் முதுமை நீங்கி இளமை முன்னேறும்... நாடக நூலாசிரியரே, இனி நீர் என் நாடகத்தை எழுதலாம். அந்த இராசராசேச்வர நாடகத்தை நம் தஞ்சைப் பெரிய கோவிலிலேயே ஒவ்வொரு வைகாசிப் பெருவிழாவிலும் நடிக்க ஏற்பாடு செய்கிறேன். அந்த நாடகம் ஆடுபவருக்கு ஆண்டாண்டு தோறும் நூற்றிருபதின்கல நெல் நிபந்தம் ஏற்படுத்தப்படும். இவ்வளவும் என் புகழைப் பரப்புவதற்காக அல்ல ! என் கொள்கைகளோடு நாடகக் கலை வளர்வதற்காக !

**மேதினிராயர் :** (விமலாதித்தனையும் குந்தவியையும் நோக்கி) வாழ்க வீரமும் காதலும் !

## திரைக்குப் பின் ஒரு குரல் :

இராஜராஜ சோழனுக்குப் பிறகு இராஜேந்திரனின் சபதம் நிறைவேறியது. அவன் பெயரால் தென்னாட்டில் கங்கை கொண்ட சோழபுரமும் சோழ கங்கம் ஏரியும் உண்டாயின. அவன் புகழ் கங்கையும் தாண்டி, கடலும் கடந்து மலேயா, ஜாவா, சுமத்திரா தீவுகளிலும் பரவி யிருந்தது. தமிழரின் கடல் வாணிபம், சீனாவரை நடந்தது...

அன்பர்களே...அது தமிழர் தலை நிமிர்ந்து நின்ற காலம்; தமிழ் நாட்டின் பொற்காலம் !



# பாடல்கள்

இயற்றியவர்: புத்தனேரி ரா. சுப்பிரமணியன்
இசையமைப்பு: எம். கே. ஆத்மநாதன்

## தொடக்கப் பாட்டு

*இராகம்—பூபாளம்*

கருமுகில் கிழித்தே கதிரவன் முளைத்தான்
இருளெனுந் திரையும் நீங்கியதே !
இரவியின் குலப்புகழ் ஓங்கியதே !

*இராகம்—பிலஹரி*

விரிகடல் கிழக்கிலும் மேற்கிலும் விளங்கத்
திருமலை வடக்கும் தெற்கிலே குமரியும்
வரையறை யாக்கி மாநிலம் காக்கும்
'தென்ன பராக்ரம மும்முடிச் சோழ'
மன்னன் தமிழக வரம்புகண் டனனே !

பாட்டுத் தொடர்

பொன்னி நாட்டு மன்னர் மன்னன்
வாகை சூடினன்—தமிழ்
அன்னை வண்ணச் சிலை யமைத்து
வாழ்த்துப் பாடினன்

*[காட்சி : 1]* **தமிழ்த் தாய் வணக்கம்**

*இராகம்-நாட்டைக் குறிஞ்சி      தாளம் - ஆதி*

அன்பும் அறமும் வளர்த்தருள் புரியும்
அமிழ்தத் தமிழ்த் தாயே

பொன்முடி யாகத் தொல்காப்பியத்தின்
புகழைப் புனைந்தாயே.

*இராகம்—கல்யாணி*

நின்செவி அணியாய்க் குண்டல கேசியின்
நேர்த்தி நிலைத்ததுவே ;
வண்கரத் தினிலே கங்கண மாக
வளையாபதி கண்டோம்.

*இராகம்—காப்பி*

எட்டுத் தொகையும் பத்துப் பாட்டும்
எழிற் சிந்தாமணியும்
கட்டழ குடைய மாலைக ளாகக்
கமழ்ந்திட வேகண் டோம்.

கோலச் சிற்றிடை தனில்மணி மேகலை
குலுங்கும் ஒலிகேட்டோம் ;
காலிற் சிலம்பொலி கருத்தைக் கவரக்
கைகுவித் தோம் அம்மா !

*இராகம்—மோகனம்*

மாந்தர்க் கெல்லாம் வாழ்க்கைத் துணையாம்
வள்ளுவன் குறளே,—நீ
ஏந்திய செங்கோல் என்பதை எண்ணி
இருநிலம் வியக்குதம்மா !

## *[காட்சி : 2] நம்பியாண்டார் நம்பிகள்*

*திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்—அங்க மாலை*

*இராகம்–குறிஞ்சி தாளம்–ரூபகம்*

தலையே ! நீ வணங்காய் !
தலை மாலை தலைக்கணிந்து
தலையாலே பலி தேரும் தலைவனைத்
தலையே நீ வணங்காய் !

இராகம்—பிருப்தி

கண்காள்! காண்மின்களோ!
கடல் நஞ்சுண்ட கண்டன்தன்னை
எண் தோள் வீசிநின்று ஆடும் பிரான்தன்னைக்
கண்காள் காண்மின்களோ!

இராகம்—மோகனம்

செவிகாள்! கேண்மின்களோ!
சிவன் எம் இறை செம்பவள
எரிபோல் மேனிப்பி ரான்திறம் எப்போதும்
செவிகாள் கேண்மின்களோ!

இராகம்—அசாவேரி

நெஞ்சே! நீ நினையாய்
நிமிரி புஞ்சடை நின்மலனை
மஞ்சாடும் மலை மங்கை மணாளனை
நெஞ்சே நீ நினையாய்!

இராகம்—ஹம்ச நாதம்

தேடிக் கண்டுகொண்டேன்!
திரு மாலொடு நான் முகனும்;
தேடித் தேடொணாத் தேவனை என்னுளே
தேடிக் கண்டு கொண்டேன்!

## நம்பியாண்டார் நம்பிகள்

### திருத்தொண்டர் திரு அந்தாதி

ஓடிடும் பஞ்சேந் திரியம் ஒடுக்கிஎன் உள்வினைகள்
வாடிடும் வண்ணம் நின்று எத்தவம் செய்தனன் வானிலும்பேரா
சூடிடும் சீர்த்திருப் பாதத்தர் தொண்டத் தொகையிலுள்ள
சேடர்தஞ் செல்வப் பெரும்புகழ் அந்தாதி செப்பிடவே

இராகம்—சாருகேசி    தாளம்—ஏகம்

விமலாதித்தன் :

சிரித்த முகம்—அழகு - விரிந்த முகம்
தேயாத முழுநிலவே ! ஓயாத ஆசைகாட்டிச் (சிரி)

குந்தவை :

சிரித்த முகம்—அழகு - விரித்த முகம்
தேயாத நிலவெனக்கும் ஓயாத ஒளிகொடுக்கும் (சிரி)

விமலாதித்தன் :

ஓங்கும் ஆசைக் கன்னி— இன்பம்
ஊறும் அழகுப் பொன்னி

குந்தவை :

வேங்கி நாட்டுச் சிங்கம்—குண
மேன்மை யுள்ள தங்கம்

விமலாதித்தன் :

கட்டவிழ்த்த நறுமலரே !
கனிமொழியே, திருமகளே !

குந்தவை :

ஒட்டுமாஞ் செடியெனவே
ஒன்றாக வாழ்ந்திடுவோம்—(சிரி)

இராகம்—மணிரங்கு

விமலா :
குந்தவை } காதலெனும் சக்தியினைக்
காலமெதும் வெல்லாது.

காதலெனும் சக்தியின்றேல்
காசினியே யில்லாது !

கோதிலா வாழ்வு தரும்
காதலினை நம்பிடுவோம் ;
காதலே தெய்வமெனக்
கவிபாடிக் கும்பிடுவோம்.

*[காட்சி : 12]* *பின்னணிப் பாடல்*

*இராகம்—மலையமாருதம்*

ஆலயம் எழுந்தது !
அற்புதம் நிகழ்ந்தது !
அறநெறி உயர்ந்ததுவே !
நீலவான் கொஞ்சியே
நிமிர்ந்தது கோபுரம் !
நிலைத்தது கலைப்புகழே !

*பாட்டுத் தொடர்—தாளம் ஆதி*

நிலைபெற்ற கலைக்கோயில் வாழ்க !—அதன்
நிழல்விழாக் கோபுர அழகென்றும் வாழ்க !
உலகத்தைக் கவர்கின்ற சின்னம்—அதன்
உச்சியைப் போலவே உயர்ந்திடும் எண்ணம் (நிலை)

தருமத்தைக் காக்கின்ற கோயில்—நம்
தஞ்சைக்குப் புகழ்தரும் தனிப்பெருங் கோயில்
பெருவுடைப் பெருமானின் கோயில்—சோழப்
பெருவேந்தன் ராஜராஜன்கண்ட கோயில் (நிலை)

சிந்தனை தந்திடும் நந்தி—பல
சிற்பங்கள் காவியம் செப்பிடும் விந்தை
குந்தவைப் பிராட்டியின் ஆசை—கலைக்
கோயிலாய்த் தமிழரின் குலப்புகழ் பேசும் (நிலை)

## கருவூர்த் தேவர் திருவிசைப்பா

*இராகம்—பந்துவராளி*

பன்னெடுங்காலம் பணிசெய்து பழையோர்
தாம்பலர் ஏம்பலித்திருக்க
என்னெடுங்கோயில் நெஞ்சு வீற்றிருந்த
எளிமையை என்றும்நான் மறக்கேன்

*இராகம்—தர்பார்*

மின்னெடும் புருவத்து இளமயிலனையார்
விலங்கல் செய் நாடக சாலை
இன்னடம் பயிலும் இஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சுரத் திவர்க்கே.

**[காட்சி : 16]** **குந்தவி நடனப் பாடல்**

*திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்*

*இராகம்—சாரங்கா தாளம்—ஆதி*

முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெம்மான் அவனுக்கே பிச்சி யானாள் !

*இராகம்—காம்போதி*

அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தை
தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே !

[காட்சி : 22] முத்துப்பல் கவிராயர் :

வெண்பா

எங்குகிறேன் பூங்கோதாய் என்னைவிட்டு நீயெங்கும்
நீங்கிடவே சற்றும் நினையாதே !—

மேதினி ராயர் :

—வீங்கியதோர்

மேருமலை இங்கிருக்க வெட்டவெளிப் பொட்டலினைச்
சேருவையோ செங்கரும்பே செப்பு !

[காட்சி : 30] குந்தவ்வையார்

['சிறையாரும் மடக்கிளியே' எனக் காட்சியில் காணப்படும் பாடலுக்குப் பதில் கீழ்க்காணும் பாடலைப் பாடலாம்.]

திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்—திருக்குறுந்தொகை

இராகம்-காமவர்த்தினி தாளம் ஆதி

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்குஇள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே ;
ஈசன் எந்தை இணையடி நீழலே.

[காட்சி : 33] திருமண வாழ்த்தொலி

திருக்குறள்

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.

பெண்ணிற் பெருந்தக்க யாவுள ; கற்பென்னும்
திண்மை உண்டாகப் பெறின்.

மங்கலம் என்ப மனைமாட்சி ; மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு.

## அரசவை வாழ்த்துப் பாடல்

*இராகம்—ஹம்சாநந்தி      தாளம்—ஆதி*

வாழ்க வாழ்கவே வாழ்கவே !
வள நாடாளும் மகிப நீடுழி !— (வாழ்க)
மேழி சிறந்து விளங்கு முறையினுல்
மேன்மை கண்ட சோழமண்ட லாதிப ! (வாழ்க)

### ஒரு புலவர்

*இராகம்—சங்கராபரணம்*

சங்கெறிந்தாடும் தரங்கமும் தாழையும்
செங்கதிர் தோன்றச் சிரித்திடு முளரியும்
தெங்கொடு பலாகதலி செந்நெலும் கன்னலும்
பொங்கு புனல் நாட ! நின் செங்கோல் செழிக்கவே
பொன்னிவளநாட ! நின் செங்கோல் செழிக்கவே !

*இராகம்—ஆனந்தபைரவி*

கொண்டலாடும் மணிக்கூட கோபுரமும் ; தேன்
வண்டாடு சோலையும் வாவியும் பொன்னியும்
கண்டோர் வியக்கும் நற்கலைகளும் சூழ் சோழ
மண்டலத் தலைவ ! நின் மாண்புகழ் வாழிய !
மண்கொண்ட தலைவ ! நின் மாண்புகழ் வாழிய !

### மற்ருெரு புலவர்

சோற்றுக்கும் குறைவில்லை;
சொகுசான காவேரி
ஆற்றுக்கும் குறைவில்லை;
அழகான சோலைவளர்
காற்றுக்கும் குறைவில்லை;
கைகூப்பி நன்றியுடன்
போற்றுகிறேன் மன்னு! நின்
புகழ் வாழி வாழியவே!

### விமலாதித்தன்

இராகம்—கௌளை

மாசில்லாத் தமிழ்த்தலைவா! வற்ருத
பொன்னிவளம் மலிந்த செல்வா!
வீசுபுகழ் செங்கோலின் முடியரசே!
குடியரசே! வேந்தர் வேந்தே!
பாசமுடன் தமிழகத்தை ஒன்ருக்கிப்
பாராளும் திறனைப் பாட
ஆசையினுல் முந்துகிறேன் குந்தவியின்
தந்தையென அமைந்த கோவே!

இராகம்—ஆரபி

வெல்லுதற்கு மறவாத வீரவாள்
வேந்தே! கேள் வேற்று நாட்டு
மல்லிகையும் மணம் நல்கும் மாண்பதனை
மறவாத மன்னர் மன்னு!
கல்லெல்லாம் கவிசொல்லக் கலைக்கோயில்
கண்டபுகழ் கவிதை பாடும்
வல்லமையைத் தாவென்று சோனுட்டுத்
தமிழ்மண்ணை வணங்கினேனே.



# சுவையான புத்தகங்கள்

## சிந்தனையாளர் வரிசை

[ஒவ்வொரு சிந்தனையாளரின் வரலாறும், நூற் சுருக்கங்களும் சிந்தனைகளும், சித்திரங்களும் அடங்கிய நூல் வரிசை ; ஒவ்வொன்றும் விலை ரூ. 1-4-0]

1. **டார்வின்** (ஜெகசிற்பியன்)
2. **பிளேட்டோ** (அரு. ராமநாதன்)
3. **கார்ல் மார்க்ஸ்** (ரா. தணலன்)
4. **ரூஸோ** (கோமேதகவேலு)
5. **பெஞ்சமின் பிராங்ளின்** (அரு. ராமநாதன்)
9. **அரிஸ்டாடில்** (கிருஷ்ணன் பாலா)

## ஆராய்ச்சி :

1. **ரேடியோ நாடகம் எழுதுவது எப்படி?**
2. **நீங்கள் உயரமாக வளர்வது எப்படி?**
3. **இலாகிரிப் பொருள்களா? எமதூதர்களா?**

ஒவ்வொன்றும் விலை. ரூ. 1-8-0

4. **புதுமணத் தம்பதிகளுக்கு** விலை ரூ. 2-4-0

## பல்வகை நாவல்கள் :

1. **நாநாவின் தாய்** (எமிலிஜோலாவின் நாவல்) ரூ. 4-0-0
2. **எதிர்வீட்டு ஜன்னல்** (காதல் நாவல்) ரூ. 1-0-0
3. **சிலந்திக் கூடு** (பாலர் நாவல்) ரூ. 1-0-0
4. **ஒற்றைக்கண்ணன்** (பாலர் நாவல்) ரூ. 1-0-0
5. **ஆசை வெள்ளம்** ('சுகி'யின் காதல் நாவல்)
6. **உறவு முள்** (ஜெகசிற்பியன் நாவல்)

ஒவ்வொன்றும் ரூ. 0-12-0

## அரு. ராமநாதன் கதைகள்

1. **கதாநாயகி**
2. **அம்பிகாபதி**
3. **பழையனூர் நீலி**

(ஒவ்வொன்றும் ரூ. 1-4-0)

## பொன்மொழிகள் வரிசை

1. **ஔவையார்**
2. **விவேகசிந்தாமணி**
3. **பைபிள்**
4. **குர்ஆன்**
5. **பஞ்சதந்திரம்**
6. **புத்தர்**

(ஒவ்வொன்றும் 0-8-0)

பிரேமா பிரசுரம் : : சென்னை-24